உ

குருவே துணை.

# பழனித்திருவாயிரம்.



இஃது

மஹான் - வண்ணச்சரபம்

திருப்புகழ்ச்சுவாமிகள், முருகதாசசுவாமிகள்

எனவழங்கும்,

## ஸ்ரீமத் - தண்டபாணிசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளி




ஷை சுவாமிகள் குமாரர்

தி. மு. செந்திநாயகம்பிள்ளை யவர்களால்





உடுமலைப்பேட்டை

K. சண்முகவேலுபிள்ளையவர்கள்

பெரியசாமிநாடாரவர்கள்

இவர்கள் பொருளுதவிகொண்டு



உடுமலைப்பேட்டை

அ. கிருஷ்ணசாமிபிள்ளையவர்களது

கிருஷ்ணன் பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.



முதற்பதிப்பு.

இராக்ஷச ௵ சித்திரை ௴

1915.

உ

குருவேதுணை.

# முகவுரை

பழனித்திருவாயிரம்,, என்னும் இந்நூற்பெயரானதுஎழாம்வேற்றுமைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய்ப் பழனித்தலத்தின்கண்விளங்கும், முருகக் கடவுளைக்குறிப்பிட்ட ஆயிரங்கவிகளைக்கொண்ட நூலென விரியும்.

இந்நூலாசிரியராவார் எழுபத்தாறுவருடங்கட்கு முன்புதென்பாண்டிநாட்டுத்திருநெல்வேலியிற்சைவவேளாண்குலத்திற் செந்திநாயகம்பிள்ளையென்பவரது மாதவப்புதல்வராயவதரித் திளமைப்பருவத்திலேயேகந்தக்கடவுள் கருணையாற் றடுத்தாண்டு சமரசஞானநுபூதி தந்தருளப்பெற்றுத் திருப்புகழ்ச்சுவாமிகள், முருகதாசசுவாமிகள், தண்டபாணிச்சுவாமிகள், என மூன்று பெயருடன் எண்ணில்லாததமிழ்ப்பிரபந்தங்கள் சண்மதசமயாதீதபரமாகப்பாடியருளித் தமிழ்நாடுமுழுதும்புகழ்நீடுமாறு முருகக்கடவுளின்அமிசமாய்விளங்கினர்.

இவராலியற்றப்பட்டநூல்கள், தில்லைத்திருவாயிரம், திருவரங்கத்திருவாயிரம், தெய்வத்திருவாயிரம், சகத்திரதீபம், திருச்செந்திற்பதிற்றுப்பிரபந்தம், புலவர்புராணம, வருக்கக்குறள், சிவனேகபாதத்தந்தாதி,அரியேகபாதத்தந்தாதி, கௌமாரவேகத்தாளிதழகலந்தாதி, மாதைப்புராணம், வேலலங்காரம், மயிலலங்காரம், தமிழலங்காரம், முதலொலியலந்தாதி, பேரொலியலந்தாதி, சதகவுந்தி, சமயசூத்திரம், முதலியபலவாம்.

இவர்மனோவைராகத்தாற் றாமியற்றியபலநூல்களைப்பலதடவைகளிற் கடல் நதிகள் கால்வாய்கள் கிணறுகளிலும், அக்கினியிலும் கிழித்தெறிந்துமீண்டுந்தொகைபடப்பாடுந்தன்மையினரென்பது "ஓதநீரினுங்கனலினுங் கவிப்பெருக்குய்த்திட் - டிதல்வேண்டுமென் றருட்பெருங்கடலிடத்திரந்து - போதவாடுறுந்திருப்புகழ்ப்புலவன்" என்றும், " இட்டபாடலுமளவிலவிகத் தினில்விளக்கப் - பட்டபாடலுமங்ஙனமாகும்" என்றும்இவர்தமதுசரித்திராநுபூதிவிளக்கநூலாகிய குருபரதத்துவகாவியத்திற்றம்மைத்தாமேகூறியிருத்தலால் விளங்கும்.

அன்றியும்,இவர்பலதலங்கட்குஞ்சென்றுபலபிரபந்தங்கள்பாடினும் இந்தப்பழனித்தலத்தின்மீதும், இங்கெழுந்தருளிவிளங்கும் ஸ்ரீதண்டபாணிமூர்த்தியின்மீதும், அதிகமானவிருப்பமுடையவரென்பதும்,

"எவ்வகை யநியாயஞ்செய்திடினுமென் னிதயத் தென்றுந்
தெவ்வமும் வேலான்கொண்ட திருவுரு வனந்தத்துள்ளு
மெவ்வமில் பழனிக் குன்றிலிலங்குரு மேலாமென்னு
மவ்வழி யான மட்டு மகன்றிட லரிதாம்" என்றும்

"என்னுட லாதி மூன்று மேற்றவன் பழனிக்குன்றின்
மன்னுசற் குருவே யென்னை மறுக்கருஞ்சாதம்"

என்றும், மேற்குறித்தகுருபாதத்துவநூலிற் கூறியமையால் நன்கு விளங்குகின்றது.

இந்நூலின் அளவாகிய ஆயிரங்கவிகளை வெண்பாமாலை முதல் வகுப்பீறான பதினாறு வகையாகப் பிரித் தியற்றியுள்ளார். இதனையியற்றி இருபத்தெட்டு வருடங்களாயின. இதனுட்பகுதிப் பிரபந்தங்களுள், யமகவந்தாதி, திரிபுமஞ்சரி, என்னுமிரண்டும் கலம்பகத்தில் மடக்குமுதலியனவும் சித்திர கவிகளாதலாற் பொருள்விளங்குதல் சிறிது கடினமாயிருக்கும், யமகவந்தாதியின் ஒன்றுமுதல்றேழாவது, ஏகபாதச் செய்யுளுக்கு மாத்திரம் சுவாமிகளே விளக்கமானவுரை யெழுதியுள்ளார்.

சிலமெய்யன்பர்களிடத்து, ஸ்ரீதண்டபாணிக்கடவுள் இவருடையவடிவத்தோடு சொற்பனங்களிலும், சாக்கிரத்திலும்விளங்கிப் பலவிளையாடலியற்றியதும் பின் அவர்கள் சுவாமிகளைக்கண்டு சொல்லிக்களித்ததும் கீழ்க்கண்ட கவிகளால் அறியப்படுகிறது.

"காரைநகர்ப் பார்ப்பார்தந் தெருவிலொருயனைமுகப்பிற் கறைவெண்டிங்கட்
சீரைமிகழ்முழுநீற்றுக் கோலமொடங்கமுதுண்பான் சிறிதுநேரந்
தாரைநெடுவேலானை நினைத்திருந்தேனடுத்தயனை தன்னிலன்னோன்
பேரைமிகப்பகாருண கிரிநாதன் வகுப்பிலொலி பிறங்கிற்றம்மா.

கேட்டலுமோர் சிறுவனுக்கோர் பெரியனுவல்பாடமெனக் கிளர்ந்ததன்னோர்
மாட்டணுகிப்பிச்சிறுவற் கிதுபயிற்றல் வருத்தமென்றேன் மகிழ்ந்தவ்வல்லோன்
பாட்டறைதனிறுத்தியென்னை யழைத்தருகிலிருக்கவைத்துன்பதியாதென்றான்
றேட்டணித்தண் குவளைமலிவயல்சூழ்நெல் வேலியெனச்சொன்னேனன்றே.

சொல்லலுமப்பதிமுருகதாசனைநீயறிவாயோ தொந்த முண்டோ
நல்லசுகந்தானோவிந் நாளிலெங்குற்றுள்ளானோ நவிறியென்றா
னல்லல்வினையாலிரக்கு மடியேனைத்தானவண்ண மறைவாரொன்றே
னெல்லறிஞனுதமந்த வேதியன்றன்மனத்தடங்கா வுவகை பூத்தான்.

அட்டாவ தானியென்றும் வாலசுப்பிரமணியப்பே ரமைந்தோனென்று
நட்டோருக்கினியனென்று நானவனை யறிந்துசில நாளங்குற்றேன்
றட்டாதகருணையுறு மவன்றாயுந்தந்தையுநற் றமருமென்னைத்
தொட்டாடலொழிந்த மற்றவிதத்தின் மிகவுபசரித்துச்சூழ்ந்தார்மன்னோ.

அவனேனோர்காலென் றிளைஞன் கழிந்தவொருபனவனென் பா லணுகியந்தத்
தவவேடமேவதியனை யெங்குவிட்டாயெனக்கேட்டான் றமைய னங்கோ
வெவனியாதென் றறியேனே யெனச்சொன்னே ஞசியமே னென்றான் செவ்வே
ளிவன்மாட்டேதோவிளையாட்டிசைத்துளனென் றோர்ந்துகையயம்பென்றேனே

குடைநடங்காணுறக்குன்றக் குடிகுறித்துச் செலும்வழியிற்கோதில்சில
முடையொருபார்ப்பனத்தலைசி புடனிலைக்கண்டவளை மிகவுபசரித்துத்
தடையறவின் றென்மனையிற்பிச்சைகொள்ளவேண்டுமெனச் சாற்றியன்னேன்
விடைதரப்பெற்றொருமூவர் களுமாகித் திருப்பிவரும்வேலையுன்னே.

அவற்குளன கொண்டுசிலதூரமுந்தக் கண்டுமெல்லவடிகடாங்கு
மிவற்றையவன்றொடத்தகுங்கொ லெனவினவித்தன் சிடமனைனுஞ்சொற்கேட்டுத்
தவத்தினுக்காமந்திரங்கள் சிலகூறவுரைந்துகொண்டென் றன்வீட்டுய்ப்பா
னுவப்புடனீ யொப்பமொழும் துணைவினுக்காவனவிழைந்தங் கோரூர்க்கேகி.

எய்தியவையொடு வந்தென்மனையிடைவே றொருதவன்வந் திருப்பக்கண்டேன்
செய்தியவன் றன்னையெனத் தெரியவந்தேனெனச் சொன்னான்செப்பலியாவு
மெய்திகழுமவு கொலோகனவுகொலோவெனக்கேட்டேன் மெய்யேயென்றான்
வைதிகர்சிற்சிலர்சாட்சி யுடனியானன்றெனத் தெரித்தேன் மாழ்கிச்சோர்ந்து.

கெட்டேனென் றழு தெழுந்தானவனை யெண்ணில்பலர்கூடிக் கேட்டின்புற்றார்
துட்டேமெய்த் தெய்வமெனச்சுழல் வேனைச்சிடனெனச் சொன்னாய் கொல்லோ
வட்டேயும்பொழிற் குன்றக்குடியானே யெனப்பதிகம்வரைந்தேன் சேய்தன்
கட்டேய்ந்தமொழி பிழையாதொருதவனை யாங்கணுப்பற் கண்டாரின்றே.

அத்தவனுந்தவன்றானே குகன்றானே வுள்ளதிரு வருட்கேதோன்று
மித்தனை தூரம்பகரு மியானும்போய்ச் சேவித்தேனின்றென்றான்மற்
றெத்தகவோர் மனிதவடிவாகிவரும் தெய்வத்தை யிறைஞ்சியுய்வார்
மெய்த்தவமத்தனையந்த வேதியன்பாற் றேய்ந்ததொரு வியப்பேயாயால்.

மற்றுமிருவேதியர்வெவ் வேறிடத்தி லெனைக்கண்ட வாற்றைப்பின்னு
னூற்றுரையாடினரவர்க்கு மவ்வாறே சொலிப்பிழைத்தே னுலகத்துள்ளார்
முற்றுமிகழ்தருமாறுஞ் செயுங்குகனென்வடிவொடுபோய் மோசமாதி
சிற்றுணர்வோர் பாற்புரிந்தென் றனைவருத்தாநன்மையெண்ணித்தேனித்தேனே.

கங்குலிற்சில் கனவினிடையெனைக்கண்டார்பலரிவற்றாற் கடையனேனைக்
குங்குமக்குன்றனையகுகனாண்டுகொண்டானெனத் தெளிந்துகொண்டேன்”

என்று குருபரதத்துவம் குன்றக்குடிச் சருக்கத்திற் சொல்லியிருப்பதன்றியும், ஷை 'பழனிச்சருக்கத்தில்,

“எடுத்தகைத் தண்டொன்றுள்ளா னென்றும்வாழ் பழனிக்குன்றை
யடுத்தவூர்களிலொன்றும்வே லாயுதம்பாளையத்திற்
கடுத்தமில்கருப்பவேலுக் கவண்டனென்றொருவனன்னான்
விடுத்திடாத்தநமத்தோடு மெய்த்தவமுடையானம்மா.

அன்னவனென்னெனக்கானு முனமவன் கனவிற்செவ்வே
னென்னதீகோலத் தோடுற் றிலங்கினன் சிலபோதன்றேன்
முன்னவிர்ந்திடலு மென்னை முழுவலிக் குகனென்றெண்ணித்
தன்னதுகுறைகளெல்லாந் தீர்த்திடச்சாற்றுகின்றான்

ஐயகான்முருகனல்லே னவனடியவர்தம்பூந்தாட்
செய்யதூள்சுமக்குஞ் சென்னிச் சிறுவனென்றுறுத்திச்சொன்னேன்
வையகத்துருவாவந்தும் வஞ்சகமலிந்ததாமிப்
பொய்யறைகின்ற யென்றே புகல்கின்றான் பொல்லேனந்த

முருகனையெள்ளுமாறு மொழிகிலானனவினனங்
கொருநினைத்துற்றதாயு முரைக்கின்ற னுணர்கின்றில்லே
னருகில்வாழுறவினோர்க்கு மந்திரம் பயிற்றுகின்றான்
றிருவருட்குகன் கூத்தென்னச் சிந்தைசெய்திருக்கின்றேனே"

என்று கூறியிருப்பதால் நன்கு புலப்படுகின்றது.

இத்தகைய மேன்மைகளமைந்த வெமது சுவாமிகள் பதினேழுவருடங்கட்குமுன், நடுநாட்டுத் திருவாமாத்தூர்த் தலத்திற் றிருமடாலயமமைத்து ஞானசமாதிகொண்டருளினர், அவ்விடத்தில் ஆலயமமைத்து ஸ்ரீ தண்டபாணிமூர்த்திப்பிரதிட்டையியற்றி நித்தியநைமித்திகாராதனைகள் குறைவின்றி யடியார்களால் நடத்தப்பட்டு வருகின்றன.

இந்தப்பழனித்திருவாயிரநூலை, உள்ளன்பினோடும் ஊக்கத்தோடும் பொருட்செலவுசெய்து அச்சிட்டுலகிற் பிரசித்தப்படுத்தியவர்களான கோயமுத்தூர்ஜில்லா, உடுமலைப்பேட்டை மகா-ள-ள-ஸ்ரீ K. சண்முகவேலுப்பிள்ளையவர்களும், ஷை யூர் பருத்திவிதை வியாபாரம் மகா-ள-ள-ஸ்ரீ பெரியசாமிநாடாரவர்களும் செய்தநன்றிக்குக்கைம்மாறு ஸ்ரீதண்டபாணிக்கடவுளே அருள்செய்வரென்பது திண்ணம். சுபம் சுபம் சுபம்!

வெண்பா.

தண்டபாணிப்பேர் தவமுருகதாசப்பேர்
விண்டதிருப்புகழ்ச்சா மித்திருப்பேர் — கொண்டதமிழ்
வண்ணச்சரபகுரு வண்கமலத்தாட்டுணையென்
னெண்ணத்தி னின்றருள்கவே.

இங்ஙனம்,

| ஆனந்த ஞு | இந்நூலாசிரியசுவாமிகளின் |
|---|---|
| மாசி மீ | மாணாக்கனும் குமாரனுமான |
| திருவாமாத்தூர் | தி. மு. செந்திநாயகம்பிள்ளை. |

குருபாதமேகதி.

குருவேதுணை.

## யமகவந்தாதியின்

## ௬௭ - வது ஏகபாதச் செய்யுட்பொருள்.

மகவானையாண்டவயலூரநாதிமதலையன்றே
மகவானையாண்டவயலூரநாதிமதலையன்றே
மகவானையாண்டவயலூரநாதிமதலையன்றே
மகவானையாண்டவயலூரநாதிமதலையன்றே.

(இ-ள்) மக - இளமையின், வான் - பெருமையும், ஐயாண்ட - ஐந்துவயதையுமுடைய, ஐ - சுவாமி, அல் - மதிள்போலும், ஊர - உரத்தினைப்பெற்ற, நாதி - நாததத்துவசம்பந்தன், மது - தேனாகிய, அலையன் - சமுத்திரத்தினது, தேம் - இனிமைவாய்ந்த, அக - திருவுள்ளமுற்ற, ஆனை - தெய்வயானையின், ஆண் - நாயகன், தவை - கேட்டைபோலும், அல் - அஞ்ஞானவிருள், ஊரன் - இவரப்படாதவன், ஆதி - முதன்மையான, மத - சமயத்தில், லயன் - ஐக்கியப்படுகின்றவன், தே - தெய்வத்தன்மையுள்ள, மகவான் - மகாகாயத்திலுற்ற, அயாண்ட - பிரமாண்டங்களின், அயல், சார்பில், ஊர் - சலனத்தோடுற்ற, அநாதி - காலாதீத, ம - மாயையை, தலை - இடமாகக்கொண்டபொருள், அன்றே - அல்லனே, மகவானை - இந்திரனை, ஆண்ட - ஆட்கொண்ட, வயலூரன் - பழனியாண்டவன், ஆதி - சிவபெருமானுடைய, மதலை - புத்திரன். எ-று. அன்றே, அசைநிலை.

(கருத்துரை) இளமையிற் பெருமைபெற் றைந்துவயதுப்பருவமாய் விளங்குகின்ற சுவாமியும், மதிள்போன்ற நாததத்துவசம்பந்தனும், தேன் சமுத்திரம் போன்ற திருவுள்ளமுற்ற தெய்வயானை நாயகனும், கெடுதலைச் செய்யு மஞ்ஞான விருளைச் சுமக்காதவனு முதன்மையான சமயத்திலுடன் பாடுள்ளவனுமான வொருவன் பரமாகாயத்திற்கிடக்கின்ற பிரமாண்டங்களைச் சார்ந்தசலனசொரூபமாயையை யிடமாகக்கொண்டவ னல்லனேயல்லன், இந்திரனையாண்டு கொண்ட பழனியூரனுஞ் சிவபெருமான் புத்திரனுமாவான் என்பதாம்.

ஞாயம் - முதிர்ந்தபருவத்தி லடையத்தக்கஞானத்தை யிளமையிற் சுயமாயடைந் தமையாலதனிற் பெருமைபெற்றோனென்றும், சூரசங்காரத்தின்போதுஞ் சமணரைவென்றபோதுமுற்றபருவமாதலி னைந்துவயதென்றும், மற்றெல்லாவற்றையுங் கவர்ந்துநின்ற வியாபகத்தா னாததத்துவ மதிள் போலுமென்றும், வாய்ச்சொல்லினு மதிநயம் பொருந்தினமைப்பற்றித் தேன் சமுத்திரம்போன்ற திருவுள்ளமென்றுங், தன்னைச்சார்ந்தோருஞ் ஞானத்தையுங்கெடுக்கின்றவனாதலி னதனைச் சுமக்காதவனென்றும், எச்சமயத்தோராலு மிகழப்படாதகருத்துவமே தனதுதொழிலாதலின் முதற்சமயத்

துடன்பாடென்றும், பிரவஞ்சத்தோற்றமேமாயைக் காரியமாதலினதைச் சார்ந்த சலனித்தமென்றும், போகாதிபனென விந்திரனையாண்ட தன்மையதற்காதாரமான மாயைக்கதீதத்தை விளக்குமென்றும், சிவபெருமானே நெற்றிக்கண்ணாற்பெற்ற தன்மையுடையனாகுமென்று மறியக்கடவர்.

(இலக்கணம்) முதல் வரியினு மிரண்டாம் வரியினுஞ் ஐகாரம்போலியாய் நின்றது. உர, என்னும்பதத்துள்ள வுகரம், நீட்டல்விகாரம்பெற்றது. உடைமைபற்றி நீட்டல் விதியெனக் கொள்வாருமுளர். அதன், இதன், ஒன்றன், என்னும் பதங்களைப்படி அலையினென்பது அலையனென நின்றது. அலையெனச்சமுத்திரத்தைச்சொன்னது பின்மொழித்தொகை. மூன்றும்வரியிற் போலியைகாரமாநின்றது. ஊர்தல் சலனப்பொருடருதலும்; தலையென்னும், முன்னிலைவிளிபோலும் பெண்பாற்கிளவி, அஃறிணைக்கும் வருமாறும் அஃது மதலைத்தன்மையாற் பொருந்தியவாறு முணரும்புலவரு மிருப்பாரென நம்புகின்றும். அல்லூர், அலூர், ஆனதுபோலுமோசைமெலிவு சாதாரணமான செய்யுள் வழக்காதலின் விரித்தெழுதாது விட்டனம்.

---

# சாத்துகவிகள்.

சென்னை சித்தாந்த சரபம் அஷ்டாவதானம்

## பூவை - கலியாணசுந்தர முதலியாரவர்களியற்றியது.

அறுசீர்விருத்தம்.

வண்ணக்க விச்சாப மாமபரவருணகிரி மாதவத்துத்
தண்ணளியினிற்சிறந்த முருகதாசச்சாமி சதுரிற்சொற்ற
பண்ணளிசூழ்நற்பழனித் திருவாயிரப்பனுவற் பண்பைச்சூழ்தற்
கெண்ணியவாயிரநாவையுடையோனே யொருவாறிங்கேற்றேனம்மா.

---

இந்நூலாசிரிய சுவாமிகள் மாணாக்கர்
திருநெல்வேலிஜில்லா கழுகுமலை

## இராமகிட்டிணப்பிள்ளையவர்களியற்றியது.

வெண்பா.

சித்தார்பழனித் திருவாயிரத்தொடைபல்
வித்தாரப்பாடல் விரித்தபுகழ்ச் – சத்தாதி
யாகநிகழெங்கோ னணித்தண்டேந் தோர்கடவுள்
பாகநெறியாவரளப் பார்.

---

இந்நூலாசிரிய சுவாமிகள் மாணாக்கர்
திருநெல்வேலி ஜில்லா கோபால சமுத்திரம்
சண்முகதாசப்பிள்ளையவர்களியற்றியன.



சந்தக்கவிகள்.

தந்தன தத்ததன - தனதானன.

வண்டமுதுற்றமலர் விண்டுதேன்மிக்கொழுகி
வந்துகால்பெற்றுவளர் - பொழிலூடுபோய்
வண்கையான்முக்கனிகள் சிந்தியாடிப்பழகு
மந்திசூழ்நற்பழனி - மலைமீதுவாழ்
தண்டபாணிக்கடவு டன்னையேயாவிட்டழகு
தங்குபாதத்திலொரு - பதுநூறுசேர்
சந்தபேசக்கவிதை நன்குபாடிப்புலவர்
சங்கநாடிப்புகழ - கனிசூடின
னண்டரூரொத்தகழை மிஞ்சுகானப்பதியி
லன்றுதோணிப்பல்விழு - முனம்வேலுளா
னன்பனைப்முத்தமிழ றைந்துசீலத்தொழுக
லங்கநூல்விற்பனமெ - யருணீதிசேர்
சண்டன்வேதத்தன்மத னஞ்சகோரத்தவசு
சங்கலாடைப்பொலிவு - முழுநீறுமேதர்
தண்கௌமாரச்சமய மொன்றும்வாழ்வுற்றிலகு
தண்டபாணிப்பெயர்கொள் - குருநாதனே.  (க)

தனத்தன தாந்ததனத் - தனன தனன.

அறத்தொழின் மாந்தர்படித் - துயும்வாழ்வினதே
யருட்பொலிவாந்தவருய்த் - துணர்பீடுளதே
விறற்கவிவேந்தர்தமக் - கிருசீர்விழியே
வெளுத்தவிர்வான்கடலுற் - றெழுமாரமுதே
மறக்குலமான்கனப்- பிடிமாதுடன்வேண்
மகத்துவமோர்ந்துமதித் - திசைபேசிடுநூ
றிறற்றடியேந்துகரத் - தொடுமேவிடுமோர்
திருப்புகழோன்பழனித் - திருவாயிரமே.  (உ)

இந்நூலாசிரிய சுவாமிகளின் அன்பர்
திருநெல்வேலி ஜில்லா - பாஞூர்
மு. பார்த்தசாரதி நாயுடு அவர்களியற்றியது.



தந்ததானதன தன்னதய்யதன — தனதானா.

பந்தபாசமறு செம்மைமெய்யர்தவ
மென்றுநீள்பழனி யண்ணல்வள்ளிமகிழ்
பைங்கலாபன்மிகு மொண்மையுள்ளதிரள் புயமீதே
பண்குலாவுதொடை யென்னமெவளவுதமிழ்
கொண்டோராயிரந லெண்ணின்மல்குகவி
பண்புகூருவகை மன்னிமொல்லைவனை தரலானன்
முந்தவானுலக மன்னனல்குமலர்
நன்றுசேரருணை நண்ணிநல்கவல
மொய்ம்புளோ னிரைகடன்னு மெவ்வமற விழைவோனே
முண்டகாசனனை முன்னரைதிலருள்
விண்டுவாழ்வினையு மெண்ணவில்லதிழி
மொந்தைபோலநினை வன்மைகொள்ளுமுயர் விரகோனே
மந்தமாருதமொர் யன்னவையமென
வுந்தும்வேளமர்செ யின்னல்வெல்புனிதன்
வன்புறுதவியல் பன்னுதெய்வமுனி நிகர்வோனே
மஞ்சுலாவொர்கிரி தன்னின்மெய்யுருளு
பங்கவீனமில தெண்ணமெள்ளளவு
மங்குறுமலினி தங்கனுய்யுமொரு செயலோனே
சந்தமாரிபொழி செம்மல்வள்ளல்சர
பன்குமாரமத வுண்மையெப்தியயி
றங்குபூசைபுரி தன்மைமெஃகுமுயர் பெரியோனே
தஞ்சமாகவிழை யென்னதுள்ளமுறை
சொந்தன்வேணுவன மென்னுநெல்லைவரு
தண்டபாணிநிறை வண்மைவெள்ளமுள குரவோனே. (க)

## வேறு.

கழனித் திருநெல்லைக் காமர்தண்டபாணி
தழனித் தியகுகற்குச்சாற்றும் - பழனித்
திருவாயிரந்தலையாத் தேர்பெறுவாய்நெஞ்சே
தெருவாயிரந் தலையாச் சீர். (உ)

இந்நூலாசிரிய சுவாமிகளின்

மாணாக்கரும் குமாரருமான

## தி. மு. செந்தினாயகம்பிள்ளையவர்கள்

இயற்றியன.



வெண்பா.

மேலாம் பழனிமலை மேவுதண்ட பாணியன்றன்
பாலாம் பலநலமும் பாடிவைத்த - நூலாம்
பழனித் திருவா யிரமன்பர் பாடித்
தொழனித் தியமெய்ச் சுகம். (க)

### வேறு.

கட்டளைக்கலித்துறை.

காலொன்றுமேலெடுத் தாடும்பிரானுதற் கண்டருசேய்
மாலொன்று நெஞ்சின ரெய்தாப்பழனி மலையின்மிசை
வேலொன்று தண்டமொன் றேந்திநிற்பான்றன் விருப்பமுறு
நூலொன்று நற்பழ னித்திருவாயிர நோன்மையதே. (உ)

### வேறு.

எழுசீர்விருத்தங்கள்.

அண்டரும்பரவும் பழனியங்கிரிமீ தயிலணிந்தாடுமெம்மமான்
றொண்டராமனிதர் தனதுமெய்யருட்சிற்சொருபமோர்ந்திடலரிதெனவே
மண்டலமதனிற் றண்டுகல்லாடை வளங்கொள்வெண் கோவணமுநீ
றொண்டருமக்க மாலைபாதுகைகீ ளுறத்திருவுருவமாவந்து. (ங)

தண்டபாணியன்சொற்றிருப்புகழ்க்காரன்றானெனுமிரண்டுமெய்ப்பேரு
மெண்டருமுருக தாசனென்றொருவர் றேய்ந்ததோர் பேருமேற்றருளி
வண்டமிழ்க்கடலைக்கடைந்துமெய்ம்மறையின்வண்பொருளமுதமாம்பலநூல்
விண்டனன்றொகையிவ் வளவெனமுடிக்க வெட்குவர்சேடன்வா ணியுமே.()

அத்தகைப்பனுவற் கூட்டமத்தனையு ளதிகமா விளங்குவதணிசால்
வித்தகப்பழனி யாயிரமென்னுமெய்யுறுந்துத்தமர்விளம்பி
லுத்தமத்தவஞ்செய்துய்ப்பவர் நிசமென்றொப்புவர் மற்றையோருள்ளில்
வைத்ததோரபிமா னத்தொடர் பென்ன வாய்கொடு பேசுவர்தாமே. (இ

பாயிரம்வெண்பா மாலையந்தாதி பயில்கலித்துறையலங்கார
மாயிரும்புகழ்சேரி யமகவந்தாதிவளமிகு திரிபுமஞ்சரியுந்
தாயினுமினியகுருபரமாலை தருபதிற்றுப்பத்தந்தாதி
வாயிகப்பிள்ளைக் கவிகலம்பகஞ்சீர் மலியொருபாவொருபஃதும். (சு)

நவமணிமாலை யொடுநவரசமு நலமிகு சித்திமாலையுஞ்சீ
ருவமைதீர் நடுவாமொலியலந்தாதி யோங்குசீர்வண்ணமும் வகுப்புந்
தவமுறுமன்த்தாற் பயில்பவரடையுந் தனிப்பயன்குறிப்பிடுங்கவியும்
விவரமாத்திருவாய் மலர்ந்தவெங்குரவன் விரைமலர்ப்பதம்வணங்குதுமே.

சந்தக்கவி.

தந்ததானதன தத்தனதானன - தனதானா.

கந்தமார்குரவு வெட்சிமுளரிமல - ரணிசீர்தோய்
கந்தனுதநுளி னிற்றினமேழமுழ - கிடுமேலோ
னிந்தமாநிலம திற்றமிழ்மாரிபெய் - முகில்போல்வா
னெங்கண்மாதவமு டித்திடுதேசிக - மணியாவா
னந்தண்வேணுவன மத்தியிலேதிரு - வுருவானோ
னங்கைபூதெரி பற்றிமெஞானநல் - கிடுவோனீள்
சந்தவாய்கொள்சர பப்புலவோனெனு - மிசையோன்மா
தண்டபாணிபழ னித்திருவாயிர - மினிதாமே. (அ)

எழுசீர்விருத்தம்.

அருண்மலி தண்டபாணிமாமுனிவ னறைதருபழனியாயிரத்தைத்
தெருண்மலியுளத்தா லுமலைப்பேட்டைத் திருநகர்ச்சண்முகவேலு
பெருமைசால் பெரியசாமியென்றிருவர் பிரியமிக்குரியகைப் பொருள்பெய்
தருமையாமவ்வூர்க் கிருட்டிணன்பிரசி லச்சியற்றுபுதுலக்கினரே. (கூ)

சாத்துகவிகள் முற்றியன.

# குருபாதமேகதி.



இந்நூலாசிரிய சுவாமிகளிடம் சந்தங்கற்ற

கொங்குப்புலி உடுமலைப்பேட்டை

## முத்துசாமிக்கவிராயரவர்களியற்றியன.



கட்டளைக்கலித்துறை.

தருவா யிரதியன் ஞார்மயல் வீழ்ந்து தவித்துழலுங்
கருவா யிரவக லார்நெறி காணக் கதிரென்பசத்
துருவா யிரணியற் செற்றோன் மருகன் சொலும்பழனித்
திருவா யிரந்தண்ட பாணிசு வாமிசெந் தேமொழியே. (க)

### வேறு.

விருப்படி வாரந்தொட்டு மேற்படி விமானக்கோயில்
இருப்பவர் குறிக்குமோக்கத் திற்செலுத்தேணி போலுந்
திருப்புகழ்த் தண்டபாணி தீவிரமுருகதாசன்
அருட்படி பழனிக்கோது மாயிரம் பாட்டுமாதோ. (உ)

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

பண்முறைத் தண்ட பாணியெங் குருநற்
 பழனிக்கா யிரஞ்செயுட் பகரச்
சண்முகவேலுங் கண்மணிப் பெரிய
 சாமியும் பொருளுப கரித்த
திண்மையிற் பெரிதே யெண்ணிய வெண்ணெய்த்
 திருட்டிலாக் கிருட்டினசாமி
யுண்மையிற் பாடு பட்டுத்தன் னச்சி
 லுய்த்தவோ ருழுவலன் பதுவே. (ங)



உ

குருவே துணை.

# பிரபந்த அட்டவணை.



குருபாதமேகதி.



உ

குருவே துணை.

# பழனித் திரு வாயிரம்.

## பாயிரம்.

### விநாயகர்காப்பு.

வெண்பா.

கழனியுங் குளிர் சாரலுங் காண்டரு
பழனி வேள்புனை பாடலொ ராயிரந்
துழனிசெய்யத் துணைச்செயுந் தோமில் சீர்த்
தழனி றப்பெருந் தந்தி முகத்தனே. (க)

### சரசுவதிகாப்பு.

அறுசீர்விருத்தம்.

வத்துநிலை யுணராப்புன் புலவர்சிலர் தமக்குமுன்னுள்வலிமைசான்ற
சித்துதிக்கும்படி திருவாக்கருளியநீயென்னையின்னந்தியக்கவேண்டாஞ்
சத்துவசற்குருமுருகன்பழனியிலென்விருப்பமுற்றத்தகுஞ்சீர் தந்தாள்
வித்துவசேகரர்பலர்க்குங்குலதெய்வமாகிநிகழ்வெள்ளைமானே. (உ)

### முருகக்கடவுள்காப்பு.

வெண்பா.

மருமுளரிப் புங்கவனூல் வாய்ந்தநெறி யாறுந்
திருமுகங்க ளாம்பழனித்தேவே—யுருமுதிரு
முன்னளவில் சித்தர்பெற முன்னியசீர் நல்கியநீ
யென்னளவில் வஞ்சனைசெய் யேல். (ங)

### வேண்டுகோள்.

கட்டளைக்கலித்துறை.

அன்பர்தந்தாட்பொடி பற்பலநாள்சிரத் தாரக்கொண்டு
நின்பவளத்திரு மேனியைநாடி நெடிதிருந்து
மென்பர மார்த்தமுந் தேர்கின்றிலேன்றுதி யேற்றருள்வாய்
தென்பழனிக்கிரி மேல்விளையாடுஞ் சிவக்கொழுந்தே. (ச)

## நிகழ்ச்சிகூறல்.

சந்தக்கவி.

தானனந்தய்ய தனந்தன தனத்தனா.

ஆயிரம் பிள்ளை தினம் பெறுமொருத்திதா
　　னுடவன் செய்கை மறந்துறுத லொப்பவே
வாயில் வந்துள்ளநறுந்தமிழ் முழக்கிடா
　　மாசடைந்தல்ல லெனுங்கடலிலெய்த்திநாள்
சேயிலங்கெங்கை மதன் கண்வளர்சத்திநேர்
　　தேறியொண்செல்வ மிகும் பழனியைச்சொல்கே
ளயினங்கவ்வவிணங்குதசை தூய்த்திடார்
　　நாடொறுந்துள்ளி மகிழ்ந்திடல்குறித்தரோ. (ரு)

## தேற்றம்.

ஆசிரியப்பா.

புன்னுனிகறிக்கும் புனிதவாய்மறி
தன்னுடற்செந்நீர் தவளத்தண்டுலத்
தலை பெயல்புகன்ற சங்கப்புலவன்
கொலைபடா வண்ணங் குன்றிடித்தொருபேய்
மருமமும் பிளந்த வடிவேற் செங்கை
முருகப் புத்தேண் மூவாப்பொன்னக
ரரசுவேட்டோ ரயம்பலகோறலும்
விரகுடைப்பண்பன் றென் றேவியாம்பு
மென்னைக்காவாதிரானெனுந் துணிவாற்
றன்னைப்போலுந்தலம்பிறிதில்லாத்
திருவாவினன்குடிச்சென்று
குருவாவருகெனக்கூய்த்துதிக்குதுமே. (சு)

பாயிரமுற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

---

முருகக்கடவுடுணை.

# பழனித் திருவாயிரம்.



## நூல்.

### வெண்பா மாலை.

சித்தியெட்டு நல்கித் திரும்பாதுன் றாளுள்வைகு
முத்தியினுஞ் சேர்த்தருள முன்னுவா - யெத்திசையும்
போற்றும் பழனிப் பொருப்பிற் புகழ்த்திருக்கூத்
தாற்றுஞ் சிவகுருநாதா. (க)

பாடல் வனைந்தேத்தும் பத்தர் மனப் பாவனைபோன்
றூடன்மறந் தாயோ வறிகிலே-னூடலொன்று
மென்றனக்கே னல்குகிலா யீடில்பழ னாபுரியி
னின்ற முருகா நிகழ்த்து. (உ)

கோவதைக்கும் பொல்லார் குடிகேடு காண்பதன்முன்
சாவதற்ற முத்திபதந் தந்தாலு-மேவற்
கிசையேன்கரி ளென்னையின்ன மீடழிக்க வேண்டாந்
திசைதேர் பழனியரசே. (ங)

மான்பார்வைக் கண்ணார் மயங்குமலர்க்கடப்பந்
தேன்பாயுந் தார்ப்பழனிச் சேவகா - யான்பாடும்
வெள்ளத் துதிக்காசை மிக்கமைந்து மேவார்போல்
கள்ளத் தனமுனக்கேன் காண். (ச)

பாடும் வளமையன்றே பாலித்தாய் பற்பலசித்
தாடு மகிமை யமையாயோ - பீடு
முதிர்சீர்ப் பழனியின்கண் முத்தலமுங் காத்திட்
டதிர்சேவற் கேதனங்கொண் டாய். (ரு)

சேவற் றொனியாற் செவிகளிக்குஞ் சீரடியா
ராவற் றிரண்முடித்தற் காற்றாயோ - மாவற்றுத்
தேவரூப்யச் செய்த திருக்கைவேற் செல்வா நின்
னாவல்பழ னித்தலத்தின் றூ. (சு)

கற்கினைற்றி னீர்ப்பெருக்கங் காதலித்துன் பாலடைந்தே
னிற்குமதொன் றுள்ளதனை நேடியுரு - கெற்கடியான்
றற்குமதொன் றுள்ளதிந்தத் தாழ்ச்சிமுற்றுந் தீர்த்தருள்வாய்
நிற்கும் பழனியண்ணலே. (எ)

போக முனிக்கும் புலிப்பாணிச் சித்தனுக்கு
நீகருணை செய்தகதை நிச்சயமேற் - றாகமுற்று
வந்தவெனைத் தள்ளேல் வயலூர்த் திருமலையிற்
சந்ததம்வாழ் சண்முகநா தா. (அ)

அறியாமைப் பேயா லகம்பரமென் றார்க்கேன்
குறியாமென் றன்பதமுட் கொள்வே - னெறியா
திரண்டுந் தனவென் றெழிற்பழனி யாள்வாய்
சரண்டுணைகூட் டுண்மையைக்காத் தாள். (கூ)

சொன்னயமு மோசைத் தொடைநயமுஞ் சோர்வின்மற்றை
நன்னயங்க ளத்தனையு நல்குவாய் - நின்னயங்க
ளெல்லா முடையார்க் கெளியா யெழிற் பழனி
வல்லாளா வேற்கை முனிவா. (க0)

உன்னை மறந்திங் கொருகணமும் வாழறியே
னென்னைமறந் தெவ்வா றிருப்பாயோ - முன்னை
மறைபோனைக் குட்டியகை வல்லாய் வயலூர்க்
கிறையோனே யுண்மையறி யேன். (கக)

ஈனக் கலியா லெனைச்சூழ்ந்து புண்படுத்து
மானக்கே டத்தனையு மாற்றுவாய் - வானத்
தலைவர்பலர் போற்றத் தமிழ்ப் பழனிக் குன்றந்
திலைவடிவே லேந்தி நின்றோ னே. (க௨)

வன்னக் கலாப மயின்மேன் மனத்துள்வந்து
மின்னற் படுத்துகின்றா யென்செய்வே - னுன்னற்
கரியபுகழ்த் தென்பழனி யப்பா வடியேற்
குரியதுணை யொன்றுமற்றுண் டோ. (க௩)

ஏனற் புனங்காத் திருந்தா ளினிதுரைத்த
மானக் குறிப்பயனும் வம்பாமோ - ஞானக்
குரவனுத் தென்பழனிக் கோயினடு நின்றா
யிரவலரிற் கூட்டே லெனை. (கச)

என்று மிதயத் திரக்கமில ராயுயிர்கட்
கொன்றுதின்பார்க் கஞ்சிக் குலைவேனோ - வன்றுரைத்த
வாசகத்தைக் காவாய் மலைப்பழனிவாழ்முருகா
வேசகல் பேரின்பமுற வே. (கரு)

செம்புகர்க்குன் றார்க்குந் திருவா வினன்குடிச்சீர்
பம்புபெரும் பாரிற் பலகேட்டு - நம்பு மென்பாற்
கோணைத் தொழிற்செய் குமரா வினியேனு
மாணைத் திறஞ்சற் றருள். (கசு)

என்றற் கருட்பெருஞ்சீ ரீயா விடினுநல்கற்
குன்றற் கினியா ரொருவரின்றே - தென்றல்
வரையான் புகழ்பழனி மாமலைக்கோ மானே
தரையார் முழுதுமுய்யத் தான். (கஎ)

தன்னல்வரி வில்லான் கடும்போர் குறித்தெதிர்க்கு
முன்னமுனை நாடியவென் முன்னில்லா - தின்னந்
துயர்ப்படுத்த லாமோநின் றொண்டு செய்கில்லேனோ
வயற்பழனி காக்கு மிறை வா. (கஅ)

அருள்புரிகின் றில்லாயென் றென்ற தவத்து
டிருள்செறியச் செய்குவது மென்னோ —பொருள்பலவுந்
தானாகி யாகாய் தமிழ்ப்பழனி மால்வரைக்கோர்
கோனாகி நிற்குங் குகா. (கக)

எத்தனையோ காலமுனை யெண்ணித் தொழுமெனக்குன்
சித்தமிரங் காதவிதந் தேர்கில்லேன் - முத்தர்
பரவுபுகழ்த் தென்பழனிப் பண்ணவா பைக்கு
மரவுடைப்பைந் தோகையில்வந் தாள். (உ0)

உலகைப் பொருளாமென் றுன்னு மதியாற்
கலக்கம் பெருகிக் கவன்றேற் — கிலகு
திருவருட்பே றென்றருள்வாய் செல்வப் பழனி
மருவுங் குருபர தேவா. (உக)

மெய்ப்புலமை வேட்டுன் விரைமலர்த்தா ளடுமெனைப்
பொய்ப்புலவ ரெள்ளலென்று போக்குவாய் - முப்புவனத்
துள்ளாரும் பேச வுயர்ந்தபுகழ்த் தென்பழனி
வள்ளான் மறத்திகண வா. (உஉ)

சொன்னவற்றை யேபலகால் சொல்லித் துதிக்குமென்சொற்
குன்னதுளஞ் சற்று முவக்காதோ - வன்னமயிற்
சேவகா செல்வத் திருவா வினன் குடிக்கோர்
காவலனா வாழுமுரு கா. (உங)

கண்ணனையே போலுங் கனத்தபுகழ்ப் பேறு பெறு
மெண்ணமெனக் கீந்த திலைகொல்லோ - வண்ணப்
புலவர் மகிழ்பழனிப் புங்கவா பொல்லார்
பலரிகழ நொந்தேன்கண் பார். (உச)

உடலும் பொருளு முயிருமுனக் கென்றோர்ந்
திடலுணர்ந்து மேனிரங்கு கில்லாய் - கடலுடுத்த
பார்முழுதும் போற்றும் பழனிப் பருப்பதத் தோர்
கூர்முதிர்வே லேந்துங் குகா. (உரு)

குன்றக்குறவர் குலக்கோதை கோமானே
தென்றற் கிரிப்புலவன் தேசிகனே — மன்றத்
தொருவா நடம்புரிவானுற்றதவப் பேறே
திருவா வினன்குடிவாழ் சேய். (உசு)

சந்தக் கவிதொடுத்துன் றாள்கருதுமென்னையிங்கு
பந்தப் படுத்தியதென் பாவமோ — சொந்தச்
செயலதனு னீநடத்துஞ் சிர்விளையாட்டேயோ
வயலூர் முருகாசொல் வாய். (உஎ)

எல்லாமுநின்செயலே யென்றுணரு மென்றனையும்
பொல்லா வினைப்பேய் புலர்த்துவதேன் — வல்லா
ரனைவருக்குந்தாயா யணிப்பழனி வெற்பின்
முனைவனென நின்றாய் மொழி. (உஅ)

*என்பாலோர் பெண்சமைத்தாற் கீந்தகலையொன்றினையு
மன்பா லெனக்களிப்பா யாமாகில் — வன்பா
லுயிர்செகுப்பா ரைத்தடுப்பே னெண்பழனி வெற்பில்
வெயில்விரிக்கும் வேற்படைத்தேவே. (உகூ)

உன்னன்பர் மேன்மை யுரைப்ப தரிதேயா
மென்ன வுணர்த்தியது மில்லையோ — வின்னந்
துயர்ப்படுத்த வேண்டாந் தொழுவார் மனம்போல்
வயற்பழனி காக்கும்வய வா. (ங0)

வாரணப்புட் கேதனமே வாழியென வாழ்த்தெடுக்குங்
காரணத்தார் சொற்குங் களியாயோ — தோரணச்சீர்
வீதித் திருவா வினன்குடிப்பொற் கோயிலுள்வா
மூா நித்தன் போலு மொருவா. (ஙக)

உக்கிரப்பேர் வேல்வழுதி யுற்றகலை யுங்காழிக்
கக்கிரன்றோ யுங்கலையு மார்க்களிப்பாய் — சக்கிரியைக்
குட்டி யுதைத்த குரவா பழனி வெற்பிற்
கட்டிவெல்லச் சொற்சொல்குழ கா. (ஙஉ)

அன்றே யுனதடிமை யானே னடியேனுக்
கின்றேனு மின்புறுத்த வெண்ணுவாய் — குன்றேற
மாட்டான்போற் றோகை மயிலூர்ந்து வான்பழனி
நாட்டார்முற் போய்வரு மன்னா. (ஙங)

இன்ன மிடும்பற் கிறைச்சி நசையுண்டே
யென்னவுரைப் பார்க்கு மிரங்குவையோ — முன்ன
மவனைப் பொதிகைமுனிக் காத்தடுத்தாண் டார்வத்
தவர்பழனிவாழும் வரதா. (ஙச)

*என்பால்—எலும்பால்

செந்தமிழ்ப்பே ரார்வஞ் சிதையும் படிகலிப்பேய்
வந்தடையா வாறு வரந்தருவாய் - சந்தக்
கிளிமருவு திண்டோட் கிழவா பழனிக்
குளிர்மலைமேல் வாழெண் குணா. (௩ரு)

ஆட்டாலைப் பாகே யனையமொழி யார்தரும்பொய்க்
கோட்டாலை யோர்க்கிதச்சொற் கூறுமவ - லோட்டா
விரப்பார் பணிவிழைந்தே னென்றருள்வாய் கொல்லோ
வரப்பார் வயலூர்ச்செல் வா. (௩௬)

வண்ணத் தமிழ்க்கு மகிழாத மானிடரு
மெண்ணப் பெறும்வாழ் வெனக்கருள்வாய் - கிண்ணத்
தனக்கவுரி பாலா தனிப்பழனி வேலா
கனத்தபுகழ்க் கோலா கலா. (௩எ)

வில்லேற்றந் தேர்ந்தசில வேந்தரிட மிக்கதமிழ்ச்
சொல்லேற்றத் தோர்போய்த் தொழாதருள்வாய் - கல்லேற்றக்
காரா பழனிமலைக் கந்தா கடப்பமல
ராரா புலவர்தலை வா. (௩அ)

அடியார் திருக்கூட்ட மம்புவியிற் கூடிக்
கொடியாரை வெல்லல் குறித்தே - னிடியால்
வெருளரவம் போற்பதுங்க விட்டாய் பழனி
யருளரசே கண்பார்த் தருள். (௩௯)

வந்தனவு நேரே வருவனவு மாய்ந்தனவுஞ்
சந்ததமு மெத்தனையோ தண்டமிழ்ப்பாட் - டிந்தவிதப்
பேறளித்தான் சித்தி பெறத்தந்தி லான்பழனி
வீறணையத் தாங்குகந்த வேள். (௪0)

என்றுந் துணையா யிகபரங்க டாங்குவது
மொன்றுங் குறையா தொளிர்வதுவு - நன்றுணர்ந்தோர்
கொண்டாடிச் சூடுவதுங் கோலம் பொலிபழனித்
தண்டா யுதபாணி தாள். (௪௧)

வெண்பாவை நெஞ்சும் வியப்ப மிகுமதுர
வண்பாடற் பாடுமன்பர் வாழ்வுறவுங் - கண்பார்க்க
மாட்டாய் கொலோபழனி மாமலைமேல் வந்துதொழும்
வீட்டாவற் றொண்டர்தெய்வ மே. (௪௨)

தன்னந் தனியாய்ச் சதகோடி சங்கமுறு
மன்னவனு மாமொருவன் வாழுமிடம் - பொன்னகரு
நாணும் பழனி நகர்த்தவமே போற்றிகழு
மாணுந்து காமர் மலை. (௪௩)

இத்தரையிற் குன்றுதொறு மேகி யெழுத்தாறுஞ்
சித்த சலனமறச் செப்பியே — முத்தமிழாற்
றன்னைப் புகழ்சீர் தருவதற்குச் சோம்புவதோ
தென்னைப் பொழிற்பழனிச் சேய். (சச)

என்னருமை தேரா ரிடம்போ யிரந்துலுத்தே
னின்னமது செய்துழல வேவாதே — பன்னகங்கட்
கொத்தியுணுந் தோகைக் குரகதத்தா னேபழனிச்
சித்தியிலோர் சற்றருளிச் செய். (சரு)

சாத்திரங்கள் சொல்லுந் தவமுயல மாட்டாம
லாத்திரப்பட் டேங்குமென்னை யாதரிப்பாய் — வேத்திரக்கை
நந்தியுணர் சம்பு நயனந் தருங்குமரா
விந்திரர்போற் றும்பழனி யில். (சசு)

கண்டார் களிக்குங் கனியொன் றுளததனை
யுண்டாரே வீட்டு ளுறைகுவோர் — தண்டார்
கரங்கொண்டு தென்பழனிக் காவல்செயு மஃதே
யுரங்கொண்ட தேவ ருயிர். (சஎ)

இன்னம் பிறவாமைக் கிச்சையுற்றோ ரேத்துமொரு
மன்னன்போற் றென்பழனி மாமலைவாழ் - முன்னவனை
யாரோ வெனக்கருத்து ளேயுறவேண் டாமனற்கட்
சீரோன் றவப்பயனுஞ் சேய். (சஅ)

அக்கினி க்கண்ணு லரனீன்ற மைந்தனுக்கச்
சக்கிலையென் பாருந் தவத்தரோ — கொக்கிரண்டு
கூறுக வென்றாய் குளிர்பழனிக் கோயிலிற்கூ
டாறுங்கால்த்தி லறை. (சகூ)

என்மான மோர்பொருளன் றீசன் றெழுங்குருவா
நின்மானம் வேட்டே நெடிதயர்ந்தேன் - பொன்மான்
மகள்கணவா தென்பழனி வாழ்முருகா வுண்மை
திகழ்வதனுக் காமுதவி செய். (ருo)

அற்ப மதவாத ராணவமெல் லாமழிக்குஞ்
சிற்பரஞா னத்தைத் தெரிவிப்போன் — கற்பகநாட்
டுள்ளமகள் கேள்வ னுமையா ளருள் புதல்வ
னள்ளலின்னீர்ச் சீர்ப்பழனி யான். (ருக)

செய்ய பவளத் திருவாய் திறந்தன்றெ
னையமறச் சொன்னதும்பொய் யாகுமோ — வைய
மிகழ்ந்தாலு நம்மனங்க ளேனுமறி யாவோ
வுகந்தா வினன்குடியுற் றோய். (ருஉ)

திருமந் திரப்பேரூர்ச் சீர்ப்புலவன் றானே
யருமந் திரஞ்செபித்துய்ந் தானே — கருமத்தாற்
சென்றுவலி தாண்டனையோ செப்பாய் திருப்பழனி
நின்றுலகை யாண்முருகோ னே. (௫௩)

நீலக் கலாபிமிசை நீகனவிற் றோன்றியதோர்
கோலத்தை நேர்காட்டக் கூடாதோ — சாலப்
புகழோங்குந் தென்பழனிப் புண்ணியா பொல்லா
ரிகழ்தீச்சொற் றுங்குகின்றி லேன். (௫௪)

காமனம்பாற் சிந்தை கலங்கிக் கழிக்கரிய
தாமதப்பண் பெய்தவெனைத் தள்ளாதே — நேம
முடையார் பலர்சூழ வொண்பழனிக் குன்றிற்
குடையாடும் பூந்தாட் குகா. (௫௫)

மெய்யறிவு சற்றுமிலா வீணர் வெறுத்திகழ்காற்
பொய்யரைப்போன் றியான்புழுங்கப் போகுமோ — வையகோ
முன்னுரைத்த வாறு முடியாத தேன்வயலூர்
மன்னும் பரமகுரு வா. (௫௬)

கண்ணிரண்டா னின்வடிவங் கண்டே களிப்பதற்கா
நண்ணியநா னுய்வதெந்த நாள்கொல்லோ — விண்ணினர்க்குந்
தாரகமா வாழ்பழனிச் சற்குரவா வென்னறிவை
யாரசைக்கின் றார்நீ யலால். (௫௭)

இன்னங் கலிப்பே யெனைப்புண் படுத்தாமற்
றன்னந் தனிப்பெருமை சாற்றியா — வன்னப்
பரியானைக் குட்டியகைப் பாலா பழனிக்
கிரியாதி பாவெற் கெடேல். (௫௮)

சொல்லுந்து மாலை தொடுத்தன்பிற் சூட்டுநரைப்
பல்லும்ப ரும்பரவப் பாராயோ — வல்லும்
பகலுமிலார் போற்றும் பழனிக் கிரிமேற்
றிகழ்வடிவேற் சேவகனே செப்பு. (௫௯)

அன்றோர் கிளிப்புலவற் கானந்த மீந்தபிரா
னென்றோதிக் கெஞ்சுமெனை யெள்ளிடேன் — மின்றோற்கும்
வேலா பழனிமலை வித்தகா வெள்ளிவெற்பன்
பாலா வருட்கடைக்கண் பார். (௬0)

மேதினியிற் பல்லோர் மிருகமனை யாரெனநீ
யோதியசொற் கேட்டுமுணர்ந் துய்ந்திலே — னீதி
மலிதென் பழனியப்பா வானுலகங் காக்குங்
குலிசன் புகழ்சீர் கொடு. (௬௧)

காலமொடு கன்மங் கடந்த கதிவேட்டுச்
சால வருந்தித் தவிக்கின்றேன் — னீல
முகிலூர் பழனியப்பா முற்றிலுமென் னுள்ளத்
திகினீங்கற் கானவிதஞ் செய். (௬௨)

கல்லாய சிந்தைக் கயவரொல்கக் காசினியி
லெல்லார்க்கு நன்மைசெய்த லிச்சித்தேன் — பொல்லா
வினைப்பயன்றுய்த் தேங்கனன்றோ வீரூர் பழனி
தனைப்பரிக்குந் தோளுடைக்கந் தா. (௬௩)

சுத்த வயிரச் சுகவுடலம் பெற்றுலவுஞ்
சித்தர்குழா மத்தனையுஞ் செத்தனவோ — வித்தரையின்
றீங்கு தவிர்க்குந் திருவுளமில் லாதனவோ
வோங்கும் வய லூரா வுரை. (௬௪)

காங்குநிற மேனிக் கனற்கட் சமனணுகா
தியாங்கு முலவவர மீந்தருள்வாய் — வீங்குமுலைக்
குஞ்சரியாள் கேள்வா குளிர்பழனிக் கோயிலிற்பன்
மஞ்சரிகூ டிக்குலவு வாய். (௬௫)

பேராசை வெள்ளம் பிறழப் பெரிதயர்வே
னாரா தனமேற் றருளாயோ — கூராழிக்
கையான் மருகா கவினூர் பழனிமலை
யையா மயில்வாக னா. (௬௬)

தென்றற் குவட்டுச் சிறுமுனிவன் செந்தமிழா
லுன்றற்கே பாட லுரைக்குநா — வன்றறியாப்
புல்லரிகழ் தீமை பொறுக்கலா மோபழனிக்
கல்லசலத் தாடுமுரு கா. (௬௭)

ஆறு சமயமுநின் னனனங்க ளாகுமெனத்
தேறுமெனைத் தீயர்நிந்தை செய்யாதே — நீறுதவி
யாண்டருள வேண்டாமோ வையா பழனியன்பர்
வேண்டன்முற்று மீந்தருள்கோ வே. (௬௮)

என்னுட் கனவி லிலைத்திருநீ றீந்த வுண்மை
யுன்னுட் கலந்தோ ருணர்வாரா — பொன்னுலகங்
காக்கு முருகா கவின்பழனிக் கண்ணெனக்குத்
தேக்குமின்ப வாழ்வருளிச் செய். (௬௯)

பழனி மலைக்குகனே பன்னிரண்டு திண்டோட்
குழகனே மெய்ப்புலவர் கோவே — மழலைத்
துதிவினவி யென்னையுநின் றொண்டரிற்சேர்த் தாள்வாய்
விதிவிலக்கொன் றுந்தெரியேன் மெய். (௭0)

என்றைக்குன் றொண்ட ரிடைசேர்வேன் யாருமெய்ப்பு
நன்றைப் புவியினிடை நாட்டுவே — னன்றைக்கே
நீயுரைத்த சொன்னிசமா நீடுபெழ னுபுரிக்கோர்
தாயுருப்போல் வாழ்வுறுமென் தாய். (எக)

சிந்தைக் கலக்கந் தெளித்துச் செகம் பழிக்கு
நிந்தைக் கடற்கடத்தி நேர்நிற்பாய் — தந்தைக்கோர்
மூலமந்தி ரம்பகர்ந்த முத்தா முதுபழனி
வேலவனே யென்னை வெறேல். (எஉ)

எந்தப் பிணியு மெனைச்சார்ந் தவர்க்குமஞ்ச
வந்தற் புதக்கருணை வாழ்வருள்வாய் — சந்தக்
கலபமயில் வாகனனே கான்பழனிக் குன்றி
னிலவுறழ்சீர் காட்டிநின்றோ னே. (எஙு)

தடிக்கார னிந்துமிழுந் தண்ணிலவு போல்வெண்
பொடிக்காரன் வாரணச்செம் புள்வாழ் — கொடிக்காரன்
வாழும் பழனி மலைப்புகழோர் வார்தயெதிர்
தாழுந் தமியேன் றலை. (எச)

வேதக் கலைமுன் விரித்துரைத்த வித்தகனுஞ்
சீதக் கருணைத் திருமாலு — மேதக்க
பஞ்சா னனனும் பணிவான் பழனி வெற்பி
லெஞ்சாதென் றென்றுநிற்போ னே. (எ[illegible]

களளுந தசையுங கருதுங கமங்குணத்தோ
ருள்ளுங் கருணை யுறச்செயலே — நள்ளுமெனை
யன்னவராற் றுன்புறுத்த லாமோ வருட்பழனி
மன்னனெனன வாழ்வேல வா. (எசு)

சொன்மதுரந் தோயாத் துகளார்புன் பாவலர்க்குங்
கன்ம நசைதீராக் கைதவர்க்கு — மென்மனது
நாணச்செய் வானோ நளிர்பழனிக் குன்றிலன்பர்
பேணத் தகுந்த பிரான். (எஎ)

தண்டேந்தி வெண்ணீற்றிற் சால முழுக்காடிக்
கொண்டேமே னேக்குங் குரவன்காண் — வண்டேசெ
யார்ப்பழனி றந்தோ யலர்மேற் பொழில்காட்டுஞ்
சீர்ப்பழனி யூர்ப்பரதே சி. (எஅ)

பழையபிச்சைக் காரன்மகன் பைங்கதிரோண் பீலி
யிழையணிவாள் சாயன்மயிற் கேற்றோன் — றழையுங்
கடப்பமலர்த் தாரழகன் காக்கும் பழனி
நடப்பறிவார் தாமே நமர். (எகூ)

குளிகையிட்டுக் கொண்டுபல கோடிசித்த ரென்பா
லெளிதுவந்து போகவர மீவா — யளிநுகரும்
பைங்கடப்ப மாலைப் பரதேசி வேடமிட்டுத்
துங்கப் பழனிவெற்புற் றோய். (அ0)

கொன்றுசெயும் பூசைக் கொடியா ரனைவரையும்
வென்றுமகி ழாடல் விளையாரோ — குன்றுபுரை
செந்தகருஞ் சேவலுங்கொள் சித்தன் பழனிவெற்பில்
வந்தமரு மெய்ம்மாத வர். (அக)

உன்னைத் தவிரமற்றொன் றுண்டென்று முன்னுமவ
ரென்னைத் தொடராவாழ் வென்றருள்வாய் — முன்னை
யொழுக்கங் கருணைதவ முள்ளவரை யெல்லா
மிழுக்கும் பழனியப்பனே. (அஉ)

கெண்டைக்கண் மாதரொல்குங் கேகயப்புள் ளூர்வானை
யிண்டைச் சடையானி ளஞ்சேயைத் — தண்டைக்
கழனினைவார்க் கின்பநல்குங் கந்தனைக்கண் டேத்தப்
பழனிவெற்பே நல்ல பதி. (அங)

செந்துவர்வாய்க் கிள்ளையெனச் சீராடிப் பல்விசைநீ
வந்துரைத்த மாற்ற மறந்தாயோ — நொந்து
பரதவிக்கச் செய்வதென்ன பாவம் பகராய்
சரதபழ னுபுரிச்சித் தா. (அச)

பாடல் விருப்பிலன்போற் பாசாங்கு காட்டிடுநீ
யேடதுகொண் டன்றே னெதிர்வந்தாய் — நீடவென்னைச்
சோதனைசெய் யாதே தொலையாப் புகழ்ப்பழனிக்
காதலன்பர் தேறும்விசா கா. (அரு)

ஒவ்வோ ருரைபலித்திட் டோராயிரமாற்றஞ்
செவ்வே பலியாத் திருட்டென்னே — மைவேழங்
கொன்றான் புதல்வா குலவும் பழனிவெற்பி
னின்றானே வம்புசெய்யே னீ. (அசு)

கன்னன் பொருவுகொடைக் காரரிலாக் காலத்தி
னின்னன்ப ரேற்றுழல்கை நீதியோ — வன்னவர்தா
மற்றோர்க் குதவிசெய்யும் வல்லமையின் றோபழனிப்
பொற்றோகைச் சித்தா புகல். (அஎ)

எந்த வரமு மெனக்குதவ வேண்டாமுன்
னுந்த வரம்பலித்தாற் போரணியு — மந்தரமும்
வாழச்செய் யேனோ வயலூரில் வந்துவெள்ளை
வேழத்தார் போற்றுதெய்வ மே. (அஅ)

கொல்லாமை நாட்டக் குறிக்குங் குணத்தெனக்கோர்
வல்லாண்மை நல்குகிலாய் மாய்த்தருந்தும் — பொல்லார்க்கு
மாட லளித்திலையோ வன்று வினன்குடிச்சீர்
நீடவந்தா யாவும்வல்லா னே. (அகூ)

ஈனமனத்தாரிணக்கம் பெறுதுனருட்
கானகுணத் தாரோ டமைத்தாள்வாய் — ஞானக்
குரவா பழனிமலைக் கொற்றவா கோர
வரவா பரணன்மத லாய். (கூ0)

நீயசைக்கச் சேட்டிக்கு நெஞ்சுடையே னின்புகழ்சொல்
வாயசைவு நின்னதெனல் வம்பாமோ — தூயநிறக்
கோழிக் கொடிப்பழனிக் கோமானே குற்றமுற்றீர்ந்
தாழிக்கோன் சொல்பே றருள். (கூக)

அருள்வடிவங் கொண்டுவந்தன் றவ்வாறு ரைத்த
பொருண்முழுதும் பொய்யாகப் போக்கே — விருளறுக்குங்
கந்தா பழனிமலைக் காரா கவுரிபெற்ற
மைந்தா மறமகள்கேள் வா. (கூஉ)

அத்தனையு நின்னுடைமை யாமென் றறிந்தவென்பா
லித்தனைரூ தேன்செய்கின்று யெவ்வணுய்வேன் — பத்தர்
வருபழனித் தேவே மறையாக மச்சற்
குருபரனு வந்தெனைக்கைக் கொள். (கூஙு)

மாண்டா ரெலும்பணிந்தோன் மைந்தா வலிந்துவந்தன்
றுண்டா யலையோ வடியனேன் - வேண்டாத
சீரு மளித்தனையே தென்பழனி தேடிவந்தேற்
காருமறி யாட லருள். (கூச)

மேட முதலா மிருகங்கட் கொன்றுதின்பா
ரீடழிக்கி னன்றிவலி தீந்தாலும் - வீடடையே
னென்னைக் கவற்றே லிரங்கா யெழில்வயலூர்
தன்னைப் புரக்கும்விகிர் தா. (கூரு)

தத்துவங்க ளெல்லாஞ் சழக்கென் றிகழ்ந்துனருட்
சித்துவிழை வேனைத் தியங்கவிட்டாய் - முத்தீழ்பற்
றெய்வானை மோகா திருப்பழனி யூரின்முன்னைச்
சைவாகமப் பெருஞ்சீர்தா. (கூகூ)

அண்டபிண்ட மாகியன வாகியா காதிருந்தோர்
தண்டணிகைச் சீர்வடிவந் தாங்கியது - வண்டர்ச்
செகுப்பார் தொழும்பழனித் தெய்வம் பலவாப்
பகுப்பார் கண்டொன்றுப் பரம். (கூஎ)

பொன்னைப் பொருளாப் புகழ்வார் புறங்கடைக்கு
மென்னைச் செலவிட் டிடவேண்டா — மின்னைநிகர்
சிற்றிடையார் சிந்தையையுந் தென்பழனி யிற்கவரும்
வெற்றிவடி வேற்படைத்தே வே. (கூஅ)

நின்கிளியென் றென்னை நெடுநாள் பலகனவி
னன்கியம்பு நீயருட்சீர் நல்கிலாய் — வன்கிணறென்
றீந்தாய் பெரிதயர்ந்தேன் யாரும் புகழ்பழனிச்
சேந்தாவென் னெண்ணமுற்றச் செய். (கூகூ)

தண்ணீர்த் தடவயலூர்த் தண்டா யுதபாணீ
பெண்ணீலி பங்கிற் பிறங்குவான் — கண்ணீன்ற
மைந்தனே நீயென் மனஞ்சாட்சி யாக்கனவில்
வந்த படிநனவில் வா. (ள)

வெண்பாமாலை முற்றிற்று.
வேலுமயிலுந்துணை.

---

## வெண்பாவந்தாதி.

அருள்வாரி யின்னமுத மானந்த போதந்
தெருள்வார் நனிவிரும்புந் தெய்வ — மிருள்வார்ந்த
கூந்தன்மட வாருமகிழ் கோலக் குகன்பழனி
வேந்தனவன் றுளேமெய் வீடு. (க)

வீடு பெறவே மிகவருந்தும் வேட்கையுள்ளீ
ராடுகைக்குஞ் சீர்ப்பழனி யப்பனையே — நாடுமினோ
சித்தியுங்கை கூடுஞ் சிவனுங் குறுமுனியும்
பத்திசெய்வ தன்னோன் பதம். (உ)

பதமுத்தி சேர்வதற்காம் பக்குவமு மில்லார்
நிதமுத்தி சேரவுஞ்செய் நீர்மை — யிதமிக்க
காவுற கடவுள் கருதுங் கவின்பழனிச
சேவற் கொடியான தே. (ங)

தேவ ருலகிலடற் சேனை பதியாகி
மூவர்களும் போற்று முதலுமாய்ப் — பாவலர்க்கு
முத்தருக்குஞ் சற்குருவா முன்னிற்பான் மூத்திறவாச்
சித்தர்குழாஞ் சேர்பழனிச் சேய். (ச)

சேய தகருஞ் சிகியுந் திறற்களிறு
மாய பரிமூன்று மாசித்தோன் — றூய
புகழ்சேர் பழனிவெற்பிற் போதத் தமிழா
னிகழ்வார்க்கும் பேறருள்வோ னே. (ரு)

ஏலக் குழன்மடவா ரிச்சையா லீடழிந்து
சாலத் தளருமெனைத் தள்ளிடேன் -- ஞாலத்தை
யுண்டான் மருகா வுயர்பழனிக் குன்றிலொரு
தண்டா யுதம்புனைசித் தா. (சு)

சித்தாடு மாசைச் செறிவில் சிறியவர்தா
மித்தா ரணியி லிகழாமற் -- சத்தாதி
முப்பொருளுங் காட்டாய் முருகா முதுபழனி
மெய்ப்பொருளா நின்றதெய்வ மே. (எ)

தெய்வ முழுதுந் திருப்பழனிச் செவ்வேளென்
றுய்வடைந்த மேலோ ருரைத்தாலு -- நைவதற்காம்
பாவகருமப் பருப்பதமுள்ளார்சிறிது
மாவலுற்றுக் கொள்ளா ரகத்து. (அ)

அகத்தியற்குச் சொன்னதனை யந்நாளருணைச்
சுகத்தினது காதிடத்துஞ் சொன்ன -- யிகத்திற்
றளர்வடையு மென்பாலுஞ் சாற்றிடவொண் ணாதோ
வளர்பழனிக் குன்றுறைதே வா. (கூ)

வாகா வெனத்தினமும் வாழ்த்தெடுக்கு மென்றனையு
நீகாவா தேயிருக்கை நீதியோ -- பாகாய
சொற்குறத்தி யார்வமிகத் தொல்சீர்ப் பழனிவெற்பி
னிற்குமுரு கையா நிகழ்த்து. (கய)

நிகளமிட்டு நான்முகனை நீயன் றடைத்த
புகழுரைக்கு நான்மயங்கப் போமோ -- சகளமொடு
நிட்களமுங் கூறாய் நிகர்தீர் பழனிமலைக்
கட்கவின்ற ஞானமுருகா. (கக)

முருகாநீகடம்புசெச்சை மொய்க்குரவென் றென்பாட்
டொருகால நீயணிந்த தோர்ந்தும் -- பெருகார்வ
மெய்திலேனந்தோ வெழிற்பழனியப்பாவென்
செய்தியோ மாயச்செயல். (கஉ)

செயங்கொண்டவேன்முருகா செஞ்சொற் புலமை
நயங்கொண்ட பாவலவர் நாதா -- கயங்கொண்ட
நீர்ப்பழனி யப்பாநினக்கே யடிமையென்றியா
னேர்ப்பதறி யாயோ வறை. (கங)

அறைகழற்செஞ் சீறடிக ளன்றென் சிரத்தி
லுறையவைத்த மேன்மையெனக் குண்டோ -- விறையளவு
மின்றோ வறியே னெழிற்பழனி மாமலைமே
னின்றோனே மெய்யுரைப்பாய் நீ. (கச)

நீலக் கலாபி மிசை நீயொருகா னேரில்வந்து
ஞாலத்தோர் தேறு நலநல்காய் — சாலப்
புகழ்விளக்குஞ் சீர்ப்பழனிப் புங்கவா பொல்லா
ரிகழ்வினிநான் முங்கலரி தே. (கரு)

அரியுஞ் சிவனுமற்றை யாரும் பழனிக்
கிரிமுருக னென்றே கிளத்தும் — பெரிய
கவுமாரர் மாற்றமுற்றுங் காய்கனற்போற் கோபப்
பவுராணி கர்க்குப் பகை. (கசு)

பகையு முறவுநல்கும் பாசமற்ற ஞான
மிகையுதிக்கு மாறொருசொல் விள்ளாய் — சிகை நிமிர்த்துக்
கூவுமடற் சேவற் கொடிப்பழனிக் குன்றுடையா
யாவுமுன தாடலென்றோர்ந் தேன். (கஎ)

தேனுந் தினைமாவுந் தின்னக்கொடுத்துருக்கு
மானுண்கண் வள்ளி மணவாளா — யானுன்
பழனிமலைக் கேயடிமைப் பட்டேனின் பாத
நிழலில்வைத்துக் காப்பாய் நிதம். (கஅ)

நிதம்பக் குழிமயக்க நீங்காத நெஞ்சேன்
கதம் பற்று நெஞ்சுடையேன் கண்ணின் — புதம்பட்ட
ஞாய மறிய நவில்வாய் நளிர் பழனி
மேயகுரு நாதா விரைந்து. (கக)

விரையார் கடம்புறழு மேதக்க பாடல்
வரையார்தம் மூடுமுல வையே — திரையாழி
மால்போற் சிவன்போன் மறந்தீர்த் தவர்வசிக்கு
மால்போல் பழனிவெற்புற் றாய். (உ0)

உற்றா ருறவோ ருலகத்தா ரோள்ளிய நூல்
கற்றார் துறந்தோர் கணமெல்லா — நற்றுக
மாகத் தருபே றடியேற் கருள்பழனி
நாகத் தமர்போதுமன் று. (உக)

மன்று தியர்நுகரும் வாழ்க்கைச் சுகமுழுது
நின்றுனந் தத்திவலை நேருமெனச் — சொன்னார்சொற்
கொள்ளா துழன்றேன் குளிர்பழனிக் குன்றினருள்
வள்ளால் கருணைசற்றே வை. (உஉ)

வையகத்தும் வானகத்து மாசுணங்கள் வாழ்பிலத்துஞ்
செய்ய தகருகைக்குஞ் சேவகத்து — மையமறுத்
தென்னைப் புரப்ப தெளிதேயன் றோபழனி
தன்னைப் புரப்பான் றனக்கு. (உந)

தனக்குன் றுடையார் தலைவாசு ரேறுங்
கனக்கத் திரிந்தலுத்தேன் கண்டா—யெனக்கன்று
நீயுரைத்த துண்மையன்றோ நித்தம் பழனிவெற்பிற்
றூயகச்சீர் சொல்போ தகா. (உச)

தகாத நடைநடந்து தாரணியிற் பல்லோர்
விகாதம் விளைத்தேனை வெறுக்கே—லகாத
மனத்தார் தொழப்பழனி வாழ்முருகா வல்லோ
ரினத்தாரச் செய்தருளின் றே. (உரு)

இன்றே மயின்மீ தெதிர்தோன்றி யென்கவலை
யொன்றேனு மில்லா தொழித்தாளி—னின்றேசு
குன்றுமோ நீடுமன்றோ கோதில்பழ னுபுரியி
லென்றும்வாழ் கந்தா வியம்பு. (உசு)

இயமன்விடுந் தூதர்களை யெண்ணியெண்ணி யேங்கும்
பயமொழியச் சற்றருட்கண் பாராய்—வயலும்
பொழிலு மலிபழனிப் புங்கவா வுன்னை
விழியெதிர்கண் டன்றி விடேன். (உஎ)

விடங்கலுழ்வெண் பற்பாம்பும் வேணியினிற் சூடி
நடம்புரிந்த நாதனுக்கு நாத—னடம்பெருகு
தீங்கோர் மருவாத் திருவா வினன்குடியி
லோங்கோர் மலைமீ துளான். (உஅ)

உளமலரிற் சந்ததமு முன்னுகின்ற வென்பாற்
களவனந்தஞ் செய்தாய் கவன்றேன்—றளவநகை
மானுர்க ளாடன் மலிபழனி வாழ்முருகா
வானு நலம்வழங்கி யாள். (உகூ)

ஆளச் சலியா தடியேற் கருள்புரிந்தா
னீளப் புவித்துயரு நீங்குங்காண்—காளமுகி
லாயும் பொழிற்பழனி யப்பாவன் றென்கனவி
னீயுரைத்த சொல்லை நினை. (௩0)

நினைக்கரும்பே ரானந்த நீதருவா யென்றே
யுனைத்துதிக்கு மென்னை யொறுக்கேல்—பனைப்பெருங்கை
வேழமுகன் றோழா வியன்பழனி வெற்பிலன்பர்
வாழவந்து நின்றபுல வா. (௩க)

புலவனெனப் பேர்மொழிந்தென் புந்தியினுள் ளோர்கா
னிலவியது மின்றோ நிகழ்த்தாய்—பலவகைய
பாடற் பனுவற் பழனிமலைப் பண்ணவனே
யாடற் சிகிமீ தமர். (௩உ)

அவிர்கனகச் செங்க லருந்தமிழாற் போற்றுங்
கவிஞனுக்கீந் தான்புதல்வன் கண்டீர் — புவிமுழுது
மெச்சும் பழனிமலை வித்தகவே என்னவனை
நச்சுமினே பாட னவின்று. (கங)

நவின்ற சுருதிவண்மை நான்முகனைக் குட்டிக்
கவின்றபுகழ்ச் சேர்ந்தனருட் காட்சி — குவிந்தமுலைப்
பாவையரும் காணும் பழனிமலைப் பாவலரே
தேவையெலாங் கொள்வார் செகத்து. (கச)

செகத்துக் கிடர்விளைக்குந் தீயோர்ச் செருக்கு
மகத்துக்க ளோடெனைநீ வைத்தாள் — ககத்திற்
சிறந்தமயி லூர்பழனித் தேசிகனே யுன்னை
மறந்திருக்க மாட்டேன் மனத்து. (கரு)

மனமான பேய்க்குரங்கு மாயை வனத்திற்
றினமோடிப் பாயத் திகைத்தேன் — சனகாதி
நால்வர்தொழு மீசன்விழி நல்குபுதல் வாபழனி
வேல்வயவா வென்னை விரும்பு. (கசு)

விரும்பு மனமயல்போய் மேதகுநின் றாளி
லிரும்புண்ட நீராவ தென்றோ — துரும்பொன்றால்
வானவரை வென்றபிரான் மைந்தா மலைப்பழனிக்
கானவனே யுண்மை கழறு. (கஎ)

கழகப் புலவன்மொழி காதலித்தாய்க் கியான்சொன்
மழலைமொழி கொண்டால் வசையோ — தழலுமிழ்கண்
வேழமுட னூர்தன் மெய்யன்றோ வேலைநிக
ராழநன்னீர்ச் சீர்வயலூ ரா. (கஅ)

ஊரா ரிகழ்ச்சி யொருகோடி யுள்ளவற்றைத்
தீராயே லென்றன்மனந் தேறுமோ — போராடுஞ்
சேவற் கொடிப்பழனிச் சேவகா செம்மலர்க்கட்
காவற் கடவுண் மருகா. (கசு)

மருமலிந்த செச்சை வனம்போலு மேனித்
திருவொருக்காற் றேற்றநல்காய் சேவை — குருமரபின்
மூத்தவர்க்கோர் மாற்ற மொழிந்தாய் முனிவர்சொல்பே
ராற்றல்வய லூர்க்குமரப் பா. (சo)

குமர குருபரனைக் கொற்றவைவே லானைச்
சமர்விழையுஞ் சேவலுளான் றன்னை — நமரறிவா
ரெம்மை யவனறிவா னென்றகவு மாரருக்கே
செம்மையதா கும்பழனிச் சீர். (சக)

சீருந் தளையுந் தெளியாச் சிறுபுலவ
ராரும் பகர்த லரிதன்றே — சூருடலங்
கீற்றுருவ மாகவெல்லுங் கெம்பீரஞ் சொல்லியண்டர்
போற்றும்வய லூரான் புகழ். (௪௨)

புகழ்விரும்பிப் பாடுபெட்டுப் பொல்லாத கோடி
யிகழ்வடைந்து நொந்தேனி தென்னே — திகழ்வடிவேற்
பூசைப் பயனேனும் பொக்கமுறா தீந்தருள்வா
யாசைப் பழனிமன்ன வா. (௪௩)

பழனிமன்ன னொன்று பல்கோடி சித்தர்
கழக முரைப்பதுமெய் கண்டீர் — தழலனைய
நீதியுந்தேன் போலு நெடுங்கருணை யுந்தெரியா
மேதினியீ ரஞ்சிகட மின். (௪௪)

மின்னற் கொடியனைய வேலாயு தக்குகனை
வன்னக் கலாப மயிலானைப் — பொன்னகரிற்
றேவர்குடி யேற்றுந் திருப்பழனிச் செவ்வேளை
யாவலுற்றுப் போற்றவெளி தா. (௪௫)

எளிதா முடும்புமுய லேனமன்ன வற்றைக்
களியோடு கொன்று களித்துண் — டளிகூர்வா
ரெல்லோர்க்கும் பொல்லா னெவனோ வவன்றானே
வல்லோன் பழனியறி வான். (௪௬)

அறிவுமறி யாமையுந்தீர்ந் தானந்தமெய்திக்
குறிகடந்து நிற்பதென்று கொல்லோ — மறியணிகைச்
சங்கரன்கட் பாலா தமிழ்ப்பழனிக் காவலவா
வைங்கரத்தோன் றோழாசொல் லாய். (௪௭)

ஆய புவன மனைத்தினுக்குந் தாயகமா
மேய பழனிமலை வித்தகா — நீயறைந்த
வப்பிறப்பில் வந்த வநுபூதி யத்தனையு
மிப்பிறப்பி லெய்தாத தேன். (௪௮)

ஏனந் தடிந்தா னிருங்கடலிற் சூரைவென்று
னனந்த வாரி யமுதன்னன் — ஞானந்
தருவதினுஞ் சித்தி தரத் தாமதித்து வாட்டு
மொருவன் பழனியுடை யோன். (௪௯)

உடைவாளுங் கச்சையுஞ்சேர்த் தோரிரவின் போது
விடையோ னறியவந்த வேடன் — கடையோருங்
கொல்ல லொழிக்கை குறிப்பார் பலருநம்பு
நல்ல பழனிவெற்ப னும். (௫௦)

நாமென் றிறுமாந்து நாட்கழியே னன்றுநன்றே
யாமென்று சென்னி யசைத்திடேன் -- றேமென்
மலர்சொரிந்து தென்பழனி வள்ளலைப்பூ சித்துப்
பலவரமுங் கேட்பேன் பரிந்து. (௫௧)

பரிந்து தவம்புரிதல் பாரமே யாகுஞ்
சுரிந்த குழற்குறத்தி தொண்டன் -- விரிந்தபுகழ்
பாடிப் பழனிவெற்பிற் பத்திசித்தி முத்தியின்பந்
தேடிக்கொண் டாடலிலே சே. (௫௨)

சேவேறு வான்கனற்கட் செங்குருந்தைப் பைங்கடப்பம்
பூவேறுந் திண்டோட் புரவலனை -- நாவேறு
மங்கைக் கிலக்கணஞ்சொல் வாய்ப்பழனி யானையுமை
யங்கைச்சே யென்றுரையா ரார். (௫௩)

ஆர்பூத்த செஞ்சடிலத் தண்ணலுக்குங் கண்ணனுக்குஞ்
சீர்பூத்த நான்மறைப்புத் தேளுக்குஞ் -- சூர்பூத்த
வின்ன லொழிப்பா னெழிலுருக்கொண் டான்பழனி
மன்னவன் கீர்த்தியற்ப மா (௫௪)

மாவாய சூரன் மடியவதைத் தான்மயக்கும்
பூவாளி மாரன்வெட்கும் பொற்புள்ளான் -- றேவாதி
தேவ னருண்மகவுந் தேசிகனு மாம்பழனிக்
காவலனன் ஞனளென் கண். (௫௫)

கண்ணாரக் காணக் கருதுங் கவுமாரர்க்
கெண்ணான் கிரண்டுசித்து மீயானே -- விண்ணணைச்
சொற்குறத்தி கேள்வன் றுகடீர் பழனிவெற்பி
னிற்குமுரு கோனிந் நிலத்து. (௫௬)

நிலமுதலாம் பூதங்க ணீடறிவிற் கூடிக்
குலமுகங்க ளாம்பழனிக் கோமா -- னிலகுறுதற்
கண்ணிலனென் பாரிற் கடையாகி நானிறந்தால்
[illegible] சொல் வீண். (௫௭)

வீணைக் கரத்தணங்கும் வேத்திரக்கை மெல்லியலுங்
கோணைமொழி பேசநடுக் கூத்தாடு -- மாணழகன்
வேதியனே வேடுவனே மிக்கபழ னுபுரியோ
ரோதிவோர் மாதிரத்தோர்க் கு. (௫௮)

குக்குடப்புள் ளோசை குறிக்குந் தொறும்வினவும்
பக்குவமென் றியானடைப் பாலிப்பா -- யக்குவட
மிட்ட களத் தார்க் கெளியா யெழில் வயலூர்
வட்ட மலைக்கா வலா. (௫௯)

வலாரி மகள்கொழுநா வள்ளிமண வாளா
கலாப மயிலுகைக்குங் கந்தா — நிலாவணிவான்
மைந்தா பழனி மலையிலுனை வாழ்த்திடுமென்
சிந்தா குலமுழுதுந் தீர். (௩0)

தீரகுண மில்லாத் திருட்டுத் தவசியெனப்
பாரறையக் காதல்வலைப் பட்டேனை — நாரணன்போல்
வாழச்செய் வானே மடியக் கடிவானே
வேழத் திரட்பழனி வேள். (௩௧)

வேளை யறிந்தென் விருப்பந் தராததன்றி
நாளையென்றோர் சொல்லு நவின்றாயே — வாளைக்
கயல்பாயும் வாவிக் கவின்பழனிக் கந்தா
வயலார் நகலறியா யா. (௩௨)

ஆயாச மீறி யலமந்தே னன்றெனக்குன்
வாயாற்சொல் சீரும் வழங்கிலாய் — தீயார்
மருவாத முத்தியினும் வைக்கவல்லா யன்றோ
திருவா வினன்குடிவேந் தே. (௩௩)

வேந்தர்பெரு வாழ்வும் வெறுத்துனருள் வேண்டெனக்குச்
சாந்தபர ஞானந் தரவேண்டு — மாந்தரொடு
மாயச் செய் யாதே மலைப்பழனிக் கோயிலின்வாய்
மேயற் புதஞ்செய்குரு வே. (௩௪)

குருவாகித் தெய்வமாய்க் கொற்றவைவேல் வேந்தாய்த்
திருவா வினன்குடிவாழ் சேய்க்குப் — பொருவாத
பத்திசெய்வோ ராரெனினும் பண்ணவர்க்கு மேலாய
புத்தியுளா ரென்றுரைக்கப் போம். (௩௫)

போம்போது தாமுழைத்த பொன்கொண்டு போவார்போல்
வீம்போது வாரை விரும்பிடார் — பாம்போங்கு
நாடகக்காற் றோகை நடத்தும் பழனிமன்னன்
றாடலைமேற் கொள்ளுந் தவர். (௩௬)

தவம்புரியச் சோம்பலுற்றுத் தையலனல்லார் வேண்டு
மவம்புரிந்து நாட்கழிப்பா யானுற் — கவம்பொலிந்து
கொல்போதென் செய்வாய் குகன்பழனிக் கோயிலுக்குச்
செல்போகன் போல்வாரைச் சேர். (௩௭)

சேரன் பணியுந் திருப்பழனிச் செவ்வேற்சேய்
வாரம்பெருத்தோர் வரந்தந்தா — னீரருவிக்
குன்றுதொறுஞ் சென்றவன்செய் கூத்தனைத்துங் கண்டுபகை
வென்றுமுத்தி வீடுபுகு வேன். (௩௮)

வேனன் றுணிந்துமுன்னுள் வேதங் களிற்கலந்த
வானபிழைக் கஞ்சி யடங்குவரோ — மானளித்த
வள்ளி மணவாளன் வாழ்பழனி மால்வரையிற்
றெள்ளியதொண் டாற்றுஞ் சிலர். (௬௯)

சிலம்புஞ் சிலம்பணிந்து திண்சிலம்பு தோறு
நலம்புரிந்து மீள்பழனி நாதன் — புலம்புமெனைத்
தள்ளாம லேற்றுற் றமரயோரும் வானவருந்
துள்ளார்வந் தோய்வதுமெய்ச் சொல். (௭0)

சொல்லும் பொருளுஞ் சுவையென்றுஞ் சொல்லாரு
டல்லும் பகலும் மவிர்கின்றோன் — வில்லுமம்புங்
கொண்டுபலர் சூழ்பழனிக் குன்றக் குவட்டினின்றோர்
தண்டுபுனை கைக்குமரே சன். (௭௧)

சன்ம விடாயுஞ் சமனுர் தருஞ்சாவு
மன்மதன்செய் போருமற மாற்றுவாய் — பன்மறைக்கு
மெட்டாது நின்று மெழிற்பழனி வெற்பிலன்பர்க்
கிட்டா தரிக்கவந்தோ னே. (௭௨)

வந்தோர்க்குந் தன்பால் வசிப்போர்க்கு மாறிலின்பந்
தந்தோ வறக்கலக்குந் தம்பிரான் — நிந்தோமென்
றுடுவான் செய்த வருந்தவப்பே றுய்ப்பழனி
நீடுவா னென்கை நிசம். (௭௩)

நிசங்கண் டவர்தொழுஞ்சேய் நேரிழையார் பல்லோர்
வசங்கண்ட கள்வனென வந்தான் — கசங்கண்ட
மாலனையார் பல்லோர் வழுத்தும் பழனிவெற்பின்
மேலடியார் வேட மிலைந்து. (௭௪)

மிலைந்த கடம் பன்ன வியன்றமிழ்ப்பா வாணர்
கலைந்தலையா தொன்றுபடக் காட்டாய் — மலைந்த
செயவீரர் போற்றத் திருப்பழனி வெற்பி
லியல்வேட்கை நீடிநின்றோ னே. (௭௫)

நின்ற நிலையென்று நீங்கா நெடும்பழனிக்
குன்றமுளான் வேற்கைக் குகவேடன் — கன்றனையா
னென்றென்னைக் கைக்கொண் டிடினே யிகபரங்க
ணன்றென்ப தெய்தி நகும். (௭௬)

நகுவார்க் கிலக்காகி நைவுறுமென் றன்பால்
வெகுமாற்றஞ் சொற்றனவும் வீணே — வகுளத்
தொடையான் களிமலிசீர்த் தொல்பழனி யப்பா
விடையாவா ரூள்வா யினி. (௭௭)

இனிய கவி யொன்றேனும் யானுரைத்த தின்றே
நனிவருந்திப் பாலையிலந் நாள்போய்க் — கனிவிலவன்
பாட்டொன் றிரந்து பதிலுரைத்தா யேபழனி
யாட்டொன் றியவடிவே லா. (எஅ)

வேலா வலயநடு வெஞ்சூரன் மாயவென்று
மாலாதி யோரையன்று வாழ்வித்தாய் — சேலார்
வயற்பழனிக் கந்தாவென் வல்வினைப்பேய்க் கஞ்சே
லியற்கைவிளை யாட்டொன் றியற்று. (எகூ)

இயலு மிசையு மெழிறு டகமும்
வியனுறச்சொல் வாழ்க்கையினு மேலோ — வயலூர்க்
குமராநின் னன்பருக்குக் கோதில்விண் ணூர் காக்கு
மமரேசன் வாழ்வா மது. (அ0)

அதுலபர மானந்த மன்ப ரடைவான்
சதுமுகனைக் குட்டியசேய் தன்னை — மதுமலர்த்தண்
சோலைப் பழனிவெற்பிற் றேத்திரஞ்செய் வார்கண்மற்றோர்
வேலைக் கிசையார்மெய் மெய். (அக)

மெய்யறிந்து பொய்யனைத்தும் விட்டோர் வியன்பழனிச்
சையமிசை வாழுந் தலைவனன்றி — வையகமும்
வாரிதியுந் தீயும் வளியும் வெளியுமின்றென்
றியாரிடத்துஞ் சொல்வதுண்டுண் டே. (அஉ)

உண்டுறங்கி மாயு முலகத்தார் போலுனக்காந்
தொண்டுபுரி வேனுந் தொலையாமற் — றண்டுபுனை
கையா பழனிக் கருணா கராபகரா
வையா னனற்குரைத்த தை. (அ௩)

ஐயந் தொடர்ந்துள் ளறிவழிந்து மாயாதுன்
மெய்ப்படியா ரோடெனையு மேவவைப்பாய் — பையரவப்
பாயான் மருகா பழனிமலைப் பண்ணவனே
தீயா ரிடைசேர்த் திடேல். (அச)

திடங்கொண்ட ஞானத் தெளிவுடையா ரெல்லா
மிடங்கொண்ட சீர்ப்பழனிக் கேகிக் — கடங்கொண்ட
கைப்பிரமற் குட்டியதோட் கந்தன் கருணைவெள்ளப்
பொற்பிசைய வாழ்வார் புகழ்ந்து. (அரு)

புகலிப் பனவனன்றேன் பூதலத்திற் றோன்றி
யிகன்முற்ற வென்றிடுநா ளொன்றோ — தகரிற்
றிரிவானே தென்பழனிச் சேவகனே செஞ்சொற்
பரிவானே யுண்மை பகர். (அசு)

பக்மயக்கும் பார்மயக்கும் பைம்பொன் மயக்கு
மிகமெலிந்தே னென்னை வெறுக்கேல் — சகமுழுதுங்
காக்கும் பழனிமலைக் காவலா காரணமென்
வாக்கும்பொய் யாதெதிர்நீ வா. (அஎ)

வாரம்வைத்துப் பல்கனவில் வந்துவந்து நீயுரைத்த
காரணங்கள் பொய்த்தாற் கடைத்தேறேன் — பாரகத்திற்
சித்தியெய்தா தாருஞ் செயவேற் பழனியப்பா
முத்தியெய்தன் மெய்யாகு மோ. (அஅ)

மோகக் கடலின் முழுகித் தவிப்புறுநா
னேகத் துவமுணர்வ தெவ்வாறோ — மாகத்தா
ரேத்தும் பழனிக் கிறைவா வெனைநீயே
காத்துனுள்ளிற் சேர்க்கை கடன். (அகூ)

கடகமணி புன்னிருதோட் காங்கேயன் காமர்க்
குடமுலைக்கா னக்குறத்தி கொண்க — னடனமயி
லூர்வான் பழனிவெற்பி லுற்றவன்சீ ரோதியருள்
சேர்வார்க்கே யெய்துஞ் செயம். (கூ0)

செயசெயவென் றண்டர்குழாந் தெண்டனிட்டுப் போற்ற
வயமுகைக்குந் தோட்பழனியப்ப — னயமதுரப்
பாடல் விழைந்தான் பரிசுதவு வானினிபபோய்
நாடவர்முற் கெஞ்சிநில்லே னுன். (கூக)

நானு னெனப்பிதற்றி நாசமடைந் தார்பலரென்
றூனுத நூல்க ளறைந்தனவால் — வானுடர்
போற்றும் பழனிமலைப் புண்ணியனே யாவுமெனச்
சாற்றுதலே மேலாந் தவம். (கூஉ)

தவளக் களிறுகைப்பாய் சங்கரன்கண் ணீன்ற
பவளக் கிரியனைய பாலா — நவமணிப்பொற்
கோயிற் பழனிக் குகவேளே யென்மிசைநீ
தாயிற் புரிவாய் தயை. (கூங)

தயையும் பொறையுந் தவமுமுளார் தம்மோ
டியையும் படியெனக்கை யேற்பாய் — வயமலியுஞ்
சத்திவடி வேலா தமிழ்ப்பழனிச் சண்முகவா
வெத்திசைக்கு நன்மையுண்டா மே. (கூச)

மேனைமகள் பால்குடித்த மெல்வாயா னீயுரைத்த
தேனைநிகர் சொல்லுந் திருட்டாமோ — வூனைப்
பழித்தரிய மாதவஞ்செய் பண்பு டையார் பல்லோர்
தெழித்த பழனியர சே. (கூரு)

அரச நிழற்பவுத்த ராதியரே யாய
விரச குணத்தாரை வெல்லல் வேட்டேன் — சரசகுண
வள்ளிமக வென்றெனைநீ வாழ்விப்பாய் வான்பழனி
யொள்ளியனே லப்பா வுவந்து. (கூசு)

உவகைமலிந் துன்றிருக்கூத் தோங்குமலை தோறுந்
தவரொடுபோய்ப் போற்றவரந் தாராய் — சிவன்மதலை
யென்பார்க்குஞ் சற்குருவென் றேமாப் பவர்க்குமரு
ளன்பா பழனிமுத்தை யா. (கூஎ)

முத்தமிழாற் போற்றி முகுள மலரருச்சித்
தத்தமிரண் டுங்குவிப்பே னாதரிப்பாய் — சத்தசுர
வேதத்தோ னைப்புடைத்து வெற்பிலடைத் துப்படைத்த
நீதப் பழனியப்ப னே. (கூஅ)

நேய மலிந்துன் னிசவடிவ மேமனத்து
ளேய நினையுமெனை யென்றருள்வாய் — தூய
பழனிமலை வந்தகந்தா பாண்டரங்கன் பாடுங்
குழனியடலை தந்தமைந்தா கூறு. (கூகூ)

கூறுபட நாடிக் குலையாதுன் கோலமென்றே
தேறுகின்றேன் றென்பழனித் தேசிகா — வாறு
சமயங் களுங்கடந்த தத்துவமு மென்னு
ளமையுமறு பூதி யருள். (க00)

முற்றிற்று.

ஆகூகவி உ௱.

வேலுமயிலுந்துணை.

---

## அலங்காரம்.

### கட்டளைக்கலித்துறைகள்.

சீர்மகள் கேள்வனு நான்முகத் தேவுந் தினம்பரவக்
கார்மகள் பாகத் தமர்ந்தான்குருபரன் காவல்கண்டீர்
நீர்மகளாடை யெனச்சூழவாழு நிறை பொறுமைப்
பார்மகள் சென்னிக் கலங்காரமான பழனிவெற்பே. (க)

அண்டர்பரவு பழனாபுரிவெற் பமர்குகன்கைத்
தண்ட மெனிதென் றிகழேன்மினேவன் சரபமடுஞ்
சண்டவல்வேக முறுகண்டபேரண்டஞ் சாய்த்ததெனை
முண்டகத்தான்மறைவல்லோ ரறிய மொழிந்ததுவே. (உ)

வேலாயுதத்தொடுதண்டேந்திச் சத்த மேற்றிசையின்
பாலாந் நோக்கத் துடனேநிற்கின்ற பழனிவெற்போ
னாலால முண்டவன் சேயோ வுமைகைக் கழகிய தோ
மாலானவன்புகழ் தேவோ மனித வடிவினனே. (௩)

ஆகமவேதப் பொருளான தேசிக னாகிநிற்கு
மேகனைத்தென்பழ னிக்குவட்டேகண் டிறைஞ்சவல்லார்
சாகர நீர்முழு துண்டுவிட்டானுந் தமிழ்க்கிளியும்
போக முனியும் புலிப்பாணிச்சித்தனும் போல்பவரே. (௪)

அங்கையிற்றண்டொன் றணிந்துவெண்ணீறுமுற் றுடியணிக்
கொங்கைமின்னாரைக் கவர்ந்தே பழனிக் குவட்டினிற்போன்
செங்கையினாலற முப்பத் திரண்டுந் தினம்வளர்க்கு
மங்கையைப் பங்கில்வைத் தோனெடுநாள்செய்த மாதவமே. (௫)

கோரவன்பேயொன்று கொன்றுந் தமிழ்ச்சொற் கொளும்பழனிக்
காரண தேசிகன் பாற்சென்று மாதர் கவினுரைத்துப்
பாரகத் தோர்களும் வானோரும் போற்றும் பயனடைந்த
நாரதமாமுனி போல்வாரும்பற்பலர் நானிலத்தே. (௬)

சிந்தாகுலப் பட்டடைவார் பலர்க்குந் தினமுவகை
தந்தாவினன்குடிக் கோயிலுள் வாழுந் தனிக்குகவேள்
பைந்தாரு நீழற் புலவோ ரனைவரும் பார்க்கவந்தோர்
நந்தாவனத்தொர் திரு வார்த்தை கூறின னாலுய்யவே. (௭)

அன்னெஞ்சத்தின ரனுகாப்பழனிக் கதிபனென்று
நன்னெஞ்சத்தொண்டர்க் கெளியான்முன்னாண்மலை நாட்டில்வளர்
வன்னெஞ்ச வேட மகண்மோகமாக மயக்கியவா
றென்னெஞ்சந் தானும் வசமாகு மாட வியற்றினனே. (௮)

நட்டெட்டு போக முயல்வார்க்கு நாதனெந் நாளுமயில்
விட்டெட்டுத் திக்கினும் போய்ப்பழனாபுரி மேவும்பிரான்
சுட்டெட்டணையு மிரு ளின்றித் தீர்க்குமெய்ச் சோதியென்றோர்ந்
தெட்டெட்டுச் சித்தியு முத்தியும் வேட்பரெந்தமரே. (௯)

பாதாளவாசிக ளஞ்சுறக்கூவும் பசுமயிலோன்
வேதாளபூதங்க ளின்புறப்போர்செயும் வேற்படையான்
கூதாளமும் புனை வான்பழனாபுரிக் கோயிலெந்தை
நீதாளர் தொண்டு புரிந்தாலும் வேண்டிய சீர்நல்குமே. (௧௦)

பொன்னைப்படிகத்தைப் போலிருமாதர்கள் போற்றியகா
ரன்னைக்கருமை மகவாகினான் பழ னாபுரியூர்
தன்னைப் புரக்குங் குகவேள் மதுரத் தமிழ்க்கவிவேட்
டென்னைப்படுத்திய பாட்டிகோர மியம்பரிதே. (௧௧)

மஞ்சேறுவான்முதற் றேவரெல் லோரையும் வன்றகுவர்க்
கஞ்சேன்மின்வம்மி னெனக் கரங்காட்டி யழைப்பதொக்கும்
பஞ்சேயு மெல்லடிக் குஞ்சரிகேள்வன் பழனிவெற்பிற்
செஞ்சேவற் கோலம் வரைதரு சேலைத் திருக்கொடியே. (கஉ)

குலக்கற் பகத்தரு நீழலிற் றேவர் குடிமுழுதுந்
துலக்கத் தருவர்ச் செறுங்கதிர் வேலன் றுணைப்பதத்திற்
கலக்கத் தருந்தவர் வாழ் பழனுபுரிக் காவல்செய்வோ
ரிலக்கத் தொடொன்பது வீரரும் பூதரு மென்றைக்குமே. (கங)

தானுநிறைந்த தனிஞானத்தெய்வஞ் சமரசச்சீ
ரானு முனிவர்க் கருள்கூருந்தெய்வ மனிமுரன்று
தேனுர் கடம்ப மலர்மாலைத் தெய்வந் தினமுநம்பி
வானுடர் போற்றிய தெய்வம் பழனி மலைத் தெய்வமே. (கச)

கானக் குறத்தி மணவாளன் றன்னைக் கருமுகிலூர்
வானத்திறைவற் கரசளித்தானை மலைப்பழனி
ஞானக்குரவனை நாடோறு நாடு நலத்தினர்பா
லீனப்புலையர் பகை கோடிசூழ்தரி லென்செயுமே. (கரு)

கொன்றைச்சடைத்தம் பிரான்றரும் பாலன் கொடுங்குணத்தோர்
கன்றைக் கனிமலைவிழிந்தான் மருகன் கவின் பழனிக்
குன்றைக்கண் ணோர்தினங் காண்டொறுஞ் செங்கை குவிக்குமெனக்
கென்றைக் கனுத்துணை யேனுமெய்ப்பேறினி தீருவதே. (கசு)

கந்தப்பனிமலர்ச் செங்கடம் பென்னக் கவின்றருசீர்ச்
சந்தப்பனுவல் புனைவார்க் கிரங்குந் தகைக்குகநின்
சொந்தப் பழனி மலைநாடியன்பிற் றொழுந்த மியேற்
கெந்தப் பகையு மணுகாதபேரின்ப மீந்தருளே. (கஎ)

வையோங்கும் வேற்படை தாங்கிக்கலாப மயினடத்துஞ்
செய்யோய் பழனி மலையாதிபாவெனச் செப்பு மென்பா
லையோவுனதருள் வந்துவந்தாடிய வாடலெல்லாம்
பொய்யோமெய்யோவறி யேனுய்யுமாறு புரந்தருளே. (கஅ)

நீதயை சற்றும் புரிந்திலையாயினென் னெஞ்சநின்மீ
தாதரத்தோடு துதிகூறு மேன்மை யடையுங் கொலோ
மாதவப்பேறும் வழங்காதிரேலொண் மதியுறழ்வெண்
போதகத்தானைப் புரந்தாய் பழனிப் பொருப்பினனே. (ககூ)

பண்டுவிண்ணோர்குலம் வாழப்புரந்து பழனியிலோர்
தண்டுடனின்று விளையாடமோண்புடைச் சற்குரவற்
கண்டுதொழுது துதிபாடி நெஞ்சிற் கருதுமுண்மைத்
தொண்டு செய்வார்க்கவன் வேலுமயிலுந் துணைச்செய்யுமே. (உ0)

சொற்சுவை தேறிய தூய புலமைத் தொழிலுடையீர்
கற்சுவைப் பாங்க ரொரு வேடமாதைக் கரங்குவித்துப்
பொற்சுணங்கார்முலை தோய்ந்தான் பழனியைப் போற்றுமினோ
சிற்சுகவாரியு மெய்தும் பிறவித் தியக் கறவே. (உக)

பாமுகத்தாலுனைச் சந்ததம் போற்றுமெய்ப் பண்படைந்துந்
தீமுகப்பாதகர் பாவிரந் தேங்கித் திரிகுவனோ
சோமுகற்செற்றவன் கண்டரு மாதரைத் தோய்ந்துருகுங்
காமுகப்பண்ணவ னேபழனுபுரிக் காங்கெயனே. (உஉ)

எனக்காசை நின்னருட் பேறென்றிலேநின்றெனையசைக்கு
முனக்காசை செந்தமிழ்ப் பாமாலைமேலென்ப தோர்ந்துகொண்டேன்
மனக்காத லானவெல் லாந்தருமாறுமுன் வந்தருள்வாய்
கனக்காருலாம் பொழிற் றென்பழனுபுரிக் காவலனே. (உங)

அற்பமு நின்னருட் சீராசையின்றி யலமரும் பொய்க்
கற்பனைப் பாவல ரோடெனைப்பார்சொலக் கைவிட்டிடேல்
பொற்பவிர் சோலை வளஞ்சால் பழனிப் பொருப்பின்மிசை
நிற்பவனேயடி யேன்றொழிலாவன நின்னசைவே. (உச)

அன்னமுய்ப் பான்முதற் சொன்மூவர்தாமு மறமழிக்குங்
கன்னல்வில்லான்சம னுதிய தீமைக் கடவுளரும்
பொன்னவிர் மாட மலிபழனுபுரிப் புங்கவனென்
றுன்னவல்லாரெவ ரோவவரேநம் முயிர்த்துணையே. (உரு)

பாகைப் புரையுந் தமிழாற்றுதித்துப் பலர்மனைக்கு
மேகைக்குநாணி பெழுத்தாறு மோதி யிலகுபசுந்
தோகைப்பரிக்குகன் வாழும் பழனித் தொழும்பரைச்சே
ரோகைக் கடற்படி வார்தமக்கூழ்வினை யொன்றுமின்றே. (உசு)

எண்ணியவண்ணமெல் லாம்விளையாடுநல் விச்சை யெய்தும்
புண்ணிய முற்றவ ரன்றே பழனிப் பொருப்பினிற்போய்த்
தண்ணிய சிந்தைய ராய்த்தவவேடஞ் சமைந்துபெருங்
கண்ணிய முத்தமி ழாற்குகன்சீர்த்தி கழறனன்றே. (உஎ)

கழல்வாய்ந்த நின்பதப்பூ ப்புனை சென்னியுங் கண்ணுமுளே
னழல்போன்றுசூழ்வினைப் பேய்க்கஞ்சலாங்கொல்வந் தாண்டருள்வாய்
நிழலோங்கு கற்பக நாட்டண்டர் தாமு நெடிது புகழ்
விழவார்ந்த சீர்ப்பழ னுபுரிமால்வரை வேலவனே. (உஅ)

அந்தணர் கோவைச் சிறைசெய்தவாறு மரிதிகிரி
வந்தவற் சேரச் சமராடு மாண்பு மலைச்சிலையோ
னந்தரங்கத்துறு சந்தேகந்தீர்த்தது மார்த்துரைக்கு
நந்தமர்க்குப்பழ னுபுரி போலு நகரில்லையே. (உகூ)

மானந்தக் கண்ணியர் மோகாந்த கார வலையிடைப்பட்
டீனந்தழையப் பரதவித்தாலு மிகழரிய
தானந்தருமம் பெருகும் பழனித் தலத்திறைவ
னுனந்தவாரி யமுதமொப்பானென் றறிந்தனமே. (கூ0)

மன்றுடையார்தவப் பேறாய்ப் பழனி மலைத்தலையி
னின்றுலவாநல மெந்நாளுஞ் செய்து நிலவுமெந்தா
யொன்றுபட்டேகுமெய்ம் முத்தியின்மேல்பல் லுயிர்வருந்தக்
கொன்று தின்பாரைச் சேறும் வாழ்வென்பாரொ டெற் கூட்டுதியே.

அக்குடனீறு மணிவாரனேக ருருகமையத்
திக்குமுற்றும்புகுந் துன்சீர்த்திபாடுந் திறமருள்வாய்
சேர்க்குமுயிர்த்திர ளெல்லாமு மீளத் தொனித்தபெருங்
குக்குடக்கேதனக் கையா பழனிக் குருபரனே. (கூஉ)

செந்தமிழ்ப் பாடற் புலவோர ளேகர் தினம்பரவுங்
கந்தனைத் தென்பழ னுபுரிக் கோயிலிற் காணப் பெற்று
லந்தரத்தோரு முனிவோரு மோகிப்ப தன்றியெழின்
மந்தரக் கொங்கை மடவாரு மாசிப்பர் மட்டறவே. (கூகூ)

பானலுஞ் செச்சையு நீபமுமாதிய பன்மலரால்
வானவர் போற்றப் பழனிமலையில் வளர்முருகா
நானருள் வேட்டுன் றிருவுருச்சீர்நனி நாடிநிற்கு
மானதத்திற்கு மிடையூறுற்றுலெந்த வாறுய்வதே. (கூச)

வேடிக்கைப் பாவலர் பல்லோரு மென்னை வெறுப்பவுனைப்
பாடிக்கொண்டாடுகின் றேற்கெந்நாளருள் பாலிப்பையோ
தேடிக்கசிந்துரு குந்தன்மையோர்பொதுச் சிந்தையிடை
கூடிக்குலாவு முருகா பழனிக் குவட்டண்ணலே. (கூரு)

நீதித்தவறுடை யார்பலர் கூடி நெடிதுநகச்
சோதித்துள்ளாயினி யெந்நாள் கருணை சுரந்தருள்வாய்
பாதித்தவளப் பிறைப்பல்வெங்கூற்றனும் பற்றவிடே
லாதித்தலைவன் மகவாய்ப்பழனி யமர்கந்தனே. (கூகூ)

தவஞ்செய்யு மார்வம் பெரிதெய்திலேன்மனச் சஞ்சலத்தா
லவஞ்செய்யும் பாதகர் போன்றுழன்றேனினி தாதரிப்பாய்
சிவஞ்செய்யுந்தொண்டர் நிமித்தம் பழனிச் சிலம்பிலென்று
நவஞ்செய்யும் பெற்றிகுன் றுய்சங்கமூன்றுக்கு நாயகனே. (கூஎ)

திடர்க்கலெங்கெங்குந் திரிவான் பழனிச் சிறப்பிலங்கப்
படர்க்கையுந் தன்மையும் பாடத்து வக்கினும் பாவகன்மத்
திடர்க்கடன் மூழ்கு மென் வாயின்பவாரிதி யெய்தியருட்
சுடர்க்கணென்றும்படிக் காங்கவி யேமிகச் சொல்கின்றதே. (கூஅ)

கொல்வாருங் கொன்றதைத்தின்பாருமேனைக் குணம்பொருந்த
வெல்வான் முயலுங் கவுமாரர்ச்சூழ்ந்து மிகப்புரப்ப
நல்வாழ்க்கைத் தொண்டர் பலர்வாழ்பழனி நகர்க்குகன்பான்
மல்வாய்ந்த வேற்படை யொன்றுங் கலாப மயிலுமுண்டே. (௩௯)

காவற்கடவுண் மருகோனெக்காலமுங் கண்ணிமையாத்
தேவர்க்கினிய பெருமாள்பழனிச் சிலம்பில்வந்து
சாவற்ற சித்தர் பலர்போற்றுந் தேசிகன் றன்கரத்துச்
சேவற்கொடித்திற மேபகர்வார்க்குச் செயமெய்துமே. (௪0)

உத்தமச்சற்குரு வாகிப் பழனிவெற் புற்ற செவ்வேள்
கைத்தலமிந்திரர் பற்பலர்க்காத்தது காமர்ச்செவ்வாய்
முத்தமிழ் வாணர் பலர்கேட்க ஞான மொழிந்த தருட்
சித்தரனேகரை யுண்டுமிழாததொண் சேவடியே. (௪௧)

சூலாயுதக்கைப் பெருமான்கண் ணீன்ற சுதன்றெனிக்குங்
காலாயுதக்கொடி யாடும் பழனிக் கடவுணெடு
மாலாயுதந்திரும் பச்செயலாதிய வண்புகழ்தோய்
வேலாயுதத்தைத் தொழுதேயுய்ந்தாரும் வெகுதொண்டரே. (௪௨)

நாதவிந்துக்குமப் பாலுள்ள தாஞ்சுத்த ஞானநல்கிக்
கோதகற்றுங்குரு வான பழனிக் குகன்குதிரை
மாதவர் பற்பல ரஞ்சவெந்தீயிடை வந்துநெடுஞ்
சீதரனூர்வரை போய்வென்றதாமொரு செந்தகரே. (௪௩)

முந்தயிராவணங் கண்டுளநாணுறு மொய்ம்பினதாய்க்
கந்தன் பழனிக் கிரிபோலு ஞானக் களிற்றுருவஞ்
சிந்தனைசெய்பவ ராரேனு மெட்டுணைத் தீங்குமுறு
ரந்தகன் றூத ரவர்நாமங் கேட்பினு மஞ்சுவரே. (௪௪)

சேத்திரம் யாவினு மேலாம் பழனிச் சிலம்பிலண்டர்
நேத்திரம் போன்றொரு தண்டேந்திச் சந்தத நிற்குமெந்தாய்
சாத்திரஞ் சொன்னசொற் போனடவாமற் றவம்பெருகக்
காத்திரப்பட்டுழல் கின்றபொல்லேனின் னடைக்கலமே. (௪௫)

அண்டார நேகர் களிகூரக்கண்டழுக் காறுமுற்றி
யெண்டாங்கு நெஞ்சின ளுத்தளர்ந்தேனுக் கிகபரங்கள்
கொண்டாடு மேன்மை குலவும் பழனிக் குவட்டினிற்குந்
தண்டாயுதக்கை முருகோனல்லாலொரு தஞ்சமின்றே. (௪௬)

காம்பினைப் போலுந் துணைத்தோட்குறத்தி கணவன்விடப்
பாம்பினின்றூடு மயிலோன் பழனிப் பருப்பதத்தான்
சோம்பினரொவ்வொருக் காலெழுத்தாறுஞ் சொலித்தொழினுஞ்
சாம்பிணி யோடு பிறப்பாம் பிணியுந் தவிர்த்திடுமே. (௪௭)

பொய்ப்பேத பாவனைக் கெய்தான் பழனிப் பொருப்பில்வளர்
துப்பேயு மேனிப் பிரான்மடவார்க்கொரு சோரனென்பார்
மைப்பேயுறழ்மத வேண்முதல் வாளியும் வந்துதையா
விப்பேதை நெஞ்சுங் கவர்ந்தானென்றாலினி யென்சொல்வதே. (௪௮)

தாரகனோடொரு குன்றும் பொடியத் தடிந்திடுநின்
வீரவைவேற்கென் மிடிப்பேயைக்கொன்றிடும் வென்றியின்றோ
காரமர்சோலைக் கவின்சாரற் கன்னியைக் கண்டுவரு
நாரதன் சொற்கொளு மோகாபழனி நகர்க்கந்தனே. (௪௯)

உண்டாரவன்னமு நல்கார்தங்கைக்கொடை யுன்னிமிகத்
திண்டாடுவாரொ டெனைச்சேர்த்திடேலருட் சீர்வழங்கிக்
கண்டார்கலியு முடன்றீரக் கான கருணைசெய்வாய்
வண்டாருநீப வனஞ்சூழ் பழனி மலைவள்ளலே. (௫0)

கஞ்சனைக்குட்டிய கையான் பழனிக் கடவுளிரு
செஞ்சதங்கைத்திருத் தாளே கதியெனச் செப்புமென்னை
வஞ்சனக்கண்மட மானூருமூடரு மாணவநோய்
மிஞ்சறிவீனரு மேசிடச் செய்யும் விதிகொடிதே (௫௧)

என்னைக்கிளியெனப் பல்கான்முன் சொற்றனை யேன்றதவந்
தன்னைப்பெரிது முயலாது சோம்பியித் தாழ்வடைந்தேன்
பொன்னைத்தருதுமென் றோதிய மாற்றமும் பொய்க்கவிடேன்
முன்னைப் பழனி முருகாவொராறு முகத்தையனே. (௫௨)

சிவன்முதன்மூவரு மிந்திரனாதிய தேவர்களுந்
தவளமின்னாளு நவவீர ராதியர்தாமுமறிந்
துவகையின்மூழ்க வயலூர்க்கு கேசனெற் கோதியசொற்
குவலயத்தோரொடு பேசவென்றான்மனங் கூசியதே. (௫௩)

பொன்னவிர் கோவிற் பொலிவார் பழனிப் பொருப்பினின்று
பன்னகந்துய்க்கு மயிலேறியாடல் பலபயில்வா
யுன்னருளேவலி தென்றுணர்ந் தேனுக் கொருபிறப்பீண்
டின்னமளிப்பினு மந்தோ நின் சீர்த்தியிழி வெய்துமே. (௫௪)

தாமக்குவளையுஞ் செச்சையுநீபமுந் தண்குரவு
மேமப்பணியும் புனைவாய் பழனிக் கிறையவனே
யீமக்கனலினு மெவ்விதநோயினு மென்னளவுங்
காமக்கடற்சுழி யேகொடிதாகுங் கருதிடினே. (௫௫)

அறுமாமுகத்தமு தேபழனுபுரி யையநின்பாற்
பெறுமாண்பனேக மிருந்தாலு நாற்றப் பிசிதமுண்பான்
குறுமர்முயலுடும் பாடேன மாதிய கொல்லும் பொல்லா
ரிறுமாப் பழிக்கும் வரமெனக் கீந்தருளிக்கணமே. (௫௬)

கொன்றானருந்துஙர்ச் சிறுது கண்டு குறுகுழுத்தி
பொன்றாழிற்றீயதென் றேயெண்ணுமார்வம் பொருத்தியநீ
யென்றாறில் பேறளித் தாள்வாய் பழனிவெற் பிற்றிருந்தண்
டொன்றான்றி நின்றவ னேயுமையீன்ற வொருமகனே. (ருஎ)

பொன்சொற்க நாடு புரந்தோய்செந்நீர்ப்புலைப் பூசைபுகல்
வன்சொற்கவிக்கு மலையிடித்தாயுன்னை வாழ்த்தெடுக்கு
மென்சொற்கணுத்துணை யேனு மிரங்கி யினிதருள்வாய்
மென்சொற்க மாதர் மலிசீர்ப்பழனியின் மேயவனே. (ருஅ)

கோதறுஞானக் குருநாதனேயெனக் கூறிடினு
மாதர்நல்லாரைத் திருடுகின்றனென வைதிடினு
மேதமிலின்பந் தருந்தெய்வமொன்றன்றி யின்றதுதான்
சீதளவாவிப் பழனிக் கிரியிற் றிகழ்கின்றதே. (ருகூ)

எக்காலமும்பழ னுபுரிக் கோயி லிடைநின்றுளாய்
மைக்காலனஞ்சித் தொழும்வீரவாகுவும் வான்முனியு
மக்காலஞ் சாட்சிய தாகநின்வாய்திறந் தக்கனவின்
முக்காலமென்னிமித் தஞ்சொன்னவார்த்தையை முன்னுதியே. (கூ0)

தினகரசந்திர மண்டல மாதிய சீர்த்தலத்து
மனவெளியூடும் பழனிக்கிரியில் வசிப்பவற்கண்
டனவரதம்பொறி யாறுங்கருது மடியவர்க்குக்
கனவுநனவு மொரேபடித்தாகிக் கவின்றருமே. (கூக)

அந்தரத்தோரும் புவியோரும் போற்ற வருட்பழனிச்
செந்தகைக்கோயிலி னூடென்றும் வாழ்குரு தேசிகனே
பைந்தமிழ் பாடிச் சலித்தேனையின்னும் பகர்தியென்றாய்
வந்தனவேறுவல் வேனல்லசீர்ப்பொருள் வைத்துக்கொள்ளே. (கூஉ)

என்னன்மை நீநன்கறிவாயன்றேயெனை யேற்றுக்கொண்ட
நின்னந்தரங்கக் கருணையளவி னிசமறியேன்
பொன்னந்தத் தாமரை வாவிப் பழனி புரக்கவருந்
தின்னந்தனிமுரு காநிறைவாஞ்சச்சி தானந்தனே. (கூங)

திக்குமுழுதும் வெறுத்துன்பழனித் திருச்சிலம்பே
யொக்குமற் றென்றில தென்றோர்ந்தவுண்மை யுணர் கிலையோ
வக்குவடமு முழுநீறுந்தோய்ந்த வடிமையுய்யப்
பக்குவநல்கவல் லாயல்லை யோதண்ட பாணியுனே. (கூச)

உன்றன்சகள வடிவங்கருதி யுறுந்தொறும்வந்
தென்றன்செயலை மறைக்கின்ற தொன்ற திருட்டடையோ
வன்றம்புயன்சொன்ன நூன்முடிவோவறை யாய்பழனிக்
குன்றந்தனிற்றிகழ் சித்தா குமா குருபரனே. (கூரு)

நம்பழனித்தண்ட பாணியைநாடி நலம்பெற்றதா
லும்பரும் போற்றும் புகழ்வாய்ந்த சித்தர்மு னேங்களுண்டேற்
செம்பது மாதனை கேள்வனைப் போன்றிச் செகத்தின்மகிழ்ந்
தம்பரத்திற்சிவன் போல்வாழ்வன் சத்திய மாமறமே. (௬௬)

கல்விக்கடலின் கரைப்பயன் காட்டியென் காதலற
நல்வித்தையாவு மின்னேநல்குவாய்முன் னவிலல்பொய்யோ
வல்விற் குறவர் மகண்மோகனுகஞ்ச மாமலர்ச்செஞ்
செல்விக்கிறைவன் மருகா பழனிச் சிலம்பினனே. (௬எ)

சத்தாகிச் சித்துட னனந்தமாகித் தழைத்தவுன்னை
மெய்த்தாரகப்பொருட் சற்குருவாநண்ணல் வீண்படுமோ
முத்தாரணியுந் தினந்தினம்போற்று முதுபழனிச்
சித்தாவிமயமின் னுண்மென்கை நீங்கருஞ் செங்குருந்தே. (௬அ)

அன்னங்குலவும் வயலூர்ப்பழனிக் கதிபநின்வாய்ச்
சொன்னம்பியின்ப மிக்கெய்திய நானிவண் சோர்வதெண்ணிக்
கன்னங்கரிய மதவேள்செயுஞ்சமர் கண்டிலையோ
வின்னந்துயர்ப்படுத் தேலனுவேனு மிரங்குதியே. (௬௯)

நாரணனுதிய மாரதர்யாவரு நாளுமெச்ச
வாரணகேதனஞ் சீர்ப்பழனுபுரி வாழ்குகனே
யோரணவுந்தனித் தண்டிகைமேல் வந்தன் றென்பிறப்போர்
காரணமென்றசொற் பொய்த்தான்முன் னூல்சொல் கதியும்வம்பே.

என்னுயிரைத்தன் கிளியென்றுபல்விசை யீடில்புகழ்
மன்னுபழனிக் குகவேள்சொன்னனிம்பர் மாந்தர்மதிப்
புன்னுபுநான்சொற் றிலேனிதன்சாட்சி யுயர்பொதியை
முன்னுதவும்புனற் றும்பிரவன்னி முதலியவே. (எக)

தருங்கற்பகத்தரு நீழற்புலவர் தளமுழுது
நெருங்கச்சிகிப்பரி மேலெங்குமேகி நிதம்பழனிப்
பெருங்கற்கிரியினிற் பான்றன்னைநான்மிகப் பேசலவன்
கருங்கற்கிணற்றினு நீரூற்றுண்டாம்விதங் காதலித்தே. (எ௨)

உன்றனக்கென்றெ னுடலாதிமூன்று முதவினனு
லென்றனதென்றொரு நிந்தையுங்கீர்த்தியு மில்லைகண்டாய்
மன்றன்மதிச்சடை வானவற்கோர்சொல் வகுத்துரைத்துத்
தென்றல்வெற்போன்புகழ் சீர்ப்பழனுபுரி சேர்குகனே. (எ௩)

அத்தனதங்க்கண் ணுறினுநதோன்றி யறம்வளர்த்தாள்
கைத்தலத்திற்கனி யாயும்பருருயக் காத்துமெய்ம்மைப்
பத்தர்தங்கோலஞ் சமைந்துபழனிப் பதியில்வந்தோன்
சித்தசன்கண்டு மனநாணத்தக்க சிறப்பினனே. (எ௪)

சாதனமொன்றுமில் லேன்விரதாதி தவமுபலும்
போதமுனிவர் பதப்பூமகரப் பொடிநம்பினே
னீதயைசற்றும் புரியாதிருப்பது நீதிகொல்லோ
வாதவன்போற்றுந் திருவாவினன்குடி யாண்டவனே. (எரு)

பல்லும்பர்தாமு முனிவருஞ்சூழும் பழனிமலைக்
கல்லும்பழமறைச் சென்னியுநாறுங் கழற்குமரன்
சொல்லும்பவளத் திருமேனியும்பசுந் தோகையும்போர்
வெல்லும்பதாகையும் வேலுங்கருதில் வினையறுமே. (எசு)

பொழிலுடுக்குந்தகை சாலும்பழனிப் பொருப்பிலெந்தை
தொழிலடுத்தோர்விருப் பெல்லாங்கொடுத்தலுந் தூர்த்தர்குல
மொழியவைவேல்விட் டொறுத்தலுமாத ருளங்கொளலும்
விழிமயக்கிற்பட்டு மாயாதஞானம் விளம்பலுமே. (எஎ)

ஒண்சுடரோனைத் தடுப்போருமிந்திர னூரழித்துக்
கண்சொரிநீரொ டரமாதர்கோவெனக் காண்பவருந்
தண்செறிசோலைப் பழனிப்பிரான்கொடி தாங்குபுள்ளின்
றிண்சமர்க்கால்வலிக் காற்றுரென்றோர்ந்தவர் சிற்சிலரே. (எஅ)

பெண்சேனைக்கார்மத னுறுமழகன் பிறைமுடித்துத்
திண்சேவிலேறும் பெருமான்புதல்வன் றின்றினமும்
வண்சேர்பழனிக் குமரேசன்றேண்மிசை வைத்திருக்கும்
வெண்சேவல்கூவினல் லாலொருநாளும் விடிவதின்றே. (எசு)

பத்தர்கொண்டாடும் பழனிக்குகனைப் படியிலுள்ள
வெத்தகவோர்களுந் தம்மினத்தானென் றிசைத்திடினு
முத்தமிழ்வாணரு மூவாதமோன முனிவர்களும்
வித்தகச்சற்குரு நாதனென்றேசொல்லன் மெய்ம்மொழியே. (அ0)

ஆழம்பொலிந்த வறிவாளர்போற்று மணிப்பழனி
வாழுந்தணன்றிருத் தாள்சேரவேமிக வாஞ்சித்தநான்
சூழண்டராதிய ரெல்லோருங்காணத் தொழுவதடல்
வேழந்தடிந்திரு குன்றும்பொடித்தசெவ் வேற்படையே. (அக)

சித்தாடுமாசையுற் றுசுமதூரமுஞ் சித்திரமும்
வித்தாரமும்பகர் பாவாணரோடென்னை மேவவைத்துச்
சுத்தாங்கஞான வநுபூதிவெள்ளத்திற் றோய்த்தருள்வாய்
மொய்த்தார்க்கடம்பணி தோளாப்பழனி முருகையனே. (அஉ)

கொங்கார்கடப்பந் தொடையோடென்பாடலுங் கூடவணிந்
திங்காருங்காணப் பிறவாமெய்வீட்டி லெனைவைத்திடாய்
சங்காரஞ்செய்யும் பெருமான்சடிலத் தலைசுமக்குங்
கங்காசுதமகனே பழனுபுரி காப்பவனே. (அ௩)

தனைப்புரைவாரெங்கு மில்லானைப்பார்வதித் தாய்மகனைப்
பனைப்பெருங்கைக்கய மாமுகத்தோன்றுணைப் பண்ணவனைத்
தினைப்புனச்சாரற் பழனிக்கிரியிற் றினம்வணங்கி
நினைப்புமறப்புந் தொலைத்தார்கட்கில்லை நெடும்பிறப்பே. (அச)

தொண்டன்றமிழ்விருப் பாலவன்வேண்டொரு தோகைமுற்போய்ப்
பண்டன்புரைபயின் றூன்றரும்பாலன் பழனிவெற்பிற்
றண்டம்புனைந்துநிற் குந்திருக்கோலந் தனையுணர்ந்தார்க்
கண்டஞ்சிறுகடு காமெனத்தோற்று மகமுகத்தே. (அரு)

பொற்புயர்தண்டமும் வேலும்புனைந்து புகழ்விளைத்து
வெற்புறுசீர்ப்பழ னாபுரிக்கோயிலின் மேயவனைக்
கற்புறுமாத ரெனநாடிநாடிக் கசிதலுமே
யற்புதலீலை பலகோடிசெய்யு மவாவுற்றதே. (அசு)

வாரணங்கூவ மயூரமகவ மறிசெறுமக்
கூரணவுங்கதிர் வேன்மின்னத்தோன்றுங் குருபரனைக்
காரணங்கோடி குலவும்பழனியிற் கண்டுகொள்வா
ராரணம்பேசரு மானந்தவெள்ளத் தமிழ்பவரே. (அஎ)

பந்தேயனைய முலைக்குறமாதொடென் பாற்சிலகால்
வுந்தேமறைந்த் முருகா[illegible] பழனிமலைக்குறவா
நொந்தேங்கிவாடுறுந் தீமையெல்லாமற நோக்கியென்னுட்
சந்தேகமுற்றுந் தணந்தாளவேண்டுந் தருணமிதே. (அஅ)

முத்தமிழ்ப்பாடல் பலபாடிச்சூட்டுபு முன்னுமென்னுட்
பத்தர்தங்கோலத் தொடுதோன்றியாடும் பழனிப்பிரான்
சித்தமகிழ்ந்து தினந்தோறும்வாய்விண்டு செப்பியசொல்
லெத்தனையென்றுசொல் வேனையகோமன மேங்கியதே. (அகூ)

தருவாணர்வாழ்விற்கொர் வேலியன்னான்றிருத் தண்டணிகைக்
குருவாய்ப்பழனி மலைமேனிற்பான்கரங் கூப்பியன்பாற்
பொருவாதவாறெழுத் தும்புகல்வாருட் புழுக்கமற
வருவான்வராம லிரானவனாணைமெய் வார்த்தையிதே. (கூ0)

கலியுகத்துக்கஞ்ச வேண்டாமுலகைக் கடந்துநெஞ்சின்
மலியுமன்பாற்றவ வேடமிட்டெங்கெங்கும் வாங்கியுண்டு
புலியுகைப்பான்றொண்டு கொண்டான்பழனியைப் போற்றிநிற்கிற்
குலிசவலாரியு நாணுமெய்ப்பேறுகை கூடுமன்றே. (கூக)

சாதனைத்தன்மைக் குறமாதுகொண்கனைத் தண்டணிகை
நாதனைத்தென்பழ னாபுரிக்கோயிலி னாயகனைச்
சோதனைக்கஞ்சி மயங்காமற்சந்ததந் தோத்திரிக்கில்
வேதனைக்குட்டிய கைத்திருநீறெய்து மெய்ச்சொலிதே. (கூஉ)

நன்னீர்மையாளர்க் கெளியான்பழனி நகர்புரக்குந்
தென்னீர்மைக்காரன் றெழும்புசெய்வாரைத் தொடர்ந்தளிப்பா
னென்னீருணர்ந்து மிகழாமற்றொண்டனென் றேற்றுக்கொண்டோர்
பன்னீரிலைத்திரு நீறளித்தானண்டர் பார்த்தொல்கவே. (௬௩)

தினச்சாட்சியான பழனிக்குகேசன் செயுந்தொழிற்கெ
வினச்சாட்சியொன்றுமிங் கெய்திடக்காண்கில வீனரஞ்சஞ்
சினச்சாட்சியான திருவருட்பேறு திகழுமட்டு
மனச்சாட்சியாமது போதுமன்றோகலை வாணியின்னே. (௬௪)

பழுதின்றியபுகழ் தோயும்பழனிப் பதிக்குமரன்
முழுதுங்கருணையில் லானல்லனென்னெண்ண முற்றநல்கி
யெழுதும்பிரமன் விதிநீக்கியாள்கில னின்றமிழா
லழுதுஞ்சிரித்தும் பலபாடலுளு மறைந்துளனே. (௬௫)

கோலழிக்குஞ்சித்தர் போற்றும்பழனிக் குவட்டிறைபன்
னூலழிக்குங்கொடி யேனையெள்ளாதன்பி னோக்குகின்றான்
மாலழிக்கும்படி வாழ்த்துகின்றேன்விதி வல்லெழுத்தைக்
காலழிக்குந்திறஞ் சொன்னதன்னேன் றிருக் கைக்கிளியே. (௬௬)

இப்பிறப்பிற்குமுந் தும்பிறப்பின்ன தெனப்புகர்ந்தா
யப்பிறப்பென்னதென் றூற்சகமாயை யணுகுங்கொலோ
வெப்பிறப்பாயினு நன்றேநின்னிணைசற் றீந்தருள்வாய்
பொய்ப்பிறப்பும்பிறந் தாய்பழனுபுரிப் புங்கவனே. (௬௭)

எல்லாமுநின்வடி வேயென்றவேதமும் யாவரினும்
வல்லாயென்றோதிய வாகமக்கூட்டமு மாறுபடா
நல்லாறுகாட்டினை நம்பிச்செல்வேனிவ ணேதனன்றோ
கொல்லார்தொழும்பழ னிக்கிரிமேல்வளர் கொற்றவனே. (௬௮)

எனக்காயிரம்பற் றுளவெனப்பார்சொல்ல விங்குழன்றேன்
மனக்காதனின்மிசை யுள்ளமெய்நின்னுள்ள மட்டறியுஞ்
சினக்காலன்வந்தணு காதாண்முத்தியிற் சேர்த்தருள
னுனக்காங்கடமைகண் டாய்வயலூர்க்குன் றுறைகுகனே. (௬௯)

வலங்காரகனுங் கனலோனுமெச்சு மறிநடத்தி
யிலங்காரத்தோண்மிசை வேலோடுதண்டம்வைத் தெம்பழனித்
தலங்காரமாக்க ராதியகாக்குந் தனிக்குரவ
னலங்காரமுற்று நினைவார்கைக்கொள்வ தருட்செயலே. (௱)

முற்றிற்று.

ஆ கவி க௱.

வேலுமயிலுந்துணை.

# யமகவந்தாதி.



## காப்பு.

விகடவிநாய கவியாற்பழனியின் மேயவென்றி
விகடவிநாயகச் செவ்வேட்கந்தாதி விளம்பவெம்பா
விகடவிநாயகம் வேண்டாமலங்குள்ள வெற்படிவாழ்
விகடவிநாயகன் பாதங்கள்போற்றி விரும்புதுமே.

## நூல்.

### கட்டளைக்கலித்துறைகள்.

திருப்பழனிக்குகப் பான்வெட்குபேரெழிற் சேய்தினம
திருப்பழனிக்கு கனமார்செவ்வேள்பல சித்தர்தொழுந்
திருப்பழனிக்குக னியான்வேட்டபேறருள் செய்யில்வினைத்
திருப்பழனிக்கு கலரோன்செய்தீமையுந் தீர்தருமே. (௧)

தீராதகாமக் கடற்சுழிப்பட்டுத் தினந்தினநொந்
தீராதகாமனத் தின்பிற்செல்லாநலஞ் சித்திக்குமஃ
தீராதகாமத் தவமுமுண்டாம்பெருஞ் சீர்ப்பழனித்
தீராதகாமயி லாவேற்கந்தாவெனச் சிந்தியுமே. (௨)

சிந்தையிலங்கற் கிரிதாழ்த்திலேமறைச் சென்னிநலஞ்
சிந்தையிலங்க விழைந்தேங்குகின்றனந் தீங்கவுணர்ச்
சிந்தையிலங்கரத் தானுலவாப்புகழ்த் தென்பழனிச்
சிந்தையிலங்கசந் தாரிடைச்சேர்த்தருள் செய்யினன்றே. (௩)

செய்யதண்டங்கைய தாகும்பழனியிற் சேய்செயந்தோய்
செய்யதண்டங்கை யணிவான்பதந்தொழுஞ் சீரியர்க்குச்
செய்யதண்டங்கை யடுபோர்க்களங்குன்று சீர்த்தகவி
செய்யதண்டங்கைய வாசித்திமெய்யொடு சேர்முத்தியே. (௪)

சேரன்பராவி யனையான்வண்கேரளத் தெய்வமன்ன
சேரன்பராவிய கோயிற்பழனிச் சிலம்பனுண்ணஞ்
சேரன்பராவியற் பாவாணவென்னத் திருத்தினன்மால்
சேரன்பராவியங் குந்தனத்தார்க்கவர் சித்துளதே. (௫)

சித்தருக்காதர மாகிப்பழனித் திகிரியுற்றாய்
சித்தருக்காத ரகந்தீர்க்கும்வீறுடைச் சீலர்முன்னே
சித்தருக்காதரங் குன்றுதவாறுன் றிருப்புகழ்பே
சித்தருக்காதரத் தக்கவென்னெஞ்சைத் தியக்கிடலே. (௬)

தியக்கந்தராநலம் யாதெனத்தேறிற் சிவந்தருசத்
தியக்கந்தராசில் பழனுபுரிக்குகர் சீர்திகழ்சித்
தியக்கந்தராதியர்க் கோர்தஞ்சமானவர் செம்புகழோ
தியக்கந்தராமுழு வெண்ணீறுபூசித் திரிதரலே. (௭)

திரிசங்கத்தானவில் சேர்த்திப்புலவன் றிருவிழந்த
திரிசங்கத்தானம் பெறகல்கினனன்னர் சிந்தையிற்க
திரிசங்கத்தானன்னு சேரவினன்குடிச் சென்றிறைஞ்சித்
திரிசங்கத்தானவர்ச் செற்றுயர்ந்தார்கள் சிலரல்லரே. (அ)

சிலசந்தமாலைக்கும் பேறளிக்கின்றிலை தீமுற்கொல்லுஞ்
சிலசந்தமாலைவிண் ணிற்றீர்க்குமென்பவர்ச் சிறிகொங்தேச்
சிலசந்தமாலை யனிந்திரனுதியதேவர்கட்குஞ்
சிலசந்தமாலை மலிவயலூர்க்கட்செய் தேசிகனே. (௯)

தேசமனந்தத் தனேகஞ்சிலம்பிற் றினமவிருந்
தேசமனந்தத்தஞ் செய்வாருணருந் திருவருள்வித்
தேசமனந்தத்தன் பாலாபழனியிற் செய்யுமென்னுந்
தேசமனந்தத் தவநீடவேண்டுவ சித்திக்கவே. (௧0)

திக்கத்தியானவை போல்வார்பழனிச்சிலம்பினன்றித்
திக்கத்தியானவை யங்களைவான்றன் றிருப்புகழ்கத்
திக்கத்தியானவை தீரச்செய்வான்பண்டு திண்கையினு
திக்கத்தியானவை யிற்சூரறக்காணச்செய் சீர்பெரிதே. (௧௧)

சிரணியாமதன் கண்டுளநாணத் திகழ்ந்தபெருஞ்
சிரணியாமதர்க் கண்வள்ளிமோகத்திற் சிக்கிக்கொண்டாய்
சிரணியாமத லைப்பெருக்காதிய சேர்பழனிச்
சிரணியாமத மாகாதவாறுன் செயலருளே. (௧௨)

செயலைத்தருதிருத் தேவிடமென்பவர்ச் செற்றவனேர்
செயலைத்தருதி யவரினுந்தீயர்ச் செறல்விழைந்தேன்
செயலைத்தருதிகழ் சீர்வயலூர்க்குக செத்தொழியச்
செயலைத்தருதிக்கைக் காதாரநீயெனத் தேர்ந்துளனே. (௧௩)

தேரலங்காரந் திகழ்வயலூரான் றிருவருளைத்
தேரலங்காரம் விழைந்தேங்குகின்றனந் தெய்வகணத்
தேரலங்காரணச் சென்னியிகழ்ந்த செகமெனும்பேய்த்
தேரலங்காரச் சிவஞானத்தேன்சுவை தேக்கலென்றே. (௧௪)

தேக்கந்தரத்தர்தஞ் சேனுதிபாபெருஞ்சீர்ப்பழனித்
தேக்கந்தரத்த நிறச்சேவலேந்துகைச் சேவகபைங்
தேக்கந்தரத்தடங் குன்றுதொறேத்திநிற் சேரவிச்சித்
தேக்கந்தரத்த திகமெய்தினேற்கருள் செம்புகழே. (௧௫)

செம்பாகமான கவியானிற்போற்றிச் சிறுமியர்சொற்
செம்பாகமானவை தீர்ந்துயக்காத்தரு டீயில்வருஞ்
செம்பாகமானடத் தற்கெனத்தண்ணிய தெண்புனலிற்
செம்பாகமான வயலூரினீடுஞ் சிலம்பினனே. (௧௬)

சிலம்பகத்தையருய் வான்சிவன்றந்தசெஞ் சேய்பழனிச்
சிலம்பகத்தையன் மருநீபமார்ந்த திருவடிநச்
சிலம்பகத்தையலர் மால்வேரறுத்திலஞ் செந்துவர்வாய்ச்
சிலம்பகத்தையவெண் புட்பரியானைச் செயிப்பதற்கே. (௧௭)

பதனம்பதனம் பொன்னேதுணையென்று படிறுசெய்வம்
பதனம்பதனம் பெருகாபத்தென்றுணர் பண்பருள்பல்
பதனம்பதனம் பிறழாச்சிவன்றரு பாலபொய்வெற்
பதனம்பதனம் பழனியப்பாமெய்ப் பரத்துவனே. (௧௮)

பரத்தையவாவுடை யாற்குங்கைக்கிளைப் பதமளித்த
பரத்தையவாவுகைப் போன்புதல்வாதென் பழனியப்பா
பரத்தையவாவுநெஞ் சாற்றளர்ந்தேற்கருட் பார்வைநல்கம்
பரத்தையவாவுட் கனலூடனந்தம் பகர்ந்தனையே. (௧௯)

பகரவிலாசர் பழனிக்கிறையவர் பத்தொடெட்டம்
பகரவிலாசற நின்றூரவரைப் பரவிலர்பல்
பகரவிலாசகக் கொட்டிலைநாடிக்கொள் பாங்கரன்றிப்
பகரவிலாசச்சி தானந்தஞான பலத்தரன்றே. (௨0)

பலகண்டனச்செல்வங் கொள்வாரிகலடும் பன்னிருதோட்
பலகண்டனமொழிக்குஞ்சரிநாயக பற்றுகனற்
பல்கண்டனந்தன தென்பழனுபுரிப் பண்ணவச
பலகண்டனஞ்செயும் பேறெனக்கீந்தருள் பாருய்யவே. (௨௧)

பாரதனத்தனை யன்னமெய்ச்சீரிப் படிறனெய்தப்
பாரதனத்தனை நீயரிற்றீயர் பலர்நிறைந்த
பாரதனத்தனை வோங்கனன்றோதென் பழனிவெற்பா
பாரதனத்தனை பாகற்குஞானஞ்சொல் பாலகனே. (௨௨)

பாலனந்தந்தடி யாரிடைகூட்டிப் பரகதியிற்
பாலனந்தந்தழி யாவாறுசெய்தருள் பாண்டரங்கன்
பாலனந்தந்தங்கு கையான்மருக பழனிவெற்பிற்
பாலனந்தந்தரத் தொண்டரோடாடுமெய்ப் பண்ணவனே. (௨௩)

பண்ணவரையபொன் னூர்க்காவலானைப் பழனிபுகழ்
பண்ணவரையனைப் பாடற்பரிசெனப் பாரதனுப்
பண்ணவரையளித் தானும்பல்லோர்க்கும் பகிர்ந்தழிப்பேன்
பண்ணவரையன்ன சொன்னசின்னூல்களும் பாழ்ப்பவன்றே. (௨௪)

பவமறவாவிவ் வுலகிற்பிறந்தும் பழனியின்வெற்
பவமறவாழ்க்கையெண் ணுநாளும்போக்கினன் பைம்புனலுற்
பவமறவாவள்ளி தெய்வானைநாயக பல்வகைய
பவமறவாசிலென் சித்தியும்வீடும் புரிந்தருளே. (௨௫)

பரியாசமாரத் தொழிலாதியுள்ளவன் பாலமயிற்
பரியாசமானமில் சீர்வயலூர பழிக்கரும்
பரியாசமாளிக் கிலேன்பாறைகெல்லப் பகர்ந்ததொக்கும்
பரியாசமாயிரஞ் செய்தாய்நொந்தேனுயும் பாங்கருளே. (௨௬)

பாங்கனதானம் பொலிசீர்கண்டச்சுறும் பத்தினிகொள்
பாங்கனதானம் பயந்தசெஞ்சேய்தன் பழனிவெற்பின்
பாங்கனதானம் புரிவார்க்கெளியன் பதந்தொழுநட்
பாங்கனதானம் முறவோரெல்லாம்பெறும் பாக்கியமே. (௨௭)

பாக்கியகர்த்தணர் தாள்வ னுமையும் பரமனுங்கொள்
பாக்கியகர்தன் பழனிக்குகேசன் பதத்தின்மெய்யன்
பாக்கியகர்தனி லார்வம்பெருக்கிய பண்பர்முலைப்
பாக்கியகர்தங்கு மின்னார்தரினும் பழிப்பவரே. (௨௮)

பழிக்கப்படாத நடையோடுதோய்தரு பாதகப்பண்
பழிக்கப்படாத கயம்போலுநன்னிலை பாலிப்பையோ
பழிக்கப்படாத மதனுனுஞ்சேர்த்திப் பழனியப்பா
பழிக்கப்படாத விளையாடல்கோடி படைத்தவனே. (௨௯)

படைத்தவனஞ்சண் பகமாதிசூடிய பைங்குழலார்
படைத்தவனஞ்சலர்க் கஞ்சாதவாழ்வருள் பன்னிருதோள்
படைத்தவனஞ்சயின் றுய்ந்தான்புதல்வ பழனியின்வெற்
படைத்தவனஞ்சழக் கெல்லாமறியும் பரதெய்வமே. (௩௦)

பரதவித்தார மடவார்கலவியின் பாசமுற்றிப்
பரதவித்தாரணச் சொல்விகழ்வேனைக்கண் பார்த்தருடற்
பரதவித்தாரகந் தோய்வார்பராவும் பழனியின்வெற்
பரதவித்தார கசியஞ்சில்லோர்க்குச்சொல் பான்மையனே. (௩௧)

பானலங்கண்ணிய ராதியவேட்கை பற்றுமென்னைப்
பானலங்கண்ணியன் றுண்டாயின்றெள்ளல் பழனிவெற்பப்
பானலங்கண்ணி யனந்தமுள்ளாய்வன் பருப்பதமொப்
பானலங்கண்ணியட் டாற்கினியானிற் படியில்லையே. (௩௨)

படிகமனைய வட்குஞ்சிலநூல்சொல் பழனியப்பா
படிகமனைய நிறச்சேவற்கேதனம் பற்றுங்கையாய்
படிகமனையச்செய் வார்ச்சீறென்னெஞ்சப் பரவையிடை
படிகமனையறத் தார்சிலருள்ளும் பதிந்தனையே. (௩௩)

பதிகம்பலங்கதி யென்றுணர்ந்தேற்றுமிற் பாசமிட்டாய்
பதிகம்பலபனு வற்கொண்டும்வேட்ட பயனல்கிலாய்
பதிகம்பலத்தில்வைத் தேத்தற்பமன்னர்தம் பாலும்விடேல்
பதிகம்பலம்பப் பழனியப்பாவருள் பக்குவமே. (௩௪)

குவலயமாலை யணிந்தோட் குருவிற் குலவியிந்தக்
குவலயமாலைத் தணந்தென்னையாண்டருள் கோட்பொருந
குவலயமாலையர் தம்பாற்சொல்சீர்த்திக் குகாகுறிச்சிக்
குவலயமாலையன் றுய்வயலூர்நங் குலதெய்வமே. (௩௫)

குலவரையாவும் புரந்தேதபழனிக் குவட்டின்மிசை
குலவரையாகுறக் கோதைபெய்யூடற் குறித்தெழுமா
குலவரையாகத் திருவர்தம்பால குறைவிலிசைக்
குலவரையாமறைச சென்னியின்ஞானங் கொடுத்தருளே. (௩௬)

கொடுவரியன்னமுன் னேலென்றனேகர்முற் கோரஞ்செய்யுங்
கொடுவரியன்னமன் னர்ச்செறுமார்வங் குறிப்புவர்க்கைக்
கொடுவரியன்னலத் தெந்தாய்பழனிக் குமரவைவேல்
கொடுவரியன்னதன் மாவோடுதீயவெவ் கோபத்தனே. (௩௭)

கோபத்தனமற வாவிதழார்மயற் கோட்டியுற்றுங்
கோபத்தனமறம வேட்டேனென்றீயுங்கொல் குற்றமலி
கோபத்தனமுற தார்சூழ்பழனிக் குவட்டில்வளர்
கோபத்தனமற மென்பார்க்கறுவுங் குணக்கந்தனே. (௩௮)

குணக்கந்தவிருட் பேறுறநாடிக் குலைகுலைந்து
குணக்கந்தவிரவெல்லாமுனோற்றுக் கொழுப்புடன்மிக்
குணக்கந்தவிரதத யெய்தார்பழனிக் குலவரைச்ச
குணக்கந்தவிரடற் றேட்கிள்ளை வாய்த்தமிழ் கூறலரே. (௩௯)

கூறங்கமாறு மறைநாலும்போற்றுங் குகன்புகழ்ச்சி
கூறங்கமாறு குடைவார்க்குருகுங் கொலைஞருக
கூறங்கமாறுதிக் கும்பழனுபுரிக் கோயிலுட்புக்
கூறங்கமாறுதக் கன்புரைதீச்சொற் கொடிதிலமே. (௪0)

கொடியவனந்தனைக் குங்கருணைகரன் கோதில்குறக்
கொடியவனந்தனை வேட்டோன்பழனிக் குகன்பொருகாற்
கொடியவனந்தனை யர்க்கோதுஞ்சீர்த்திக் குழகனெவி
கொடியவனந்தனை யாசசெயதோகையன் கோலநன்றே. (௪௧)

கோலமனந்தம விளைத்தான்பழனிக் குவட்டின்மிசை
கோலமனந்தம புனைவானவனைக் குளிர்மனத்தாற்
கோலமனந்தம் பதஞ்சூட்டியாளக்கைக் கொண்டுளதோர்
கோலமனந்தம் பகைஞரெல்லோரையுங் கொல்லவென்றே. (௪௨)

கொல்லாவிரதம் பயக்குந்தசையதென் கோருக்குங்
கொல்லாவிரதம் புகட்டநட்டேற்கருட் கொற்றநல்காய்
கொல்லாவிரதம்பி னெய்தல்பொய்யோநலங் கூர்பழனிக்
கொல்லாவிரதம் பலநூறுகைக்குங் குருபரனே. (௪௩)

குருத்தத்துவத்தன் பழனிக்குகேசன் கொழுஞ்சிவத்தின்
குருத்தத்துவன்னப் பெருமாள்சகாயங் குறிக்கொண்டுளார்க்
குருத்தத்துவர்தனு காதெண்ணமியாவுங்கை கூடும்பொற்
குருத்தத்துவர்புகழ் சித்தாடிவீட்டிற் குறுகுநரே. (சச)

குறுக்காதடம்ப முருகாகுறவர் குறிச்சிவையுங்
குறுக்காதடம்பழ னிக்குன்றுளாய்தொனிக் குஞ்சிமணிக்
குறுக்காதடம்பழிக் கஞ்சாதநெஞ்சைக் கொடுஞ்சமன்மிக்
குறுக்காதடம்பண் ணிடாதினிதாண்டுசொல் குன்னமொன்றே. (சரு)

குன்னம்பகர வடிவாபழனிக் குவட்டினில்லை
குன்னம்பகரவி லார்க்கெளியாயருட் கூறிலர்பாங்
குன்னம்பகாஞ் செயத்துணியேமுற் குலவியொரு
குன்னம்பகர விசைவாய்பலருட் குறையறவே. (சசு)

குறையறவாவிர விற்போய்த்திருடுங் தொடியரநு
குறையறவானந் தரைநீங்கிடேனுனைக் கூவுமென்னுட்
குறையறவாவு மயின்மேல்வந்தாள்புனற் கோதைதருங்
குறையறவாணர் களிகூர்பழனிக் குடையினனே. (சஎ)

குடையாடியக்கு மிகழ்ந்துபழனிக் குலகிரிமேற்
குடையாடியபதம் வேட்டோர்விண்ணோர்தங் குடிமுழுதுங்
குடையாடியற்கையு மோர்காற்புணர்வர் குணக்கமில்பாங்
குடையாடியன்ன பொதுநோக்கவர்பெருங் கொள்கையன்றே. (சஅ)

கையணிசத்திக் குகவேள்சிவன்புணர் காமர்மென்கொங்
கையணிசத்திருக் கற்பீன்றபாலன் கவின்பழனிக்
கையணிசத்திரத் தெந்தைகருணைக் கடல்படிந்தாற்
கையணிசத்தின் றுயர்யாவுந்தீர்தருங் கண்டெய்ம்மினே. (சகூ)

கண்டவகண்டக் கலப்பாயஞானக் களிப்புடையார்
கண்டவகண்டம் புரைசொற்குறத்தி கணவபெரு
கண்டவகண்டலர்க் கெய்த்தேன்பழனிக் கனசிலம்பின்
கண்டவகண்டனர்க் காகாததாமெய்க் கருணைசெய்யே. (ருo)

கருமங்கடந்தழைத் தார்பதப்பூந்துகட் காதலுற்றுங்
கருமங்கடந்த பெரும்பேறுநல்கில காத்தருட
கருமங்கடர்தரு வேழமுமூர்குக காவியைநி
கருமங்கடந்த புதல்வாபழனியிற் காவலனே. (ருக)

காவலனுதி யலாநலமாதிய காதலிப்பார்
காவலனுதி யகண்டபராபரங் கான்பழனிக்
காவலனுதி யருள்சேயென்பார்க்குங் கருணைசெய்வான்
காவலனுதியர்க் கோசெமனுயதென் காரணமே. (ருஉ)

காரணியானை யுடனீன்றசேந்தன் கடற்றுயின்ற
காரணியானைய ராதாளும்வேற்கைக் கடவுளெழு
காரணியானையர் சூழ்தரவாழ்தல்செய் கந்தன்முடிக்
காரணியானைநட் டான்சேய்பழனிநங் காணியன்றே. (ருங)

காணியனைத் தனப்பால்சொரியுங் கவுரிகைச்சேய்
காணியனைடி யார்திருக்கூட்டக் கவின்பழனி
காணியனைதற் கேவனைகேனெனைக் காயிலுய்யாய்
காணியனைவெங் காமன்சினேகக் கலிப்பையலே. (ருச)

கலியனஞ்சப்பிறப் பேழுந்தவிரக் கரியனத்தார்
கலியனஞ்சஞ்சல மின்றிப்புணரக் கருதுகின்றீர்
கலியனஞ்சண்முக வேள்வயலூர்ப்புகழ் கற்றிகல்வோர்
கலியனஞ்சன்ன கவுமாரர்ச்சேர்மின் கருத்திசைந்தே. (ருரு)

கருத்தனையாண்டதிற் சூர்மாயச்செய்த கடற்பெருக
கருத்தனையாண்டலைக் கேதனத்தான்றன்னைக் கண்ணிற்றந்த
கருத்தனையாண்ட குருநாதனூர்வங் கமழ்பழனிக்
கருத்தனையாண்டண்ட ரீண்டைப்புலவர்கணத்தண்ணலே. (ருசு)

கணக்காவலாரளி சூழ்கடம்பாரத்த கண்புரையுங்
கணக்காவலாளதிருவாவினன்குடிக் கந்தவொன்னார்
கணக்காவலாரனை யாரையுமேசுதற் கண்டுநொந்தேன்
கணக்காவலாரி முதலோருமெச்சுங் களிப்பருளே. (ருஎ)

களிக்கடலாரனங் கன்பகைத்தீமை கழித்துனருட்
களிக்கடலாரணச் சென்னியினுலருள் கண்டத்தினிற்
களிக்கடலாரத் தலையணிவான்மைந்த கானவர்ம
களிக்கடலாரத்த வன்னுபழனிக் கழகத்தனே. (ருஅ)

கழகத்தவரையன் றுதரித்தாய்நிற் கருதுமன்பாற்
கழகத்தவரையந் தீர்ப்பாய்பழனியிற் காட்டுமெய்ப்பு
கழகத்தவரை யணங்கின்றபால கருணையையி
கழகத்தவரை யரப்பெறுகார்வக் கடலருளே. (ருகூ)

கடலையருந்திய மாமுனிதேசிகன் கண்டத்துற்ற
கடலையருந்திய சீர்க்கானசேய்கருங் கட்குறம
கடலையருந்தியக் குற்றுன்பழனியைக் காதலியார்
கடலையருந்திய கான்வேடர்தம்மிற் கீடயவரே. (கூ0)

கடையத்தகுந்த வமுதன்னசொல்லியர் காதல்விஞ்சிக்
கடையத்தகுந்தனப் பூண்கொண்டுழல்பவர்க் காணவிடேல்
கடையத்தகுந்தரன் ஞர்க்கரியாய்கொலைக் காதகரைக்
கடையத்தகுந்த முருகாபழனிக் கவின்கந்தனே. (கூக)

கவிநயங்கண்ட புலவோர்க்கெளியன் கனலும்வெட்குங்
கவிநயங்கண்டர் சிறைமீட்டசேவகன் கார்மலிவாற்
கவிநயங்கண்ட பழனிப்பெருங்கிரிக் காவலன்மிக்
கவிநயங்கண்டலை யிற்பதஞ்சூடுங் கனவினிதே. (௬௨)

கனகவித்தாரணி சேய்பழனிப்பதிக் காதலன்பர்
கனகவித்தாரமுங் கார்கடல்சூழ்பெருங் காசினியுங்
கனகவித்தாரகை யன்னமுத்தாரங் களபமிட்டுக்
கனகவித்தாரமிக் குங்கொங்கைமாதருங் கைப்பவரே. (௬௩)

கைப்பகட்டானையங் காட்டுங்கணிகையர்க் கண்டுருகாக்
கைப்பகட்டானை வுருத்தவமாதிய காமர்துதிக்
கைப்பகட்டானைக் கிளையாற்பழனியிற் கண்டுவன்ப
கைப்பகட்டானையட் டான்பெற்றதாரகங் கற்றவர்க்கே. (௬௪)

கற்றனமங்கையர்க் கன்பரைச்சில்புன் கவிஞர்சொல்பாக்
கற்றனமங்கையி லேற்றுண்கிலேந்தவங் காதலித்தேங்
கற்றனமங்கை யடைகின்றிலேஞ்சிவன் கண்ணருண்ம
கற்றனமங்கையஞ் சேர்வயலூரினிற் காணலென்றே. (௬௫)

காணலங்காரக் கடம்பன்பழனிக் கடவுண்முதிர்
காணலங்காரப் பணியான்மருகன் கலைகவர்த்க்
காணலங்காரம்ப முற்றுண்மெய்காய்ந்து களைக்குமினிக்
காணலங்காரங் கொடுவரப்போதிசெங் காலன்னமே. (௬௬)

காலசகாயங் குறித்தேங்குமென்னைக் கலங்கவிட்டாய்
காலசகாயமு நேரச்செய்யேல்பொதுக் கண்ணடஞ்செய்
காலசகாயக்க னேத்தும்பழனியிற் கந்தவங்கி
காலசகாய முகைப்பாய்முற்றேன்றுபு காத்தருளே. (௬௭)

காத்தகரத்தகு வர்ச்செகுத்தாய்குறக் கன்னிகைசங்
காத்தகரத்தழு லுண்டான்புதல்வ ககனமுனிக்
காத்தகரத்தரு ணத்துகைத்தாய்புனல் கால்வயலூர்க்
காத்தகரத்தண்ண லேயென்னையாண்டுட் கலந்தருளே. (௬௮)

கலந்தமனத்தச் சவியேம்பகட்டிற் கனன்றெழுமி
கலந்தமனத்தக் கயிறஞ்சினேம்வந்து காவயலூர்க்
கலந்தமனத்தன் மருகாபொருவில் கருணைவெள்ளங்
கலந்தமனத்தர்கண் காணுறச்சூழ்பிர காசத்தனே. (௬௯)

சத்தங்கடத்தமிற் போராடநின்று தழைத்தபெருஞ்
சத்தங்கடத்த ரநுபூதிச்செல்வர் தனிப்பிரகா
சத்தங்கடத்தறச் சாடுஞ்சகாயந் தணக்கருநி
சத்தங்கடத்தரும் போற்றப்பழனித் தலத்துற்றதே. (௭௰)

தலம்பலவேட மனந்தம்பழனி தனிலமர்கா
தலம்பலவேட்கையு மங்ஙனமாகுந் தனித்தெனுள்ளோ
தலம்பலவேதனை தாழுமனேகர் தழல்விழிநு
தலம்பலவேதியன் செய்தவமாங்குகன் சம்பந்தமே. (எக)

சம்பவமானவிர் பாகத்தில்வாழ்குயி றன்வயிற்றிற்
சம்பவமானவ தண்வயலூர்க்குக சாற்றென்சொன்னி
சம்பவமானவர் கூடிநகலிற் றயங்கிமுகஞ்
சம்பவமானமுற் றேனையகோவெனைத் தாங்குதியே. (எஉ)

தாங்குதிரைக்கட லைக்கொண்டுவிட்டவன் றன்னொடுள்ளீர்
தாங்குதிரைக்கட லைப்பொனல்காரையுஞ் சார்ந்திரந்தெய்த்
தாங்குதிரைக்க டலைப்பநொந்தேம்வின் டனைக்கடந்துந்
தாங்குதிரைக்கட லைப்பழனிக்கட் டரலளித்தே. (எரு)

தரக்காதிவிட்டய மாதிகொல்பாதகர் தந்திறன்மாய்
தரக்காதிவிட்டங்கு கின்றூர்புலையுந் தணப்பநல்காய்
தரக்காதிவிட்டத் தனிவீட்டெந்தாய்துதித் தார்தமதா
தரக்காதிவிட்டறை சீர்ப்பழனுபுரிச் சண்முகனே. (எச)

சண்மதவாணவத் தோரரசாள்கை சகிக்கின்றிலேன்
சண்மதவாணனிக யரீர்முலைமோகத் தறிக்கட்டுண்டேன்
சண்மதவாணருங் கொண்டாடும்பேறு தருதிபவுஞ்
சண்மதவாணல னன்னூர்பழனி தனக்கரசே. (எரு)

தனதனத்தானவென் றூடியநாதர் தழல்விழிச்சேய்
தனதனத்தானந்தந் தோயும்பழனித் தலைவனன்பர்
தனதனத்தான நிறத்தாமரைத்துணைத் தாள்விழைவார்
தனதனத்தானங்கள் வேண்டாரென்பாரது சத்தியமே. (எகூ)

சத்தியசாதன முள்ளார்செய்வேள்வித் தழல்வருமா
சத்தியசாதனச் சீர்சால்பழனித் தலைவதிண்கைச்
சத்தியசாதனட் டார்க்கரியாய்தமிழ்த் தத்தைபகர்
சத்தியசாதன வேடமிட்டேற்கிசை சற்றருளே. (எஎ)

சற்குருதேசிகழ் கின்றூர்க்கரிது சடாக்கரனே
சற்குருதேசிகண் டொல்குந்தனத்தர் தமக்கெளிதஞ்
சற்குருதேசிகந் தார்சூழ்பழனித் தடங்கிரிக்கோ
சற்குருதேசிகர் யாவருமான தனித்தெய்வமே. (எஅ)

தனித்தகந்தாங்கு முருகாமெய்யன்பர்க டாமறியத்
தனித்தகந்தாபழ னுபுரிக்கோயிற் றலைவசகத்
தனித்தகந்தாயமன் னர்க்கஞ்சிவாடித் தயங்கினனெத்
தனித்தகந்தாது பெரிதோங்கச்சற்றுந் தயைசெய்தியே. (எகூ)

தயவிலையாமனை யான்மருகாசிவன் றன்விழியு
தயவிலையாபழ னிக்குமராமெய்த் தவத்தர்தம்பி
தயவிலையாவடி யேன்மிசைநிற்கொர் தவிடளவுந்
தயவிலையாவன்று தானேவந்தாண்டதென் சாற்றுதியே. (அ0)

சாற்றியவேதனை யந்தோய்பழனிச் சரவணசெஞ்
சாற்றியவேதனை தீர்க்குந்தண்டாயுத சந்ததஞ்செய்
சாற்றியவேதனைத் துந்தெரிவாயெனைச் சண்டன்வெந்நச்
சாற்றியவேதனை யன்கையணுகத் தணந்திடலே. (அக)

தணவாதவாகன வேளொஞ்சுமார்வ தடம்புனத்தி
தணவாதவாகனந் தோய்வயலூர சதுமுகவந்
தணவாதவாகனம் புந்தொண்டர்நெஞ்சிற் றனித்துச்சொன்மந்
தணவாதவாகன சன்மவிடாயறத் தாக்குதியே. (அஉ)

தாக்கணங்காசை மலிந்தெய்த்துளேனைத் தயங்கவிட்டாய்
தாக்கணங்காசை மலர்போற்செறிந்தது தந்தருள்சே
தாக்கணங்காசைக் கெடாதுவிடேனிது சத்தியம்பி
தாக்கணங்காசையி லத்தாவினன்குடி தங்கினனே. (அங)

தங்கவில்லானை யுரியாதிகொண்டவிர் தானுதன
தங்கவில்லானை வுறுதண்டர்வாழத் தருங்குகன்ப
தங்கவில்லானைந்து வன்னம்பொலிதண் டமிழ்வயலூர்
தங்கவில்லானையப் பாட்டிசைத்தார்பவ றவத்தினரே. (அச)

தவசங்கமாகம வேதசித்தாந்தத் தனிநிலைதோய்ந்
தவசங்கமாகர்தம் போகம்வெறுக்குந் தகுதிநல்கெந்
தவசங்கமாகவின் குன்றுப்பழனித் தடங்கிரியா
தவசங்கமாகங் களத்தார்தம்மோகந் தலைக்கொண்டதே. (அரு)

தலையாறுளப முடியோன்மருகன் றபனமுடித்
தலையாறுளவன் றவவேடங்கொண்டொரு தண்டணிசேய்
தலையாறுளவரு மைக்குரியோன்றினந் தன்பழனித்
தலையாறுளவறிந் தோர்வந்துவேண்டுவ தந்திடுமே. (அசு)

தந்தக்கரியளித் தாற்கடலாழி தருங்குகனைத்
தந்தக்கரியறி யச்சிலநூல்பகர் சற்குருவைத்
தந்தக்கரியற் கவியாற்பழனி தனிற்றுதித்துத்
தந்தக்கரிய பதம்பெற்றவாறு சகஞ்சொல்லுமே. (அஎ)

சகத்திரயத்து மிளிர்தென்பழனி தனைப்புகழ்ந்து
சகத்திரயத்துழ லாதுய்கைவேட்டுளன் றூழ்வருவஞ்
சகத்திரயத்து மெனையெள்ளிடேன்மின் றயைமலிநெஞ்
சகத்திரையத்து விதத்தாற்றணக்குஞ் சரவணனே. (அஅ)

சரவணக்கஞ்சகிற் கொள்ளுமின்னூரடி தாழ்ந்தல்குகச்
சரவணக்கஞ்சமன் வேட்காட்படாத்தவர் தந்தருள்குஞ்
சரவணக்கஞ்சடை கொண்டான்றுணைவ தடந்திரைநீர்ச்
சரவணக்கஞ்சத் துதித்தாய்பழனித் தமிழ்வள்ளலே. (௮௯)

வள்ளத்தனத்தையன் போல்வாழவேண்டி வழுத்தெனக்கு
வள்ளத்தனத்தைய மிட்டாய்கொங்தேனென்று வாழ்விப்பையோ
வள்ளத்தனத்தைய சீராவினன்குடி வாணகண்டு
வள்ளத்தனத்தைய லார்மனநாணு மயிலப்பனே. (௯௦)

மயில்வாகனன்மறைச் சீருணர்ந்தார்செய் மகமுதவு
மயில்வாகனகனத் தெங்கனுஞ்சென்று வருங்கலப
மயில்வாகனபழ னுபுரிக்கோயில் வயிற்குலவு
மயில்வாகனனுண ருண்மைபொய்த்தானிற்கு மானமின்றே. (௯௧)

மானத்தனனளித் தானடியேனுஞ்செய் வாஞ்சையுற்றேன்
மானத்தனனந்த மீந்தருள்வாய்விடை வாகனத்து
மானத்தனனத்து முற்றேற்றினுய்தொண்டர் வாழ்பழனி
மானத்தனன முருகாவென்பாற்சற்றும் வஞ்சியலே. (௯௨)

வஞ்சிக்குமாரகத் தார்பாலுமேற்று மனமிளைத்தேன்
வஞ்சிக்குமாரண் கனையாலுகொந்துளன் வந்தருட
வஞ்சிக்குமார கசியம்புனத்தில் வசித்தகுற
வஞ்சிக்குமார மளித்தாய்பழனி மலைக்குகனே. (௯௩)

மலையனந்தத்துள வற்சேர்ந்துளான்கண்ணில் வந்தவிர்ந்தாய்
மலையனந்தத்துள ஞானந்தெரிய வகுத்துரைத்தாய்
மலையனந்தத்து ளணிசால்பழனி வரையிலெந்தாய்
மலையனந்தத்துளத் தைச்சுடநீர வரநல்கிடே. (௯௪)

வரதக்கராகுல ராகத்திகழ்சித்தி வாழ்வுற்றுத்தே
வரதக்கராபவர் தம்மோடெற்சேர்த்தருண் மாய்விலன
வரதக்காசலத் தோழாமலரில் வயங்கபய
வரதக்காபழ னித்திருக்கோயிலில் வானவனே. (௯௫)

வானத்தரங்கம் புரப்போன்பழனி மலைக்குமரன்
வானத்தரங்கப் பெருமாண்மருகன் வழுவில்கன
வானத்தரங்கக் கடன்மாவட்டோன்றொண்டர் வாய்ச்சொல்விழ
வானத்தரங்கண் மணியானதீடின் மகத்துவமே. (௯௬)

மகவானையாண்ட வயலூரனுதி மதலையன்றே
மகவானையாண்ட வயலூரனுதி மதலையன்றே
மகவானையாண்ட வயலூரனுதி மதலையன்றே
மகவானையாண்ட வயலூரனுதி மதலையன்றே. (௯௭)

மதலையளித்தவர் கொண்டாடுஞ்சீர்த்தி வளவயலூர்
மதலையளித்திலங் குஞ்சுத்தஞானஞ்சொல் வாய்மலர்ச்சேய்
மதலையளித்தரைத் தொட்டுப்பொட்டிட்டுள்ள வானுதலெம்
மதலையளித்தனை யாரத்திற்கொள்வது வண்டமிழே. (சுஅ)

வண்டமிழ்ந்தாரணத் திற்பிறந்தார்சொல் வதுமிகத்து
வண்டலங்காரஞ் செயச்சோர்ந்துளாரையும் வாழ்விப்பது
வண்டலங்காரக் கடம்பன்றனுடன் மலிவதுநீர்
வண்டலங்காரம் வயலாவினன்குடி மால்வரையே. (சுசு)

மாலவனத்தத்தை வென்மாண்புதவு மயிற்குகன்சீர்
மாலவனத்தத்தை போலப்பழனியில் வாழ்ந்ததுநர்பான்
மாலவனத்தத் தையல்சூழ்மிடியற வந்தணைவான்
மாலவனத்தத்தை யங்குங்கமல மலர்தந்திருவே. (எ)

முற்றிற்று.

ஆக — கவி — சா.

வேலுமயிலுந்துணை.

---

## திரிவுமஞ்சரி.

### கட்டளைக்கலித்துறைகள்.

நீராவினன்குடி யென்றுங்கொண்டாறக்கன்று நீயுணர்த்தும்
பேராவினன்குடி முற்றுய்யுமாறு பிறங்கச்செய்வாய்
காராவினன்குடி லைத்தொனியஞ்சிக் கரங்குவிக்குஞ்
சீராவினன்குடி யானேகல்லாபச் சிகாவளனே. (க)

துழனிமலைய முனியாதியாயமெய்த் தொண்டர்மலர்க்
குழனிமலைமடி மேலெண்ணுநின்னைக் குறித்துநின்றேன்
கழனிமலைகரிச் சாரனகரங் கவின்றருசீர்ப்
பழனிமலைக்குக னேயடியேனைக்கண் பார்த்தருளே. (உ)

பெருவாவினன்குடி வாழ்வுறச்சூரற் பிளந்ததினுங்
குருவாவினன்குடி னீத்துவந்தென்னைக் கொளலரிதோ
கருவாவினன்குடி லங்கலன்னூர்க்குங் கருணைசெய்யுந்
திருவாவினன்குடிச் சேயேசுறைவில் சிவானந்தனே. (ங)

பொருப்பழனின்ற பதிக்கோபுரத்திற் புகன்றநின்சொல்
விருப்பழனித்தநின் மீதவதூறு விளம்புகின்றேன்
குருப்பழனித்திலக் கொத்தன்னவெண்பற் குறத்திபுணர்ந்
திருப்பழனிக்குரு நாதாவந்தாண்டருள் சீக்கிரமே. (ச)

நஞ்சேவலங்கொ டிருநோக்குள்ளார்மிசை நாட்டமிஞ்சிக்
கெஞ்சேவலங்கொடி யாரிடம்போய்ப்பிச்சை கேட்டுநொந்தே
முஞ்சேவலங்கொ டிமையார்பராவ வொளிர்வதென்றோ
செஞ்சேவலங்கொடிச் சீர்ப்பழனுபுரித் தேசிகனே. (௫)

அகிவாகனங்கையிற் சங்காழியானய னண்டர்தொண்டர்
மகிவாகனந்தம் பெறச்சூர்ச்செற்றுயென்றன் வம்புமுற்றுஞ்
சகிவாகனத்த வநுபூதிநல்கிநிற் சாரச்செய்பொற்
சிகிவாகனப்பெரு மாளேபழனிச் செயசித்தனே. (௬)

அந்தகராள ரனேகர்வந்தாலு மடக்கும்வலி
தந்தகராளரி யன்னுனைவென் றனைப்புரப்பாய்
வெந்தகராள குணத்தாற்கனலில் விரைந்துதித்த
செந்தகராளவல் லாய்வயலூர்ச்சிவ தேசிகனே. (௭)

ஈனக்கரியன்ன புன்னெஞ்சமாந்த ரிகழநொந்த
நானக்கரியன்மெய்ப் பேறுறவேட்பது ஞாயமன்றோ
வானக்கரிய துணையாயபத்தொடு வால்வரைநேர்
ஞானக்கரியது மூர்வாய்ப்பழனி நகர்க்கந்தனே. (௮)

புயலூரவாவொழி யான்முதலோர்வந்து போற்றத்தக்க
செயலூரவாழ்வும் பிறர்க்கீயுமாறெனைத் தேற்றிக்கொள்வாய்
கயலூரவால்வளை யஞ்சியிவருங் கமலமலி
வயலூரவாவு மரகதத்தோகை மயூரத்தனே. (௯)

வெந்தனக்குன்றலில் வேடரும்போற்றும் வியன்பழனிக்
கந்தனக்குன்ற னடியாரையெள்ளுங் கயவர்க்கஞ்சி
நொந்தனக்குன்றவந் தானுமில்லாரி னுடங்கவிடேல்
சந்தனக்குன்ற முனிக்கீந்தமெய்ப்பொரு டந்தருளே. (௧௦)

வெம்மலவாதனை நீக்காதமாண்புறும் வீரவைவேற்
செம்மலவாதனை யத்தோர்குரவன் சிருட்டிசெய்யுங்
கம்மலவாதனை நீடும்பழனி கருதுநர்க்கு
மும்மலவாதனை யுந்தீர்த்துச்சந்தத முன்னிற்குமே. (௧௧)

பெருகக்கடவு டுணையம்பெறவும் பிறங்கறங்க
டருகக்கடவு டுணைமாண்புறவுந் தழைதினைமா
விருகக்கடவு டுணைப்பேதைகொங்கை விழைபழனி
முருகக்கடவு டுணையென்றுநாளு மொழிதனன்றே. (௧௨)

தவகுருநாதந்த தோத்திரங்கொண்டும்பர் சாவொழித்தாய்
பவகுருநாதமென் றண்டுந்தருவர் பலரையட்டாய்
குவகுருநாதமட் டாய்க்கடந்தாய்நலங் கூர்வயலூர்ச்
சிவகுருநாதவென் றீவினைதீர்த்தருட் சீரருளே. (௧௩)

கண்ணுமலேக்கி ளிலங்குமுலேயைக் கருதிநையப்
பண்ணுமலேக்கிளி சாராதளிக்கும் பதமருள்வாய்
தண்ணுமலேக்கிளி முந்நீரிற்சந்தத் தமிழெறிந்த
வண்ணுமலேக்கிளி யோனேபழனி யமர்குகனே. (கச)

தந்தரத்தேவர்க்கும் வேண்டுவசெய்கிலர் தம்மைக்கெஞ்சி
நொந்தரத்தேவதிற் றேன்றுங்கண்ணூர்முன் னுடங்கனன்றே
கந்தரத்தேவழங் குந்திறமீகுதி கண்ணிமையா
வந்தரத்தேவர் தலேவாபழனி யசலத்தனே. (கரு)

அமலாதனனேயந் தேங்குகின்றேனே யகற்றலரு
முமலாதனனேத்த பஞ்சாகச்செய்குதி மூரிவைவேற்
சமலாதனனேயர் சீர்வயலூர சதுமறைதேர்
கமலாதனனேப் புடைத்தாய்குன்றுமெய்க் கருணையனே. (கசு)

திங்கணச்செங்கர கத்தாளத்தாடிய சித்தர்கள
மங்கணச்செங்கரம் போலுங்கண்ணூர்க்கய ராதருள்வாய்
வங்கணச்செங்க ரணத்தார்பழனி மலேபுரக்குங்
கங்கணச்செங்கர மீராறுகொண்டவிர் கந்தப்பனே. (கள)

மண்டம்புனேந்த கையவாரிமாமர மாயவட்டான்
விண்டம்புனேந்தகை தோய்ந்தான்விளாவில்வம் வெண்மதியத்
துண்டம்புனேந்தகை தீர்சடையான்மைந்தன் றேமில்கொற்றத்
தண்டம்புனேந்தகை யானேபழனித் தலத்தண்ணலே. (கஅ)

சக்கரமாறுக டீர்சதுர்வேதன் சமரொழித்து
மைக்கரமாறுத லெய்தவுண்டான்மகன் வாய்ந்தபெருஞ்
செக்கரமாறுகி லான்வயலூரிற் றினமும்வசித்
தக்கரமாறு முரைப்பார்க்குண்டாம்பர மானந்தமே. (கசு)

நள்ளக்குறத்திரு வெண்ணீறுடன்முற்று நன்கணியும்
வெள்ளக்குறத்தி யணேயார்பலர்க்கும் வியந்துதொழப்
பள்ளக்குறத்திய நீர்தோய்கழனிப் பழனிநகர்க்
கள்ளக்குறத்தி மணவாளன்போற்றெய்வங் காண்பரிதே. (உ0)

வஞ்சரிபங்கனேத் தாங்கெதிர்த்தார்க்கில் வதைப்பவன்பொன்
னெஞ்சரிபங்கனே வெய்தாதுகாப்பவ னீள்கடப்ப
மஞ்சரிபங்க னேயவயலூர்ப்புகழ் வாய்ந்தவன்வான்
குஞ்சரிபங்கனேங் கோன்மதனுனுறுங் கோலத்தனே. (உக)

திருக்கடம்பார மிடியாதியாவன தீர்த்தெனெஞ்சை
யுருக்கடம்பாரங்கண் மானுர்மயலு மொழித்தினிதாள்
பெருக்கடம்பாரத்த வேலாபழனிப் பெருங்கிரிவாழ்
மருக்கடம்பார முருகாதண்டுேன்றும் வலக்கையனே. (உஉ)

மானக்குரவ மலர்மாலைத்தோளினன் மன்னுபல
தானக்குரவலி யுள்ளார்மருவுந் தனிவயலூர்க்
கோனக்குரவர வந்தீர்த்துவீடுங் கொடுக்கவல்ல
ஞானக்குரவ ரனைவோர்க்குமேனின்ற நாயகனே. (உக)

தீதாளமாலய நிந்தைசெய்யேமலர் செங்கமலப்
போதாளமாலயர் வின்றிக்கொண்டேம்புறம் போகத்தள்ளேல்
பாதாளமாலையந் தீர்ப்பாய்பழனிப் பதிமுருகா
கூதாளமாலை யணிந்தாடுவாய்தொண்டர் கூட்டத்தனே. (உஉ)

கச்சையலங்க லணிமுகக்கொங்கையர் கைகளிடும்
பிச்சையலங்க லணித்தொலைத்துய்யப் பெறுவதென்றோ
சச்சையலங்க லணிலோசையாதிகொள் சாரன்மலர்ச்
செச்சையலங்க லணிவாய்பழனித் திகிரியனே. (உ(

போதளசந்தன லன்னார்மனையிற் புகுங்கொடிதைத்
நீதளசந்தன கந்தீர்த்தவென்றி நிசப்படுங்காண்
மாதளசந்தனற் பாடற்பழனி வரோதயசெஞ்
சீதளசந்தன வெற்புடையாற்கருள் செய்தவனே. (உச)

பெருமாதராய்த்துதி பாடும்புலவர் பெறவுங்கைப்பொ
ன்ருமாதரானீயுமீ யான்பொருளாமென வுன்னவிடே
லருமாதராதல நாரிகணவனறை புகழ்தோய்ந்
திருமாதரார்கொண்க னுய்பழனியி லென்னப்பனே. (உஎ)

முன்னங்கருணைக் கிளிதானென்றென்னை மொழிந்தநின்வாய்
பொன்னங்கருணையச் சித்தர்தம் மூடும்புகவுய்க்குமோ
வின்னங்கருணை யிரங்காத தொத்துமிருப்பதென்னோ
மன்னங்கருணையச் செய்வயலூர்க் குன்றில்வாழ்குகனே. (உஅ)

கைப்போது முற்றச் சொரிந்திரந்தேத்துங் கனதொழும்பர்
செப்போது முற்றகைக் கொங்கைநல்லார்மயல் சேர்தனன்றோ
மைப்போது முற்றலைச் சாரணர்கால மலைப்பழனிக்
கெப்போது முற்றருகனே சரவணமீன்ற கன்றே. (உகூ)

அங்கையளித்த வனமாதுகேள்வ னறம்வளர்த்த
செங்கையளித்தகை யாளானவேலன் றிருப்பழனி
தங்கையளித்தண் கடம்பாரமார்பன் சரவணப்பூங்
கங்கையளித்தவ னிந்திரகோடிக்கொர் காவலனே. (௩௦)

வெற்பகப்பாதவன் வாழ்வுறப்பேயட்ட வேற்பெருமா
ளற்பகப்பாதவன் சேரறு மீன்மைந்தனும் சிவத்தின்
பொற்பகப்பாதவர் போற்றுப்பழனிப் பொருப்பிலெந்தை
கற்பகப்பாதவ மைந்தினுஞ் சீர்த்த கருணையனே. (௩க)

அண்டங்கறுத்த வவுணைசர்கூற்ற னலைகடல்சூழ்
மண்டங்கறுத்த மதத்தோர்க்குந்தேசிகன் மையலைமெய்
விண்டங்கறுத்தருள் வான்பழனுபுரி மேயபிரான்
கண்டங்கறுத்தவன் செய்தவப்பேறெனல்கட்டுரையே. (கஉ)

பாங்கேயனுமுரு காநொந்துபட்டபுண் பாடறிந்து
மீங்கேயனுமுரு காட்டுகின்றயிலை யெங்ஙனுய்வேந்
தீங்கேயனுமுரு கார்சூழ்பழனிச் சிலம்பில்வளர்
காங்கேயனுமுரு காவினியேனுங் கடைக்கணியே. (கங)

பொன்னலங்கையனை யச்செருத்தானும் புகழ்முருகோன்
மன்னலங்கையனை யர்க்கெளியான்கும்ப மாமுனிதேர்
சின்னலங்கைய னையவயலூரான் சிறிதிரங்கிற்
கன்னலங்கைய னையன்கூற்றஞ்சுந்திறங் கைவருமே. (கச)

துண்டப்படாமணி கொங்கைநல்லார்மயற் சூழ்வகற்றிக்
கண்டப்படாமணி போலுமெஞ்ஞானக் களிப்பருளி
யண்டப்படாமணி வியான்பிறவேனின்ன மல்லல்வசை
யுண்டப்படாம ணியவவூர்க்குன்றி லுற்றவனே. (கரு)

பாரணங்கண்ட ரோடுவாடலோர்ந்துட் பதைபதைக்குஞ்
சூரணங்கண்டலர் வாழ்வோடொழியத் தொலைத்தனையாள்
வாரணங்கண்டழைக் குந்தோகையோடுகொள் வானவநா
லாரணங்கண்ட முருகாபழனிக் கழகியனே. (கசு)

நற்புதவான வரசவினேத நயந்தருளிப்
பொற்புதவானவக் கொங்கையர்க்கேங்கும் புரையொழித்தாள்
கற்புதவானவன் பாலாநக்கீரன்முன் கண்டுமகி
ழற்புதவானவ னேபழனுபுரி யாதிபனே. (கஎ)

தம்பமனையவள் சொல்லேயென்றெண்ணுஞ் சழக்கரையு
நம்பமனையருள் வேலோடுதோன்றி நலமருள்வாய்
பம்பமனையன்பர் கூட்டங்குலாவும் பழனிவெற்பிற்
கும்பமனைய முலையார்நடஞ்செய்பொற் கோயின்மன்னே. (கஅ)

நங்குமமேனிய மித்திடலார்தமிழ் நல்கியதா
வெங்குமமேனிய மந்தந்ததார்மெய் விளம்புதியால்
பொங்குமமேனியத் தோர்சூழ்பழனிப் பொருப்பில்வளர்
குங்குமமேனியப் பாதண்டும்வேலுங் கொளுங்கையனே. (கக)

பொன்றுதவாணவச் சூர்மாயவென்ற புகழ்ச்சிமெய்யே
னின்றுதவாணவ வீரரொடியானு நிலவச்செய்வாய்
மென்றுதவாணவச் செங்கடம்பார வியன்பழனிக்
குன்றுதவாணவத் தோரொடுகூட்டிக் குழப்பிடலே. (சo)

சிங்கவராகி யருள்வேட்டுளாரெனச் சீரழிதா
பங்கவராகியல் சோமனிற்செய்தது பார்த்திரங்காய்
துங்கவராகி யணியாவினன்குடித் தொண்டுசெய்யும்
புங்கவராகி யவர்சிறைமீட்டருள் புண்ணியனே. (௪௧)

இத்தரையாளைய ராதளிகூரு மிதங்கருதும்
பத்தரையாளைய னாற்சென்னியானென்சொற் பாழ்படுத்தேல்
கத்தரையாளை யணைந்தாய்பழனியிற் கந்தவெண்ணில்
சித்தரையாளைய னேயதைநம்பித் தியங்கினனே. (௪௨)

தவலானலன்னசொற் பேதங்குறித்திடுஞ் சண்டைவம்பர்
நவலானலமர மேயென்னுமார்வமு நண்ணுவரோ
குவலானலங்கலு றாப்பொதுச்சீர்நிலை கொண்டும்வம்பிற்
கவலானலந்தரு வாய்பழனாபுரிக் காரணனே. (௪௩)

பொன்னம்பரதவி யாபகஞ்சேர்விலைப் பூவையர்பொய்ச்
சொன்னம்பரதவி யாபாரத்தோரைத் துதிக்கச்செல்லே
னன்னம்பரதவி யாபழனாபுரி நாயகயா
னின்னம்பரதவி யாதளிகூர்நிலை யீந்தருளே. (௪௪)

கடங்காமனத்தைதகண் டேங்கப்பழனிக் கனசிலம்பி
னிடங்காமனத்தைய னாகிநின்றாயற மியாவுஞ்சற்று
றுடங்காமனத்தை யெனக்காப்பவேமிக நோற்பதனுக்
கடங்காமனத்தை யடக்குந்திறலமை யளித்தருளே. (௪௫)

கஞ்சனக்கண்ணிரங் கப்புடைத்தாண்ட கனங்கருதென்
னெஞ்சனக்கண்ணியிற் பட்டுழலாவண்ண நீபுரப்பாய்
வெஞ்சனக்கண்ணிய னல்லாய்பழனி விசாகவிண்ணா
ரஞ்சனக்கண்ணி மணாளாமலைமுற் றளிப்பவனே. (௪௬)

முத்தியங்கைய நகையார்முலைப்பெரு மோகமிஞ்சிப்
பத்தியங்கையந் தரநொந்துளேனைக்கண் பார்த்தருள்வாய்
தித்தியங்கையக லாப்பழனாபுரிச் செல்வதிகழ்
சத்தியங்கையரசேயின்னமின்னல் சகிப்பரிதே. (௪௭)

பண்டாளரஞ்சகத் துய்ந்தமைநாடிப பதைகும்மனனைக
கொண்டாளரஞ்சலிக் குங்கண்மின்னார்முற் குலையவிடே
லெண்டாளரஞ்சலிக் கேற்றாய்பழனிக் கிறைவவெண்ணில்
சண்டாளரஞ்சப் பொருதார்க்கும்வீரர் சகாயத்தனே. (௪௮)

மும்மலத்தனைவரு நொந்துளபாரின்மெய் முத்திநத்தித்
துமலத்தனை தூய ருங்கலவாச்சுகந் தோயச்செய்வா
யமலத்தனையர் மலிவயலூர வருட்குறித்துக்
கமலத்தனைப்புடைத் தாய்பத்திசோதனை காட்டல்விட்டே. (௪௯)

கைச்சிலையிட்டம ராம்புளினர் கவின்குறிஞ்சிக்
குச்சிலையிட்ட மடவாளைக்கெஞ்சினன் கொன்பழனித்
துச்சிலையிட்டளந் தீர்த்தாளென்றேத்தித் துணரொடுபல்
பச்சிலையிட்டவ ரைத்துய்த்துளான்றரு பாலகனே. (௯௦)

நித்தருக்கான படியாடுமையலை நீக்கென்றுமேத்
தித்தருக்கான படியாடுமையர்ச் செறுக்கும்வண்மை
தத்தருக்கான படியாடுமைய தடமுதல
பத்தருக்கான படியாடுமையன் பழனியவே. (௯௧)

முற்றிற்று.

ஆக-கவி-௪௯௧.

வேலுமயிலுந்துணை.

---

## குருபரமாலை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தங்கள்.

தந்தவன்கரியொன் றுரித்துமுன்போர்த்தார் தமக்கினிதுரைத்ததுமன்றிச்
சந்தனப்பொதியை முனிக்குமாங்களித்த தாரகப்பொருளெனக்கருள்வாய்
கொந்தலர்பொழிற்றென் மதுரையூர்க்கழகக் கொடுஞ்சமர்க்கவிஞறுதியாம்
பைந்தமிழ்ப்புலவ ரளவிலார்பரவும் பழனிமாமலைக்குருபரனே. (௧)

கானகக்குறத்தி யுடன்முனோர்கனவிற் கலபமாமயின்மிசைகவின்ற
மானமோரணுவு மிலனெனத்தமியேன் வருந்துறக்காண்பதுமுறையோ
வானகத்தமரர் மனமெலாங்கவரு மயிலனாரனைவருமாழ்கப்
பானலங்கண்ணார் நடம்பயில்கோயிற் பழனிமாமலைக்குருபரனே. (௨)

வன்னிருதருக்கோர்நமனெனக்கரத்தில்வயங்கும்வேற்படையொடுமயின்மே
லென்னிருவிழிமுற் சேவைதந்தருளி லெவருனைத்தடுப்பவரியம்பாய்
துன்னிருங்கலிநோ யாதியபலசெய் துயர்முழுதறக்களைவதனாற்
பன்னிருசமயத் தினர்களும்வழுத்தும் பழனிமாமலைக்குருபரனே. (௩)

ஆசகல்கிரியா விதிப்பெருநூல்க ளறைந்தவா றநுதினமுனைச்செய்
பூசனைச்செல்வ மாயினுநிறையப் பொருத்திடிற்புண்படேன்கண்டாய்
வாசவன்முதலோ ராயிருந்தப்பான் மனிதராவருமவரெவர்க்கும்
பாசநோய்முழுது மறக்களைந்திடுசீர்ப் பழனிமாமலைக்குருபரனே. (௪)

வெங்கயமுகனோ டொருவரைபொடிய விடுத்தவேற்படைப்பெரும்பூசை
யிங்கயர்வின்றிச் செயுமெனக்கொருபே றேனுமீந்திடற்கிரங்காயோ
வங்கயற்கருங்கட் டவளமங்கலையோ டழும்படியருமறைக்கிழமைப்
பங்கயப்பிரமன் றனைப்புடைத்தடித்தாய் பழனிமாமலைக்குருபரனே. (௫)

சத்தநான்மறையோ டாகமங்கலந்த சமரசானந்தமெய்தியமெய்ச்
சித்தரிலொருவ னுயினும்புவியிற் றிகழ்வுறு திருப்பதேன்செப்பாய்
முத்தமிழ்க்கவிக ளளவறப்பொழிந்து மூவிரண்டெழுத்தையுமொழியும்
பத்தர்வேண்டுவமுற் றுதவிடச்சலியாய் பழனிமாமலைக்குருபரனே. (சு)

நீரதுபாலிற் கலந்தவாறெனநா னின்னடியாரொடுகூடி
மாரதத்திரளி லொருவனுமாகி வயங்குநாள்வருத்தவல்லாயோ
சாரதரொடுபோய்த் தடங்கடற்றகுவர் தளமறச்சாடுமொண்புரைத்துப்
பாரதனெடுவிண் பதியுமுய்ந்திடவாழ் பழனிமாமலைக்குருபரனே. (எ)

செச்சைமாலிகையுங் கடம்பொடுகுரவுஞ் செறிதருதிண்புயங்குறித்தேன்
கொச்சைமாநகரிக் கவுணியன்போலக் குலவுசீர்விழைதல்கூடாதோ
பிச்சையேற்பவன்போற்சென்றுமாவலிதன்பெருந்திருமுழுமையுங்கவரும்
பச்சைமாயவன்போ னீடியதகைசால் பழனிமாமலைக்குருபரனே. (அ)

ஆடலோர்சிறிதும் வழங்குகின்றிலைநின் னருட்டிருவுருவுடனென்றுக்
கூடலேயாய பரகதிப்பெருஞ்சீர் கொடுப்பதெங்ஙனமெயாங்கூறாய்
கோடலில்கதிர்வேற் படையினைச்சேவற் கொடியினைக்குலமயிற்பரியைப்
பாடல்வல்லவர்க்கே பயன்முழுதளிக்கும் பழனிமாமலைக்குருபரனே. (கூ)

கச்சியூர்ப்புலவ னொருவன்வாழ்வுறமுன் கவினுறச்சென்றநின்கருணை
யிச்சியாமுயலுந் தமியனேற்கொருசற் றேனுமேனிரங்கிலாயந்தோ
மைச்சிலம்பினநேர் சாரணர்பலரு மடிவுறத்தமிழ்மழைபொழிவான்
பச்சிளங்கொங்கைக் கவுரிபால்குடித்தாய் பழனிமாமலைக்குருபரனே. (க0)

எண்ணமொத்தருட்பே றிகுதுமெனநீ யியம்பியவாறொருசிறிது
மண்ணவரறியப் புரிந்திலையதனுன்மனமிகவாடலோர்கிலையோ
தண்ணளித்தகையோ ரணுவுமெய்திலராந் தகுவர்தங்குலமறத்தடிவான்
பண்ணவர்சேனைத்தலைமைபெற்றவிர்ந்தாய்பழனிமாமலைக்குருபரனே. (கக)

தேக்கியமதுரத் தமிழ்க்கவிப்புலவர் திருவருட்செயலுறும்படிமுன்
னோக்கியகருணை மறந்திலையெனிலியா னுடங்குறக்காண்பதெனுவலா
யாக்கியவுலக நகும்படிபிரம னழப்புடைத்தருந்தவமுனிவர்
பாக்கியம்பழுத்தாங் கவிர்தருமுருகா பழனிமாமலைக்குருபரனே. (கஉ)

இத்தரைமகள்கோ வெனக்கதறிடலோர்ந் திரங்குமெய்யுணர்விலார்தாமும்
பித்தனென்றிகழப் பரதவித்திடுநான் பெருங்களிப்புறச்செய்நாளிலையோ
மைத்தடங்கிரியோன் றம்புயப்புதுப்பூ வனத்தொடுகிடந்தெனவளைபற்
பைத்தலைப்பாம்பிற் றுயில்பவன்மருகா பழனிமாமலைக்குருபரனே. (கங)

ஈரமோர்சிறிது மில்லவர்குடைக்கீ ழெத்தனைநாளலைந்திளைப்பேன்
காரணமெனவோர் கனவின்முக்காலுங் கழறியமொழிப்பயன்காட்டாய்
நீரமர்சடிலப் பெருந்தகைக்கிடபா னிலவியநேரிழைவடிவாம்
பாரவேற்படைக்கைப் பவளவெற்பனையாய் பழனிமாமலைக்குருபரனே.(கச)

மருப்பொலிகடம்புஞ் செச்சையுங்குரவு மாலுமுத்தமிழ்களிற்சிறிதும்
விருப்பமில்லவர்தம் பாலுநாடொறும்போய் மெலிவுறுவிரகளித்தருள்வா
யருட்பெருவிளையாட் டனந்தமார்தரலா லணிபொழிற்சிகையுடையனவாம்
பருப்பதமுழுதும் பார்த்துநாணியசீர்ப் பழனிமாமலைக்குருபரனே. (க௫)

கீற்றுவாண்மதிநேர் நுதன்மினார்மயலிற் கேடுபட்டயர்தருகீழ்மை
மாற்றுபுஞான முனிவரர்குழுவில் வதிதரச்செயவும்வல்லாயோ
போற்றுநன்னெறியோ ரிகழ்கலாதனவாம் புசிப்பினமாயிரமிருந்தும்
பாற்றுணவருந்தும் பதிதர்கண்டிறைஞ்சாப் பழனிமாமலைக்குருபரனே(க௬)

புள்ளலகிருகூ றுக்கியதடங்கைப் புனிதமானிகர் பெரும்புகழ்ச்சி
வெள்ளநீருடைப்பார்மிசைபெறத்தமியேன் விரும்புமாறசைப்பவனெவனோ
கள்ளவிழ்மலர்மென் கூந்தலங்குயினேர் கடைசியர்கண்வலைவிசிறிப்
பள்ளர்தம்மனங்கொண் டுவப்புறும்வயல்சூழ் பழனிமாமலைக்குருபரனே. ()

நீந்தருந்துயர்சால் கலிப்பெருங்கடலி னெடிதிளைத்துளைந்துளநான்
வேந்தருக்கிறைவர் கண்டுகண்டொல்கும் வியன்றிறல்பொருந்துநாளுளதோ
மாந்தளிர்வில்வ மறுகுநீர்கரந்தை மதிவிளாவதிதருசடையிற்
பாந்தளும்புனையும் பரமர்கண்மதலாய் பழனிமாமலைக்குருபரனே. (கஅ)

முன்னநின்னருளாற் போகமாமுனியு முரண்புலிப்பாணியுமுதலோ
ரன்னவாகனன்கை விதியினைக்கடந்தாங் கடிமையுமுயும்படியருள்வாய்
புன்னகைக்கனலாற் புரமெரிசெய்தார் புனைபெரும்புயங்கபூடணமும்
பன்னரிதாய பலபலபுகழ்தோய் பழனிமாமலைக்குருபரனே. (க௯)

சீகரக்கடலா தியபுனற்பெருக்கிற் றீயில்யான்விடுத்தசெந்தமிழ்ப்பாட்
டாகவித்தனையென்றறிகிலேனவைமுற்றறிந்துசேர்த்தருள்வதுன்கடன்காண்
மாகநாடளித்து மலைச்சிறகரிந்தும் வாள்வலித்தகுவர்போர்க்கஞ்சும்
பாகசாதனர்பற் பலர்க்கொருதுணையாம் பழனிமாமலைக்குருபரனே. (௨0)

அகிலமீதொருகற் கிணறமைத்தடியே னலமருந்துயர்முழுதறிந்துந்
திகிலறும்படிநீர்ப் பெருக்கருளிலைநின் றிருவுளத்தருள்வறந்ததுவோ
சுகிர்தமாதவத்தோர் பலர்வியந்துரைப்பச் சுக்கிரவாரநோன்புஞற்றும்
பகிரதன்பகைவே ரறக்கடிந்தாண்டாய் பழனிமாமலைக்குருபரனே. (௨௧)

கழிக்கருமதுரத் தமிழ்வலார்பலருங் களிப்புறக்கருதுமென்றனைநீ
விழிக்கருணையினாற் புரந்தருள்செயுநல் வேளையொன்றில்லைகொல்விளம்பா
யொழிக்கரும்வலிமை சான்றவேடனைமுற் றொருவியவுத்தமப்பண்பாற்
பழிக்கருமகிமை பொருந்துமாதவர்சூழ் பழனிமாமலைக்குருபரனே. (௨௨)

அட்சமாறிரண்டுள் ளாயெனத்துதிசெய் தழல்விழியாறையுமறைப்பார்
புட்சரபம்போற் பொலிவதாலடியேன் புழுங்குவதுணர்ந்தருள்புரிவாய்
அட்சரோருகத்தான் வேதமுங்கபிலைக் கடவுளாகமங்களுமாய
பட்சமோரிரண்டுள் ளார்களும்பணியும்பழனிமாமலைக்குருபரனே. (௨௩)

செம்பியன்வழுதி சேரமானனையார் திகழ்நலங்குறித்துனைப்பெரிது
நம்பியதமியே னுபினுங்கடையார் நகும்படிமெலிவதேனவிலாய்
வம்பியராய மறச்சிறுமியர்தம் வாய்த்தொனிகுயிலிசைமயங்கும்
பம்பியசாரற் பசுந்தினைப்புனஞ்சூழ் பழனிமாமலைக்குருபரனே. (உச)

மட்டலாங்கமலத்தொருவனென்றலையில் வரைந்துளவிதிபொலாதெனிலென்
றிட்டசொற்றமிழ்வேட் டன்றுநீயுனது திருவடிசூட்டல்பொய்ப்படுமோ
கொட்டுதொண்டகத்தோற் பறையொலிவிழைந்து குறிச்சிசார்பொழிலுகுமலர்மேற்
புட்டுடைக்ககன மடந்தையர்நடிக்கும் பழனிமாமலைக்குருபரனே. (உரு)

கோங்கரும்பனைய முலைமினார்மோகக் கொடியனேன்றன்னைநின்குலத்தோட்
பூங்கடம்பாரம் பொருதமிழ்க்கவிகள் பொழிந்திடப்புரிந்ததேன்புகலாய்
மாங்கனிபாகற் கனிச்சுளைமுதல வானரமெறிதலின்மாழ்கிப்
பாங்கரெங்கணும்பல் பறவையோலிடுஞ்சீர்ப் பழனிமாமலைக்குருபரனே. ( )

வீராதந்தலைவ னனைநின்றுணையும் விரல்கெழுவீணைநூல்வல்ல
நாரதமுனியு மறியநீயெனக்கா நவின்றசொற்பிழைபடுங்கொல்லோ
வாரணக்கிழவன் மனையவளாகி யலர்ந்தவெண்கமலமீதமரும்
பாரதிமகிழப் பலமுனூலுரைப்பாய் பழனிமாமலைக்குருபரனே. (உஎ)

அனியமோடநனி யமுனதாட லாகுமென்றறிந்துநானகிலத்
தினிபபொய்ப்போகம் விழைந்துமிக்கேங்க வேன்செய்கின்றுயிதுமறமோ
தனியுடுக்கைபினுற் சங்கரனுதவு தமிழொடுவடமொழிபுரையும்
பனிமலர்க்கடம்புஞ் செச்சையும்புனைவாய் பழனிமாமலைக்குருபரனே. உஅ)

காணியுமனது திருவருட்பெருமை கருதிடாக்கடையர்தம்மிடம்போ
யாணிமுத்தொடுபொன் னுதவுவாரெனவேட் டலமாதருட்செயலருள்வாய்
தூவணிவித்தகனுர்க்கருளுமெய்ப்பொருளைவியன்றமிழ்முனிக்குமீந்ததுபோற்
பாணினிமுனிக்கு முரைசெயச்சலித்தாய் பழனிமாமலைக்குருபரனே. (உகூ)

கட்டழகுடைய மகளிர்பற்பலரைக் காண்டொறுமயங்குறுங்கடையே
னட்டமாசித்து மமலமெய்வீடு மடைதல்வேட்டயர்வதுமறிவாய்
விட்டவெம்பகழி பழுதுபட்டொழியா விறற்சிலைவேடருக்கொல்கிப்
பட்டவர்த்தனர்க ணடுங்குறும்பெருமைப் பழனிமாமலைக்குருபரனே. (௩0)

ஆடலம்பிகைதன் கரங்களிற்றுங்கி யலர்விழிக்கணிந்துமுத்திடலாற்
பீடணைந்தவிர்நின் பதங்களென்றலைமேற் பிறங்கியநிசம்பிழைபடுமோ
வாடலின்றுதிர்பூஞ் செருந்திசெங்கடம்பு மருக்குராமல்லிகைமுல்லை
பாடலம்பொலிநந் தனம்பலசூழும் பழனிமாமலைக்குருபரனே. (௩க)

கயமுனியனைய கான்முளைத்திரளிற் கலந்துநான்றிரிதருகால
மியல்வனைந்திறைஞ்சப் புரிந்தநீயின்ன மிரங்கிடாதிருப்பதேனியம்பா
யுயரெழுத்தாறு முரைத்துனதுருவ முன்னியபுண்ணியர்க்கெல்லாம்
பயன்முழுதடையக் கொடுத்தளிகூரும் பழனிமாமலைக்குருபரனே. (௩உ)

கெண்டையங்கண்ணார் கிளிமொழிச்சுவையாற்கேடுபட் டயர்பவர்கிளர்பொற்
றண்டையந்திருத்தாள் விழைபினும்வழங்குஞ் சரதனீயெனுமொழிதவறே
மண்டையும்புனைவார் மாதவத்துதித்து வழுவைமாமுகவனேடிகன்ற
பண்டைநாண்முதற்றெட் டாடிடச்சவியாய் பழனிமாமலைக்குருபரனே. ௩௩

தாமரைப்பனவ னெழுதியவிதிநின் சரணபங்கயங்களாற்கெடுமென்
றியாமறிவருமாண்புடையநின்கிளிவாயிசைத்தசொனிசங்கொல்பொய்யேயோ
மாம்கிதலத்தா லயமுழுதொருவி மனங்கசிந்துருகுமன்பினராய்ப்
பாமரர்வரினும் பழுதில்பாவலராம் பழனிமாமலைக்குருபரனே. (௩௪)

சிற்பமும்புராணங் களும்பகர்கில்லாத் திருவுருவனந்தமுங்கொள்ளு
நிற்பழிச்சியவென் கவிக்கொருபயனு நீதராவிடிலெனனுய்வேன்
கற்பமுண்டியர்ந்த சித்தரும்பிறருங் காண்பரிதாய்த்தினஞ்சூழ்வார்
பற்பலநோயுந் தணந்தசஞ்சீவிப் பழனிமாமலைக்குருபரனே. (௩௫)

கொன்றிரையருந்துங்குணுங்கராமவரைக் குலத்தொடுகெடுக்கமாதவஞ்செய்
துன்றிருவருளால் வென்றிபெற்றுய்ந்தா ரொருவருமின்றுகொலுரையாய்
கன்றினைக்கனிமீ தெறிந்தவன்றேழன் கைச்சிலையடிவிழைந்தொருநாள்
பன்றிபின்றொடர்ந்த வேட்டுவன்மதலாய் பழனிமாமலைக்குருபரனே. (௩௬)

கணிகையர்மனைதோ றலைந்தயர்ந்தானைக் கைக்கிளியாக்கியகருணை
துணிவொடுமலைமீதுருண்டெழுமொருவன் றெழும்புவந்தருள்கலாததுவோ
மணியுறழ்மனத்தார் நால்வர்கல்லாற்கீழ் வாழ்வுறப்புரந்தருள்வான்றன்
பணிலவார்செவியிற் றூரகம்பகர்ந்தாய் பழனிமாமலைக்குருபரனே. (௩௭)

பொதியமாமுனிவ னுதியபெரியோர் போற்றுநின்புனிதநாண்மலர்த்தாள்
கதியெனக்கருது மனக்கணுற்கண்ட காட்சிகண்முழுதும்வீண்போமோ
மதியணிசடிலத் திறையுநானமுகனும் வகுததனூறசமரசத்தினாக்குப
பதிப்சுபாச முழுமையுமாவாய் பழனிமாமலைக்குருபரனே. (௩௮)

கழங்கொடம்மனைதொட் டாடுமங்கையர்தங் கண்களாற்றரும்பெருங்காம
முழுங்கலைக்கடற்போல்வளர்ந்தெதென்செய்வேன்முதிருட்டிவலையொன்றருள்வாய்
கிழங்கெனச்சதுர்மா மறைத்தலைநாளுங் கிளர்பிரணவப்பொருள்விழைவார்
பழங்கண்முற்றொழிக்கத் தருமருந்தாய் பழனிமாமலைக்குருபரனே. (௩௯)

சீலமாதவத்தோ ரகம்பரவாதச் செருக்காற்றியக்குறுமிந்நாண்
மாலயன்முதலோர்பெறத்தகும்பேற்றின்வாஞ்சையான்கொளச்செயல்வழக்கோ
நீலமார்களத்து நிருமலன்விண்ணோர் நிரப்பறநீக்குதனிமித்தம்
பாலலோசனத்தாற் பயந்தருள்புதல்வா பழனிமாமலைக்குருபரனே. (௪0)

கூர்ப்பனுவளவு மருவிலர்தம்பாற் குறுகிநொந்தலமருங்கொடியேன்
கார்ப்பருவத்து மழையெனக்கொடுக்குங் கரத்தனும்படிகடைக்கணிப்பாய்
நீர்ப்பனிச்சடிலச் சிவன்மனங்கவரு நிறையுடைநீலவேணெடுங்கட்
பார்ப்பதிமுலைப்பான் மண்ங்கமழ்வாயா பழனிமாமலைக்குருபரனே. (௪௧)

வெறிகமழ்கடப்ப மாலிகைப்புயத்தின் மிளிர்தருவேலொடெண்விழிமூற்
பொறிமயிற்பரிமே னனவில்வந்தருளிற் புகழ்க்கடல்வறக்குமோபுகலாய்
மறியணிகரத்தார் மதுரையூர்க்கோயில் வாழ்வுறவழுதியுண்மகிழ்ப்
பறிதலைச்சமணர் குடிக்கொர்கூற்றுனுப் பழனிமாமலைக்குருபரனே. (௪௨)

அறம்வளர்த்தவடன் காந்தனுமலயத் தகத்தியமுனிவனுதியரும்
பெறமுனுளுரைத்த தாரகப்பொருளைப் பேசெனவிரப்பதென்செயலோ
குறமகள்கொழுநா குஞ்சரிகணவா குறிச்சிதோருடியகுழகா
பறவைமூன்றுடையாய் பலமலைக்கிழவா பழனிமாமலைக்குருபரனே. (௪௩)

நற்சுனைகாட்டிப் புனலருத்தியமா னடுங்குறவானையொன்றழைத்துப்
பொற்சுணங்கவிர்மென் முலைபுணர்ந்தனையான் புரிதவப்பயனைவௌவுதியா
விற்சுகமளித்தான் றலையினைக்கனலிட் டிமகரனசிவுறத்தேய்த்துப்
பற்சுடரிழப்பத் தகர்த்தவர்பாலா பழனிமாமலைக்குருபரனே. (௪௪)

கேவலசகல மிரண்டினுந்திகழ்நீ கிருபைவாரிதிப்பெருக்கருளா
தாவலாயிரந்தந் தழுங்கவிட்டனையீ தறமெனத்தகுங்கொலோவறையாய்
சீவர்வாழிடமா முடற்றசையனந்தந் தினந்தினமருந்துபுதிரியும்
பாவநோய்ப்பதித ரணுகருமகிமைப் பழனிமாமலைக்குருபரனே. (௪௫)

திண்ணியநிலையில் சிறுமனக்குரங்கு செலும்வழிதொறுந்தினந்தினம்போய்ப்
புண்ணியமெனுஞ்சொற் கேள்வியுமிலராற் புழுங்குபாழ்ந்துயரறப்போக்காய்
மண்ணியுன்மனித்த ஙகளிரேயெனினும் வயங்குபேரெழிலொடுவாய்ந்த
பண்ணியன்மொழியா ரெனிற்கவர்ந்தணைவாய் பழனிமாமலைக்குருபரனே.()

நாகருநடுங்கத் தகும்பலதீமை நடத்துவாரெதிர்யனநாணிச்
சோகநோய்மலிவுற் றடிமையிவ்வாறு சுழல்வதென்றொழித்தருள்சுரப்பாய்
போகநாட்டுறுமைந்தருக்களின்கிளைமேற்போயுமீள்பொறையில்வானரங்கள்
பாகலஞ்சுளைவிட் டெறிபொழிலுடுத்த பழனிமாமலைக்குருபரனே. (௪௭)

புகைவழிப்போக பூமியிற்புகலே புனிதவீடென்றுணர்பொல்லார்
திகைதொறுமதுவு மிறைச்சியுங்கொடுசெய் தீமகந்திருத்துமாண்பருள்வாய்
மிகைபடுதவநல் கருட்பெருஞ்செயலால் வேல்விலாதியவிறற்படையாற்
பகையடல்குறிப்பார் திரண்முழு திறைஞ்சும்பழனிமாமலைக்குருபரனே.௪௮)

எவ்வகைத்தேவு நீயெனத்தெளியா தேனமாடெருமையாதியகொன்
றிவ்வழிபாடே நலமெனப்பகர்வா ரெவரையுமடவலானெவனே
செவ்வரிக்கநங்கட்சிறுமியாரொருக்காற்செழுந்தமிழ்க்கவிச்சுவைதெருட்டும்
பௌவநீராடைப் பார்செய்மாதவம்போல் பழனிமாமலைக்குருபரனே. (௪௯)

பொதுநிலைநின்றுசமையமோராறும்பொருவினின்முகங்களென்றுணர்ந்தேற்
கிதுவரையருள்செய் கிலைபிறர்க்கந்நா ளெமன்விருப்புளித்தனையியம்பாய்
சதுமறைப்பனவன் மாயவன்முதலோர் தமையெலாந்துயர்செயச்சலியாப்
*பதுமகோமளைநா யகற்செகுத்துவந்தாய் பழனிமாமலைக்குருபரனே. (௫௰)

---

* பதுமகோமளை - சூரபன்மன்மனைவி

செழிப்புறுமதூரத் தமிழளித்ததுபோற் றிருவருட்சித்தியும்வழங்கி
யொழிப்பரிதாமெய்வீட்டினின்சொருபத்துடனெனைக்கலப்பதுன்கடன்காண்
விழிப்பொறியிராச் சிவன்றருமகவே மெய்ப்பொருளாமெனுந் துணிவோர்
பழிப்பொடிபுகழுந் தனதெனக்கொள்வாய் பழனிமாமலைக்குருபரனே. (ருக)

முற்றிற்று.

ஆக — கவி — ௫௱௨.

வேலுமயிலுந்துணை.

---

## பதிற்றுப்பத்தந்தாதி.

### கலிவிருத்தங்கள்.

மணிகுலாம்பணத் திரளுடைச்சேடனும் வாழ்த்தத்
திணிகுலாம்புய வீரரொடென்னையுஞ் சேர்த்தா
ளணிகுலாம்பொழிற் பழனியங்கிரிமிசை யமர்ந்து
கணிகுலாம்புனந் தொறுந்தினமுலவுகா வலனே. (க)

காவல்செய்தெனைக் கலந்தருள்கடமையொன் றிருந்தும்
பாவமானிட ரிடமிரந்திடவிடப் படுமோ
தேவரூர்புகழ் சேவகமிருந்துமா முனிபோன்
மூவறீர்தரு பழனிவெற்பமர்ந்தமுன் னவனே. (உ)

முன்னநீயெனுண் மொழிந்தசொன்முழுமையும் பிழையே
யென்னவாப்பெருங் கடலினையெங்ஙனீந் திடுவேன்
மன்னர்சேகரர் வழிபடும்பழனிமா மலைமேற்
கன்னல்வேண்மன நாணுறக்கவின்றகாங் கெயனே. (௩)

காங்குவன்னவெஞ் சூருடற்கீன்றநின் கதிர்வேற்
கீங்குநாடொறும் பூசனைசெயுமெனக் கிரங்காய்
தீங்குறுத்திருப் பழனிமாமலைமிசை தினநின்
றோங்குவாய்திறற் றண்டமொன்றான்றுமுத் தமனே. (௪)

தமருமூரவர் தாமுநற்றுணையெனத் தயங்கு
மெமதுபுன்மைமுற் றீர்ந்துமெய்யருட்பெருக் கீந்தாள்
பமராமார்த்தபைம் பொழிலுடைப்பழனிமா மலையிற்
குமரநாயக னேமுதற்பிரணவக் குருவே. (௫)

குருவுந்தெய்வமு நீயலதிலையெனக் குறித்து
மருவவாதிக ளாமெனத்தளரவிட் டனையே
பருவதந்தொறுங் குகைதொறுந்தினநடம் பயிலு
மொருவனேதிரு வாவினன்குடியிலுற் றோனே. (௬)

உற்றமாற்றமோ ராயிரமுரைத்தனை யுணர்ந்துங்
குற்றமுஞ்செயுந் துணிவினேற்கருள்செயாய் கொல்லோ
நெற்றடம்பணைப் பழனியிற்சந்தத நின்று
கொற்றமார்வினை யாடல்செய்கோமளக் குகனே. (௭)

குகனெண்டோளுடைச் சிவன்விழிப்பொறியெனக் குலவு
மகன்விண்டோய்பொழிற் பழனிமாமலைத்தனி வள்ள
லகமொன்றூர்வமெய் தார்களுக்கிந்திரா தியர்தஞ்
சுகநன்றுமெனத் தோற்றுமற்றையர்க்கதோர் துகளே. (௮)

துகளில்வான்வழி போய்வருசித்தர்காள் சுடர்வேற்
குகனைத்தென்பழ னுபுரிக்குன்றினிற் கும்பிட்
டகலவார்புவிக் கொலையறத்தொடைப்பதற் கர்சித்
திகழ்வுற்றேனையேன் விழைகிலீரென்செய்கின்றீரே. (௯)

ஈரநெஞ்சிடை சிறிதுமில்கயவருக் கிளைத்து
வீரவேற்குகன் பழனியிற்சென்றருள் விழைவே
னூரணன்புரை சீர்பெறுவேன்கொலோ நமன்செய்
கோரவாதனைப் படுவனோவறிகிலேன் குறித்தே. (௧௦)

வேறு.

குறியுரைக்குங் குறத்திதன்கொண்கனை
யறிஞர்வாழ்பழ னுபுரியையனைப்
பொறியுளார்மிகப் போற்றியுய்ந்தார்போலா
வெறிஞர்நிந்தை விளம்பிநொந்தாரரோ. (௧௧)

தாரணிக்கட் சமர்த்தர்தண்டாயுத
வீரவீரன் வியன்பழனிக்கிரிச்
சாரலெய்தித் தவம்புரிவாரெனப்
பாரகத்திற் பலர்பகர்வார்களே. (௧௨)

வாரணிந்த வனமுலைமங்கையர்
கோரணிக்கட் குலைகுலைந்தாலுமெய்ச்
சீரணிந்தவிர் தென்பழனிக்குகன்
பேரணிந்திடப் பெற்றிடின்முத்தரே. (௧௩)

முத்தராய்விளை யாடுதன்முன்னுவீர்
பித்தரென்னப் பிதற்றுதல்விட்டருட்
சித்தர்நம்புந் திருப்பழனிப்பிரான்
பத்தராய்த்துதி பாடுமினடியே. (௧௪)

நாடனைத்து நலம்பெறநாடுமெய்ப்
பீடணைந்த பெருந்தகைபெற்றுளார்
மாடகூட மலிபழனுபுரி
யாடல்வேல னடித்தொழும்பாளரே. (௧௫)

தொழுதகைப்பல தொண்டரோடேகியே
வழுதிமுற்சமண் வாதுவென்றானையும்
பழுதில்சீர்ப்பழ னிக்குகனென்பவ
ரெழுதொணுமறை யீடுணர்ந்தோர்களே. (௧௬)

ஓரமின்றி யொருவரநல்கியென்
னூரவார மவிர்தரச்செய்குவாய்
பூரவாகனி போல்பவர்போற்றுமெண்
சீரதாம்பழ னிக்கிரித்தெய்வமே. (௧௭)

தெய்வநான்முக னைச்சிறைசெய்தருள்
கைவலான்பழ னிப்பதிக்காவலன்
சைவமாதிய சட்சமயந்தொழு
மெய்வரோதய னென்பதுமெய்ம்மையே. (௧௮)

மெய்யினீறு விளங்கவும்பூசிடார்
பொய்யிலென்றவம் போகவுஞ்செய்திடேன்
மையிலூர்வய லூர்முருகாமலர்
கையிலேந்திரு கன்னியர்நாதனே. (௧௯)

நாததத்துவத் தப்புறநண்ணுநின்
பாதபங்கய மேபரமென்றுளே
னேதமுற்றொழித் தாளிளப்பங்கொலோ
சீதநீர்ப்பழ னிப்பதிச்செல்வனே. (௨0)

வேறு.

செல்வர்வாயில்க டோறுமுற்றநறுதினஞ் சீரழிந்திடநீர்த்துக்
கல்வரைக்குகை தோறுநின்புகழ்பகர் கவிஞரோடெனைச்சேர்ப்பாய்
பல்வகைத்திரு மலிதருபழனியம் பதியினிற்பணிவார்க்கு
நல்வரங்களெல் லாமளித்தருள்சிவ ஞானதேசிகவேளே. (௨௧)

தேசிகப்பதம் விழைதருமெனைப்பலர் திருட்டுவஞ்சகனென்னப்
பேசிடச்செய்தா யிதுவுநின்றிருவருட் பெருந்தகைக்கழகேயோ
நாசியிற்றிரி தருவளிக்குழைப்பவர் நவிலரும்புகழெந்தாய்
வாசியாமென மயினடத்திடுங்குகா வளவயலூர்வாழ்வே. (௨௨)

வாழ்வினுவிறு மாப்பதும்புனையிழைமகளிருநகைச்சூழ்ந்
தாழ்வினுற்சலிப் பதுந்தவிர்பொதுநிலை தந்துநான்றளர்வேனோ
வாழ்வினுயர றிவுடைத்தொண்டர்பே ரவைதொறும்புகவுய்த்தா
ழ்வினுவிடை யருள்செய்வாய்பழனிவெற் பினிற்றிகழிறையோனே. (௨௩)

இறைவிவன்புரி தவப்பயனுகிவர் தெந்தமர்க்கொருதாயாய்
மறையவன்சிறைப் படச்செய்தாய்பழனிமா மலையில்வந்துனைப்போற்றிக்
குறையெலாந்தவிர்த் தருளெனக்கெஞ்சினைக் கொதிப்புறப்படுத்தேலன்
பிறையுமன்பிலான் றுதியுமேற்றொருமலை யிடித்திசைபுனைந்தாயே. (௨௪)

புனையுமுத்தமிழ்க் குறுமுனிக்குதவுமெய்ப் பொருளருளொனநாளு
நினையுமென்னையிப் புவியில்வள்ளுரநுகர் நீசருநகலாமோ
வனையைவேலுரு வாச்சமைத்தணிந்துள வசலமெங்கணுமாடித்
தனையுபலாவினை தவிர்பழனுபுரித் தடங்குவட்டுறைவானே. (௨௫)

வானநாட்டமர் கம்மியர்பணியுமிம் மண்ணுலகினிற்காண்டற்
கானசீர்பெறக் கருதுமென்றனையிவ ணலக்களித்திடலாமோ
தேனளாவிய பசுந்தினைமாநுகர் சிறுமிதன்னிடம்போய்க்கட்
ப்ர்னனேக்கிடை சுழன்றவாபழனியம் பதிக்குருபரதேவே. (௨௬)

தேவையாவையும் வழங்குதுமென்னமுன் செப்புநின்றிருவார்த்தை
யேவைநேர்விழிக் கொடியவர்மயலிடை யெனைவிடன்முறைதானே
கோவைவாய்க்கனிக் குஞ்சரப்பிடியும்வன் குறவர்தங்குலமாதுந்
தூவைவேலுமாஞ் சத்திகளுடையவா தொல்வயலூரானே. (௨௭)

ஊர்கடோறுமுற் றிரந்துழலொருவனை யுததியிற்றுயில்வானு
நீர்கவின்றரு சடையவன்றானுமா நிலவவுஞ்செயவல்லான்
சீர்களாயிரஞ் செறியுமாவினன்குடிச் சிலம்பினிற்றினமேவிக்
கார்கள்போற்கொடை வழங்கவல்லார்வனை கவித்தொடையணிவானே. (௨௮)

அணியிழைக்குயி லனையவர்மயல்வலை யகப்படுமடியேனைப்
பிணிமுகப்பரி மிசையுனைக்கருதுசீர் பெறும்படிசெயல்வீணோ
கணியுநுக்கொடோர் புனத்திடைநின்றமை கருதுவார்க்கருள்செய்து
பணிலவார்வயற் பழனியிற்றிநடம் பயின்றவிர்பழையோனே. (௨௯)

பழையநாட்கதை பலபகர்ந்தனைமனப் பதைப்பில்பேருவப்புற்றேன்
கழைவளைத்தமர் விளைப்பவற்கஞ்சுறுக் களிப்புமீகுவதென்றோ
மழைமுகிற்றிரள் வருந்தொறுநடஞ்செயு மயிற்பரியுகைப்பாய்மென்
றழையுடுப்பவட் கினியவாபழனியூர் தழைக்கவந்தமர்ந்தோனே. (௩0)

வேறு.

அமரர்படுஞ் சிறைத்துன்ப மத்தனையுந் தீர்க்கவொரு
குமரனுருக் கொடுசென்றான் குருவடிவங் கொடிதோன்றிச்
சமரசமெஞ் ஞானநிலை தரவிரும்புந் தவத்தோர்க்குப்
பமரமுலா மலர்ச்சோலைப் பழனியொக்கும் பதியின்றே. (௩௧)

இன்றேநின் னடிமையென வெனைமுழுது முனக்கீந்த
வன்றேமுன் னின்றிலையா லயர்கின்றே னருள்செய்வாய்
பொன்றேடு வாருணராப் புகழனந்தங் கோடிபுணர்
நன்றேற்ற முறுபழனி நகர்க்குமர நாயகனே. (௩௨)

நாயனைய நெஞ்சமொடு நானலைந்து நலிவுற்றே
னீயறியாத் திருட்டுளவோ நினைத்தபயன் முழுதீந்தா
ளேயநின்பாற் பெறுபயனு மிலங்காமைக் கென்செய்வேன்
சேய்மலர்த் திண்கடம்பார் திருப்பழனி முருகோனே. (௩௩)

முருகார்பொற் கொன்றையணி மொய்ம்புடையான் முதலோர்க்கும்
பெருகார்வ மீந்தாயெற் பேணலொரு பெரிதேயோ
வருகார்கண் டொல்குபெரு வனப்பொழியா மாலுவக்கு
மருகாநபல் வளமோங்கும் வயலூர்க்குன் றுடையானே. (௩௪)

உடையநீ யெனையிவ்வா றுணரார்போன் றுற்றக்காற்
கடையாா மவரேசிக் கரங்குலையா திருப்பாரோ
விடையறு துனைநாடு மியற்கையுமீங் கிலையந்தோ
மடையில்வா ளைகள்பாயும் வயலூர்வேல் வலத்தானே. (௩௫)

வேல்வலத்தான் றென்பழனி மேயபிரான் வென்றிமலி
வால்வளைக்கைத் திருநெடுமான் மகிழ்நலஞ்செய் திடச்சோம்பான்
கால்வலத்திற் சாய்த்தாடுங் காரணன்றன் கண்மணியென்
பால்வருநா ளொன்றுண்டேற் பதிதர்குலம் பாழ்படுமே. (௩௬)

பாழாகா தருட்கடலின் பருந்துளியொன் றெனக்கீந்தா
லாழாழி சூழ்புவியி லறமிகவோங் கிடச்செய்வேன்
வாழாதார் வாழவுஞ்செய் வலியானே வழிபடுவார்க்
கேழார்வந் தினங்கொடுத்தா வினன்குடிவா ழெம்மானே. (௩௭)

மானனைய கண்ணுரான் மனமாழ்கி வழிதவறிப்
போனவெனை யாளாமற் புறம்போக்கற் கிசைவாயோ
வேனருணைக் கிளியென்றன் றிறமாப்பெய் திடச்செய்தாய்
ஞானகுரு பராநாதா நளிர்பழனி நகர்க்கோவே. (௩௮)

நகவலியாற் பொருசேவ லலமெழுதுங் கேதனத்தைப்
புகழறியாச் சிலருமகிழ் பொற்புறுமிப் பூதலத்தி
லிகழ்வொருங்குற் றடியேன்மிக் கேங்குறச்செய் திடலாமோ
மகபதிபோற் றியவயலூர் வாழ்வாப மயிலோனே. (௩௯)

மயிலொடுவேற் படையைமிக வாழ்த்திசைக்கத் தகுநாயேன்
வெயிலவனேர் புழுப்போலு மெலிவுறநீ விடலாமோ
குயிலொடனம் போலுமிரு கோதையர்தம் மணவாளா
பயிலரிய நலங்காட்டும் பழனிவளம் பதியானே. (௪0)

## வேறு.

பதியுனையல் லதுவேறின் றெனத்தெளிந்துமியானிவ்வணம் பதைக்கலாமோ, துதிவிழைந்தாண்டதும்பொய்யோதுரிசறுபேரருட்கடலின்றுளிநல்காயோ, விதிமறையாதியவொதுங்க மெய்தவிர்நூல்செயம்பெறலான் மெலிந்தேன்கண்டாய், கதிர்மதிசூழ்பழனிமலைக் காவலவாசுடர்வேற்கைக் கடவுளானே.()

கடங்கிாட்டுங்களிற்றினத்தைக் கண்டுளமொல்காதுபன்றிக் கணமிக்கார்த்து, விடங்காட்டும்வசைபகர்ந்தாங் குலகினிகழ்தருகொடிதால் வெருண்டேனந்தோ, நடங்காட்டுமயிற்பரியிற் கன்விளில்வந்தாங்கொருக்கா னனவில்வந்தாள், படங்காட்டுமெழிலல்குற் குறத்திகணவாவிணையில் பழனியானே. (௪௨)

பழமறைக்காகமங்கள்பெரும் பகையெனுஞ்சிற்சிலருமருள்படைத்தபாரிற்
றழல்விழிபோற்பொதுவாகித் தயங்குமறிவுடைப்பெரியோர் தவிக்கலாமோ
மழவிடைப்பண்ணவன்சமய முதலாறிலுள்ளவரும் வந்துபோற்றும்
விழவுடைத்தென்பழனியப்பாவிண்ணவரூர்க்காவல்செய்யும்வேற்கைவேளே.

வேளையறிந்துதவிசெய்ய வல்லாயல்லாயெனவும் வெருள்கின்றேன்முன், ஞ
ளையெனச்சொன்னசொல்லும் பிழைத்துள்ளாயறிவாரார் நானென்செய்வே
ன், பாளைமலர்க்குழன்மடவா ரிருவரொடுமயிலேறிப் பழனியூரிற், கோளை
வென்றமுனிவரரா தியர்சூழப்பவனிவருங் குமரவேளே. (௪௪)

குமரகுருபரமுருகப் பெருமானைத்தானவர்க்கோர் கூற்றுனை
யமரகுலசேகரனை யணிகிளராவினன்குடியி லார்கண்டாலுஞ்
சமரபிரபலவீரத் தன்மையினர்புகழருமைத் தவத்தோராகித்
தமரவர்க்கும்வேண்டுவன தந்துபிறவாதமுத்தித் தலங்கொள்வாரே. (௪௫)

வாரணகேதனம்பிடித்த வள்ளலைத்தென்பழனிவெற்பில் வாழ்கின்றானைக்
காரணகாரியமிரண்டுந் தானனகுருபரனைக் கமலவேத
ஞானன்கண்டறியான்கண் மணியுருவாவருங்குகனை நம்பாவம்பர்
பாரணங்குக்கொருபார மெனத்தெளிவாரிருட்கடலிற் படிந்திடாரே. (௪௬)

படியளந்துவானளந்த பதமலர்க்கார்முகிலனையார் பலர்கொண்டாடும்,கொடி
விளங்காவினன்குடிப்பொற் கோயிலுளோர்சிகிப்பரிமேற் குலவுவானைத், து
டிமுழங்குங்கரத்தான்சற் குருவெனச்சொல்வார்க்குமென்றுந் தொலையாநா
ற்றச், செடிமலிந்தவேட்டுவரூர்த் திருடனென்கின்றார்க்குமின்பஞ் செனிக்குமன்றே.

செனியாதமுத்திபதங் குறித்தரியதவம்பெரிது செய்திட்டென்றுந்
தனியாகித்திரிபவர்க ளானாலும்பழனிமலைத் தலையிலன்றோர்
கனியால்வந்தவனடியா ரலராயினமக்காகார் கழறுமற்றை
யநியாயத்தினரேனு மவனருள்வேட்டவரெனிலெம் மடிகடாமே. (௪௮)

அடிமுடியுநடுவுமிலா வகண்டபரம்பொருளனதென் றறிந்திட்டாலுங்
கடிகமழ்மென்மலர்ப்பூசைக்கருள்செயும்பண்பதற்கிலையாற்கருதமாட்டேன்
பொடியதனுன்முழுக்காடிக் கிளொடுவெண்கோவணமும் புனைந்துகையிற்
றடிபிடித்துப்பழனிவெற்பிற் குலவுமவன்றனைமறவேன் சரதமாமே. (௪௯)

சரவணத்துற்பவித்தபெருங் கோலம்வெகுநாள்கருதித் தவஞ்செய்தப்பாற்
குரவனுருக்கொடுபழனிக் குவட்டினிற்குந்திருவுருவங் குறிக்கப்பெற்றே
னிரவலரூடொருவனெனத் திகழ்கின்றேனவனருள்சற் றெய்துமாகிற்
புரவலர்கோவாயசிலர் கண்டுளொல்குஞ்சித்தியொடு பொலிகுவேனே. (௫0)

வேறு.

பொலிவிழந்தநெஞ்சகப் புலர்ச்சிமுற்று மாறியே
மலியுமன்ப னைந்துவாழ வைக்கவல்லை யல்லையோ
குலிசவேல்வ லாரிவந்து கும்பிடக்கு லாவுசீர்ப்
பலிதமுற்ற பழனியிற் பரத்துவஞ்செய் பாலனே. (௫௧)

பாலலோச னங்களாற் பரன்பயந்த பாலகா
வேலணிந்த மார்பவா வினன்குடிக்கண் மேயவா
ஞாலமாயை யிந்தவா நலங்குலைத்த நீரமுன்
ஞேலமென் றளித்தவஞ்ச னுண்மையாதல் செய்திபே. (ருஉ)

செய்யதாம ரைக்கண்மால் செயங்குறித்த தேவர்பா
லையமின்று ரைத்தவண்மை யாயிரங்கொள் சேவகா
வுய்யவாவி னன்குடிக்க ணுன்றனைத்து தித்துளேன்
மையலான வாரியூடு மாழ்குறுத ளித்திடே. (ருங)

அளிமலிந்த செங்கடம்ப ணிந்துலாவு மையனே
யெளியன்வந்து பழனியின்க ணென்றதொண்டு செய்துளேன்
களிறுபோன்றி கன்றுளார் களைக்கனற்க ணுளிபோற்
றுளிவிழச்செ குக்கவல்ல துங்கமூடு தோய்த்திடே. (ருச)

தோயம்வெளாவி யன்றொர்கற் றொடச்சொனைய ளித்திலாய்
மாயமாந்தர் சொல்பவாம் வசைப்பெருக்கின் மாழ்கினே
னீயறிந் தருட்செயாத னீதியன்று பழனியூர்
மேயதேசி காவிஞேர் விரும்பநின்ற வீரனே. (ருரு)

வீரவாகு வந்தெனோடு விண்டசொற்கண் மெய்யெனிற்
பூரவாக னத்திதந்த போதமுங்க சப்பதே
னாரதாதி யோர்பராவு நல்லவாவி னன்குடிக்
காரணா சிவோகயோக கண்டனஞ்செய் கந்தனே. (ருசு)

கந்தனைக் கடம்பணிந்த காவலன் றனைப்பொலார்
வந்தனைக்கும் வேணபேறு வவிதளிக்கும் வரதனைப்
பந்தமற்ற முனிவர்வெளவு பழனியிற் பராவுவார்க்
கிந்தமண்ணு மந்தவிண்ணு மேற்றதொண்டு செய்பவே. (ருஎ)

பவமறக்கெ டுக்கவல்ல பாதபங்க யங்களென்
றவபலன்கொ டுக்குமுற் றலைக்கண்வைத்த சத்தியஞ்
சிவனருமறிகிலார்கொல் செப்புனப்ப ணேயோர்
குவடமைந்த பழனியிற் குலாவுசெங் குமாரனே. (ருஅ)

மாரவேள் கணைக்குளஞ்சி வந்ததோர்ந்து மாநிலத்
தாரவர்க் கியைந்ததுன் பொருங்களித்த தென்கொலோ
காரணன் பராவுமாவி னன்குடிக்க ணென்றுமுற்
றூரணத்தொ டாகமங்க ளாளுமாண்மை யாளனே. (ருகூ)

ஆளெனப் புகுந்துளா ரறைந்தநூ லனந்தமுந்
தோளெனச்சொல் வெற்பினஞ் சுமக்கநின்ற தூயவன்
வாளெனக்கண் வெட்டுமாதர் மலியுமாவி னன்குடி
வேளெனச்சொ ணுமார்வ மிக்கிரங்கும் வேலனே. (கூ0)

## வேறு.

வேலனூர்கவி விடமுண்டார்விழிப்
பாலனீடில்சீர்ப் பழனியூர்க்குக
னீலமாமயிற் பரியினேர்வரிற்
காலனுதியர் கலகமாறுமே. (கூக)

மாறுபட்டிகல் சமயவாதர்முற்
றாறுபட்டிடக் கறுவுமொள்ளியோர்
பாறுபட்டவேற் பழனிப்பண்ணவ
னீறுபட்டமெய்க் நிறைவுள்ளார்களே. (கூஉ)

உள்ளநாடுதற் குரியவொண்பொருள்
வெள்ளவாரிசூழ் புவியில்வேறிலை
பள்ளவார்வயற் பழனியூர்க்குகன்
கள்ளுறுமலர்க் கழல்களன்றியே. (கூங)

அன்றுவந்தெனை யாண்டதேசிக
னன்றுளார்மகி ழாவினன்குடிக்
குன்றுகொண்டமா கோலநாடுவார்க்
கென்றுமையுற வில்லையில்லையே. (கூச)

இல்லையேநல மெனக்கொள்வார்புரை
தொல்லைவல்வினைத் துயர்ப்பட்டேன்மலர்
குல்லைமொய்த்தவிர் பழனிக்குன்றுளாய்
கல்லைநேருமென் மனமுங்கைக்கொளே. (கூரு)

கொள்ளைவண்டமிழ்க் கவிகள்கூறியும்
வெள்ளைநெஞ்சரு மிகழவெம்பினேன்
பிள்ளையாயெனைப் பேணிக்கோடியால்
வள்ளைகூர்திருப் பழனிவள்ளலே. (கூசு)

வள்ளமென்முலை மகளிர்போகமுங்
கள்ளஞானமுங் கசக்குநாளெதோ
வுள்ளமோர்ந்தநின் னுரையெல்லாம்பொயோ
வெள்ளநீர்வய லூரிலெந்தையே. (கூஎ)

எந்தவேளையு முன்னையெண்ணுநா
னிந்தவாதனைப் படச்செய்திட்டதே
னந்தணாளர்வா ழாவினன்குடிக்
கந்தநாயகா கருணைமூர்த்தியே. (கூஅ)

மூர்த்தமியாவையு முருகனென்றெணுந்
தீர்த்தநெஞ்சுடைத் தீரர்க்கேற்றது
கார்த்தவீரியன் கனகங்கொண்டுளை
பார்த்தலத்துயர் பழனிக்குன்றமே. (கூகூ)

குன்றுறுப்புகழ் கோடிகொண்டுநின்
றென்றுநம்புவார்க் கினியசெய்குவ
தன்றுசூர்முத லவுணர்மாய்வுற
வென்றுமீண்டவன் பழனிவெற்பதே. (எ0)

வேறு.

தத்ததத்ததன தத்தத்தனனு.

வெற்பினக்குகைதொ றுற்றுத்திகழ்சேய்—விட்டுணுக்கடவுள்செப்பற்புதவேள், விற்பிடித்தகைமு சுக்கொற்றவன்வான் – மெச்சுமெய்ப்புகழ் படைக்கச்செய்துளா, னற்பினிற்பெரிய ரைப்பற்றிவிடா--னத்திபிற்றுணைவ னத்தித்தினம்வாழ்,பொற்பியற்பழனியிற்புக்கவரே—புத்திமுற்றியபொறைக்கற்பினரே

தனனதந்ததன தனதனதனனு.

இனனிடங்குடிகொள் பவனெனநினைவே – னியல்வனைந்துனடி மலர்களிலணிவே, னனமிவர்ந்தவய னெனதொருதலைமீ – தமையவன்றெழுதும் விதியினைமதியே, னுனதுதொண்டரது குழுவருகுறவா -- யுலகைவென்றுமகிழ்வுறுபயனருள்வாய், பனகபண்டிமத கரிசிறுதுணைவா – பழனியங்கிரியில் வதிதருகுகனே. (எஉ)

தனனதானதன தானனதனனு.

குகன்விழ்ைேரவரு மாசறுதகைசால் -- குரவர்யாவர்களு நாடியபெருமாளகரமேமுதலெ னானலமுணர்வா -- ரறிவினூட்கல்கி லாதவிர்முருகோன் மகரவாரிபுனை பார்மகடவநேர் -- மலைநிலாவும்வய லூர்புகுமடியேனிகழ்வுறுதுகளி கூர்வதுசெயினே -- யிருள்பொலாமதமெ லாமழிவுறுமே.

தனனதந்ததன தத்தனதனனு.

உறுதிகொண்டமன முற்றமெய்யடியா --ரொடுசிகண்டிமுது கிற்றிரிதருசேய், பெறுசிலம்பளவில் பற்பலவுளவே – பிரபலம்பொலிவ தொற்றையதெதெனு, மறுகுமன்புடைய பத்தர்கள்வமினோ -- வழுவில்கொங்கணி நுதற்றிலகமதாம், வெறுமைபொன்றவருள் வைப்பதுவயலூர் – விழையநின்றது மிகப்பெரியதுவே.

தனனதானனந் தனதனதனனு.

பெரியதேசிகன் பணிகுருபரவேள் -- பிரசமார்கடம் பணிபுயமலிசேய், பொரியெண்மோதகங் கனிவகைநுகரோர் -- புனிதயானையின் றுணையெனவருகோ, வரியராநடுங் குறவகவுவதா -- மயிலிலேறியெங் கணுமுலவிடுவா, னெரியுநாணுறும் படிதிகழொளியா -- னிணையிலாவினன் குடியிறையவனே.

தனனதந்தனத் தந்தனதனனு.

இறையுநெஞ்சகத் தன்பறுகொடியோ – ரிடமிரந்திளைத் தொஞ்சியதமியே, னறைதருங்கவிப் பொங்கமதணியா -- வடியர்தந்திருக் கும்பலுள்விடுவாய் மறையவன்றுடித் தஞ்சுறமுனிவாய் -- வளையணிந்தகைக் கொண்டல்சொல்புகழோய், பறைகொளுங்குறப் பெண்களொல்கொருவா -- பழனியம்பதிக் குன்றுறைபவனே. (எகூ)

தனன தானனத் தானன தனனு.

பவளமேனிமுற் ருர்தருபொடிசால் -- பழனிமாமலைத் தேசிகன்வடிவே
சிவனுமாலுமற் ருேர்களுமெனவே -- தினமுநாடெனைத் தீவினைதொடுமோ
புவன்கோடியிற் ருேய்பலமலைவாழ் -- புனிதராயசித் தேசரின்முதல்வி
ரிவணெணுதசிற் ருளரொடுறுநா -- ளியையுமார்வமிப் போதுறவிலையே.(எஎ)

தனதன தந்தத் தய்யன தானு.

இலையெனும்வெஞ்சொற் சொல்லிடநாணு-- ரிடமலையுந்தூர்ச் செய்கையரானு
ர், கலைமலிபண்புற் றுள்ளவர்போல்வாழ் -- கதைகொடெனெஞ்சிற் கல்லல்செ
யாதே, மலைமகள்செங்கைச் செல்வகுமாரா -- வழுவைமுகன்பிற் செல்சிறு
தோழா, முலைதிகழ்மின்கட் கொள்வயலூர்வாழ் -- முருகதிகந்தத் தொல்சி
கியோனே. (எஅ)

தனதனதன்னந் தாந்தனதானு.

சிகியிவர்மன்னன் றீந்தமிழோர்வார் -- தினநினையெண்ணம் போன்றருள்கூர்
சேய், பகிரதனண்ணும் பாங்குசெய்வேல்வேள் -- பழனியிலென்னன் பேன்
றுகொளானே, லகியுறழ்வெந்நெஞ் சோங்கினர்வாழ்வா -- ரருண்மலிதன்ம
ந்தாங்கினர்தாழ்வார், மகிமகளின்னந் தீங்குகடோய்வாண் -- மறைபகர்கன்
மம் போம்பிழையாயே. (எகூ)

தனதனதாத்தந் தத்தனதானு.

பிழைவிதிநாட்டம் பற்றியதீயோர் -- பெரிதிகழ்மூர்க்கந் துய்த்தயர்வேனு,
வுழைமகள்வாக்கும் பொய்ப்படலாமோ--வுனதடிசூட்டும் பொற்பவமேயோ
தழைநுகராட்டின் குட்டியுமீர்வார் -- தமையடிமாக்கம் பெற்றுயவாள்வாய்,
பழையவினோர்க்கஞ் சற்றரும்வாயா-பழனியில்வாழ்த்தும்பத்தர்தம்வாழ்வே

வேறு.

வேய்சூழ்வனத்தன் றெனக்கெய்துமநுபூதி மெய்யன்றெனிற்
பேய்சூழ்மயானத்தொர் தொண்டற்புரந்திட்டபேர்பொய்க்குமா
லாய்சூன்முகிற்போலு நெடியோனுமலரோனு மச்சுற்றழக்
காய்சூர்வதைத்தாய்தண் வயலூர்புரக்கின்ற கதிர்வேலனே. (அக)

கதியாமதெளிதென் வகைச்சித்தியரிதென்று கருதும்பலோ
ரதிராளியென்னக் குதிக்கும்பெருந்தீமை யழியச்செய்வாய்
பதிறுறுகோலத்தொர் குருவென்றுணர்ந்தோர்கள் பாடுந்தமிழ்த்
துதிசூடுவாயிடில் பழனிப்பதித்தொண்டர் தொழுமண்ணலே. (அஉ)

அண்ணற்றவஞ்செய்து னருள்பெற்றவொருநாத னவிர்கின்றநாள்
வண்ணத்தமிழ்ப்பாவொ டெனையிங்குவரவிட்டு வாழ்வித்திலா,
யெண்ணத்திலொருகோடி போராசையுந்தந் திரங்கச்செய்தாய்,
விண்ணட்டபழனிப்பொருப்பிற்றினந்தோறு மிளிர்தெய்வமே. (அங)

மிளிர்குங்குமக்கொங்கை யுறுதெய்வயானைக்கும் வேடக்குலத்
தொளிருங்கருங்கோ கிலப்பேடையனையாட்கு மொருகொண்கனு
மளிகொண்டுளாயந்தண் மலயத்தனுடனென்னை யாளாய்கொலோ
தளிர்விஞ்சுசோலைமலி பழனிக்கிரிக்கண்வளர் தண்டத்தனே. (அச)

தண்டத்தகோரப் பெருஞ்சேவகாசருவ சங்காரனுங்
கண்டத்தம்வாயிற் புதைக்கத்தகுஞ்சீர்செய் கருணாகரா
வெண்டத்தகற்று றெழுத்தாளநல்லா வினன்குடியிலோர்
துண்டத்தராவைத்த தோகைப்பரிக்கட் டிலங்கென்முனே. (அரு)

முன்னந்தரங்கங்கள் சொன்னயிநாளொன்று மொழிகின்றிலா
யின்னந்தவிக்கச்செ யாதேயுனக்கிதொ ரிசையாகுமோ
கன்னன்றன்வடிவங்கொ டொருபோதவிர்ந்திட்ட கனவும்பொயோ
தன்னந்தனித்தண்டு கொண்டாய்தென்வயலூர்த் தடங்குன்றனே. (அசு)

குன்றுதனூனக் கொழுந்தாயவேலா குறப்பேதைதன்
முன்றுழநாளும் முதற்றூரகந்தேறி மொழியுங்குகா
வன்றுயிரந்தொண்டர் வாழச்செய்தாயென்னை யாளிற்றையே
பொன்றுதுசித்தர்ப் புரக்கின்றபழனிப் பொருப்பின்கணே. (அஎ)

பொருளென்றுபொன்னைப் புரந்துள்ளபொல்லார் புரந்தோறுமுற்
றருள்வென்றிபொய்த்துப் பிதற்றுங்குணத்தென்னை யாள்வாய்கொலோ
விருள்கின்றசோலைப் பெருக்காவினன்குடி யிடத்தன்பர்சொற்
றெருள்சந்தமாலைக் கிரங்குங்குகேசா சிவன்பாலனே. (அஅ)

பாலத்துறுங்கண்க ளாறுங்கரந்தார் பலர்க்குஞ்சில்சீர்
ஞாலத்திலெய்தச் செய்தாயென்னையாளாதன் ஞாயங்கொலோ
சீலத்தமிழ்ப்பைங் கிளிப்பாவலன்சொற் றிருப்பாடலே
சாலத்துதிப்பார்க ளினமேயபழனித் தலத்தையனே. (அகு)

ஐயன்பிடாரிக் கெனச்சொல்லிநிணமுண்ணு மாபாசரும்
வையந்தனிற்சுத்த ராகச்செய்வானென்னை வாழ்வித்திடாய்
மெய்யன்பர்நெஞ்சந் தனைப்போலும்வயலூர் வியன்குன்றினிற்
கையன்றெடுத்தோர்சொ லென்பாலுரைக்குங் களிக்கந்தனே. (கூ0)

## வேறு.

கந்தநாண் மலர்ச்செங்குவளை கவின்றதோட் கந்தநாதன்
சொந்தமாந் தலமநேகந் தொல்புவி யிடத்துற்றாலு
மந்தரத் தமரர்போற்று மாவினன் குடியூர்போன்மென்
றெந்தம ரிசைவதொன்றின் றிதுபெருந் துணிவாமன்றே. (கூக)

ஆமனு மறுகக்கொன்றுண் டசத்தியம் பலவுஞ்செய்யுந்
தீமனச் சிதடர்தம்மைச் செகுத்திட முயலாச்சித்தர்
காமனை வென்றோரேனுங் கடையரென் றுணர்த்தியாண்டான்
சேமமீர்ப் பழனிக்குன்றிற் றினமுநா டகஞ்செய்வோனே. (கூஉ)

செய்யவ ளகலாமார்பன் றின்புகழ் திருக்கைவேற்சேய்
வையமுற் றுய்யக்காத்து மருவுதென் பழனிக்குன்றிற்
பொய்யர்வந் திறைஞ்சினும் புரைமுழு தொழிப்பதாய
மெய்யருள் பெறுவாரென்ன விளம்புமே லவர்பல்லோரே. (கங)

பல்லவஞ் சொரிவார்க்கியும் பரகதி யதனைப்பாழ்த்த
கல்லதா லெறிந்திட்டாற்குங் கடிதருள்கருணைவள்ளன்
மல்லலங் கல்லாற்கீழ்ச்செய் மாதவப் பயனுனைச்
செல்லவாம் பழனிக்குன்றச் சிரத்தினின் றிடக்கண்டேனே. (கச)

கண்டுநேர் மொழியாரின்பக் கலவியே கருதுமென்பொய்த்
தொண்டுமேற் றருள்வாயாகிற் றொடர்ந்துனைத் தடுப்பாருண்டோ
வண்டுலாம் பொழிற்றண்சாரன் மலைப்பழ னியில்வாழெந்தாய்
விண்டுவாழ் வருள்வதாமுன்விளம்புசொன் மறந்திடேலே. (கரு)

மறமக ளொருபால்விண்ணோர் மகளொரு பாங்கர்வைகத்
திறமிகும் வடிவேலேந்திச் சிகிப்பரி மிசைவந்தாள்வாய்
சிறகடித் கொண்டுகூவுஞ் சேவலங் கொடிக்கையாய்நல்
லறமுயன் றுவப்பார்போற்று மாவினன் குடிக்கோமானே. (கசு)

மானமோ ரணுவுமில்லார் மகிழ்ச்சிகண் டயர்கின்றேற்குன்
ஞானமுஞ் சித்துமின்னே நல்கிடற் கிசைவாய்கொல்லோ
தேனறாக் கடுக்கைமாலைச் சிவன்செய்மா தவத்திற்றோன்றிப்
பானல்வார் வயலூர்க்குன்றிற் பலநலம் பயில்கின்றோனே. (கஎ)

பயிரினைக் களைமேய்ந்தாங்கிப் படியினிற்பாவமிஞ்சிச்
செயிர்செய வறங்களெல்லாந் தியங்குமா றுணர்ந்திலாயோ
வயிரவேல் வயவர்போற்று மலைத்திரு வயலூர்வள்ளா
லயிருடை யொருவற்கிந்நா ளதன்பொருட் டருள்செய்வாயே. (கஅ)

வாயச வடிவுமெய்தி மகபதிக் கருள்செய்தான்பிற்
சேயவ னென்னத்தோன்றித் திருப்பழ னியில்வாழ்செல்வா
நீயறி யாதென்னெஞ்ச நினைப்பதொன் றுளதோவெல்லா
மாயமெய்ச் சொருபஞானத் தநுபவ மளித்தாளின்னே. (கக)

தாளிணை தலையுங்கண்ணுந் தரிக்கவன் றளித்தாய்நானிந்
நாளிவ ணலியலாமோ நலமுழு தருளிச்செய்வாய்
வாளினர் காக்குங்கோயில் வயங்கெழிற் பழனிக்குன்றிற்
றோளிரண் டொடுநின்றுடுஞ் சுப்பிரமணியவேளே. (௨)

முற்றிற்று.

ஆ௧-கவி-௬௱௨.

தெய்வமேதுணை.

# பிள்ளைக்கவி.

## காப்புப்பருவம்.

### திருமால்.

ஆனைமுகமுன்னவற் கிளவலெனமதிசூடி யழல்விழியில்வந்துவிண்ணோ
ரூன்றுபடமின்னலுட னவுணருருமார்வமு மழித்துத்தெழித்தபூத
சேனையொடுலாவுபெரு வடிவங்கரந்தமது சிறுமனமுநாடுதற்காந்
தேசிகவுருக்கொண்டு பழனிமலைமிசைநிலவு செவ்வேடனைப்புரக்கச்
சோனைமுகிலேயனைய தனதுருமறைத்தலைக டுள்ளும்வெண்பாற்கடலின்வாய்
சுரகணமொடசுரகண மிடுமலைசுமந்தெழு சுதைத்திரள்பகிர்ந்திடற்கா
மானைநிகருருவுஞ்சமைந்துதருவர்க்கிறுதி வருவித்தரன்றனுள்ள
மருளுறமயக்கியொருமதலையுமளித்தவரி மலரடிவழுத்துதுமரோ. (க)

### பரமசிவன்.

#### குழிப்பு.

தனனதானதத்ததன - தானத்தனத்தன.

அசிபதாதிமுப்பட்தமு — நினைகுவார்தமக்குதவி யவிர்கலாலடிக்கணுறை — வாரைப்பிறப்புறு, தளவில்கோடிசத்திகளு — மருவுசீர்பொறுத்தவரை யமலஞானசித்தர்மற — வாமற்குறிக்குமீ, — ரடியுளாரையித்தரையி னடுவினீடு பொற்சிலையி லரவநாணியிட்டிகல்வெல் — வீரத்தரைப்பொனூ, ரமரர்சேனை சுட்டபொடி — நிறையுமேனியிற்பகுதி யறமெலாம்வளர்த்தவள்கொ-ளார்வத்தரைக்கெடா, — விசிகநாடிமெய்த்தவசு — புரிகிரீடியைப்புரையும் விரதசிலர்முற்செயும்வி — ஞேதத்தரைக்கையால், விசிறும்வார்வலைச்சமனு— மதனு நான்முகத்தயனும் வெருளுமாறுறுக்கியெழு — கோபத்தரைத்தெணீர், — விதுவராவெருக்கலரி — யிதழியார்முதற்சொல்பல மிளிர்சடாடவிக்கிழவ — னுரைத்தமிழ்ச்சொலான், மிகவுநாளுமெச்சுமொரு — சதுரர்மாமனத்துலவும் விடைவலாரைவிப்பிரர்க — டேவைப்பழிச்சுவாம், — வசியமோகனக்கருணை — கொடுமினர்பலர்க்கவ்வரும் வளமையாளனைச்சகல —லோகர்க்கிட்டபனு, வருகுமாரனைப்பொருவின் — முருகநாதனைக்கலப மயில்விசாகனைச்சமர்செய் — சேவற்கரத்தனு, — வளர்குகேசனைப்பரணி — லுறையுமானனித்தமயன் மலிவதான்மரத்துருவு — மாமுத்தனைச்செவேல், வலதுதோளில்வைத்தவுணர் — குலமெலாமறக்கறுவும் வயவனைசற்குருவ— வானத்தர்வெட்கவே — பசியினோடிறக்கமறு — முனிவர்யாவருக்குமறை பகர்கிலாமுதற்பொருள்சொல் — வானைக்கனற்கணோர், பருவதாகரத்தில்வரு—தகர்கடாவிவெற்றிபெறு பூலமுளானையத்திமகள் — கோனைப்பல்பத்தர்சூழ், — பவளமேருவிற்பெரிய — சலதடாகமத்திவரு பரமசீலசற்குணவி-லாசத்தனைப்போனேர், பதுமகோமளைக்கினிய — னுயிர்கொல்வானைமுத்தருணர் பழனிமாமலைக்குமர — வேளைப்புரக்கவே. (உ)

## அம்பிகை.

தனதனதத்தன - தந்தனத்தாத்தன.

அருவமதத்தினர் சிறுமனமத்தியி
லமரும்விருப்பறு சுந்தரப்பார்ப்பதீ
யழகியலட்சுமி சரசுவதிக்கொடி
யநுதினமெச்சிவ ணங்குபொற்றூட்பிடி
யருணவரைக்கரு கொருகனவிற்றமி
யனையவணச்சிய விர்ந்தசிற்றூக்கையா
யசலவினத்திறை புரிதவசிற்பெரு
ககமகிழ்வுற்றொரு குஞ்செனத்தோற்றிறைய்

சருவமதத்தரு மிகழிடவெய்ப்பறு
சகளவுருப்பல தந்தசித்தாட்டோய்
சரதநினைப்பொடுவழிபடுமுத்தமர்
தமரவருக்கும்வ ரங்கண்மிக்காற்றுவாய்
தமிழ்கொடுசெப்பிய புலவனுணப்பல
தாமுலைவைத்தமு துஞ்சமைத்தூட்டிறைய்
தனதுயிரிற்றிகழ் தருதிரியக்கர
சவுரியநச்சிநின் முன்கைகட்கூப்புவேன்

மருவலருக்கெம னெனநிகழ்சத்திர
வயவர்வழுத்திய செஞ்சொன்மிக்கேற்றசேய்
மரகதரத்தினமெலியுநிறத்தனி
மயிலைநடத்துது ரங்கமொப்பாக்கொள்வான்
மறவர்குறிச்சியி லொருகுடிலுற்றுமுன்
வளர்சிறுமிக்குந யங்கள்செப்பாற்றலான்
மகபதிமுற்றமல் கியகரிபுத்திரி
வனமுலைமுட்டிய விங்கிதப்போர்ச்செவேள்

பருவதமுற்றுமொர் குடையினுள்வைத்துள
பழையவன்மொய்த்தக டம்பலர்த்தார்க்கொள்கோ
பறிதலையிற்புழு நெளிதருதுட்டர்கள்
பதறியழப்பதி கங்கள்சொற்றூர்த்ததோர்
பனவனுமுக்கிர வழுதியுமுற்படு
பலரையிழுத்துவி ழுங்கருட்கூத்தன்மால்
பகர்பெருமைக்குகன் வளமலிவுற்றுயர்
பழனிமலைக்கும ரன்றனைக்காத்திடே. (௩.)

## விநாயகர்.

தனதானதத்ததன - தானனத்தாத்தனு.

கனியாதிமிக்கசுவை யுணவான்மகிழ்ச்சியுறு
கடமாமுகக்கடவு ளானைநட்டார்க்கொரேழ்
கடனேர்பிறப்பொழிய நினைவானையொப்பில்பர
கதிஞானவித்தனைய தாரகக்கோட்டுளே
தனியானதத்துவனை யொரு*மூவருக்குவகை
தருகேள்வனைத்தண்வய லூர்முகப்பாச்சொல்சீர்
தருசாரலிற்குலவு கணநாதனைப்பெரியர்
தணவாதுமுற்றொழுமொர் தேவினைப்போற்றுவா
மநியாயமுற்றுபல தகுவேசர்சுற்றமுட
னழிவாகிடப்பொரும்வை வேலனைத்தோட்கண்மீ
தணிசாருவைப்பரவு புலவோர்கவித் தொடையி
லதியாசையுற்றகும ரேசனைத்தூர்த்தர்நேர்
பனியாதுறுக்கவல கவுமாரருக்கினிய
பயன்யாவுநித்தமருள் வானைமைச்சூற்கொண்மூ
படர்சோலைசுற்றுகவி னுலவாதுயர்ச்சிபெறு
பழனுபுரிக்கிரிவி சாகனைக்காக்கவே. (ச)

## திருமகள்.

தனதானதந்ததன தனனதனதத்தனு.

பவளாசலம்புரையும் வடிவொடுமலர்க்கண்மால்
பதையாதநெஞ்சினுறு மனைவியையிமைப்பிலார்
தவயோகர்முன்பகர்பு ணியர்பலருநச்சவே
சலசாதனந்தனில்வை கியகொடியைமெச்சுவா
முவமானமின்றியசண் முகவாதனைப்பனூ
லுணர்வார்புகழ்ந்தகுர வனைவிடையுகைத்துவாழ்
சிவனார்பயந்தசிறு மதலையினைமுத்தர்சூழ்
திருவாவினன்குடியின் முருகனையளிக்கவே. (ரு)

## சரசுவதி.

தனதனதத்தன - தானனத்தாத்தனு.

அலர்கமலத்தவி சுறைதருவிப்பிர
னகமுருகப்புண ரோதிமச்சீர்ப்பெணு
ளலைகடலுட்கொளு முனிவன்வசிட்டன்மு
னவிர்தருமக்கள்பல்கோடிபெற்றுட்கொள்வா
டலமுழுதிற்றிக ழுயிர்கள்சிருட்டிசெய்
தருமமதற்கொர்ச காயசித்தாட்டுளா

* மூவர் — சித்தி - புத்தி - வல்லபை.

டவளநிறப்பிடி யனையவள்சத்திய
சரசுவதிக்கொடி தாள்களைப்போற்றுவா
மலகில்படைப்பொலி வுறுதருவர்க்கெதி
ரயிலைவிடுத்துவெல் வாருவிற்பூத்தபூ
வவளவுமிட்டுள குமரன்மயிற்பரி
யழகனெமக்கொரு தாயெனத்தோற்றுசேய்
பலபலவெற்பினில் வளரெயினத்திரள்
பணியுமுவப்பவன் வானவர்க்காத்தகோ
பரசணியத்தரும் வழிபடுபொற்புறு
பழனிமலைக்குரு நாதனைக்காக்கவே. (சு)

## நவக்கிரகங்கள்.

தனத்ததன தானதன - தானதனதந்தனு.

வருக்கர்மனநாணமுற வாழ்துருவனங்கையால்
வளைத்துவிடுநேமிபுனை மாமணியிலொன்றியே
நருக்கெனவெநாளும்வட மேருவைவலஞ்செய்சீர்
நவக்கிரகதேவர்களை நான்மிகவணங்குவேன்
மருக்கமழுநீபமலர் மாலைபுனைகந்தவேள்
வலக்கையகலாதவிர கோரசெயதண்டுளா
னிருக்குமுதலாயமறை கோடிபுகழ்தம்பிரா
னெழிற்பழனிமேவுமுரு கோனலம்விரும்பியே. (எ)

## நல்லதெய்வங்கள்.

நாயுநரியா தியபிறவு நச்சியருந்தத் தகுமூனு
நரிற்கடையா மவர்பருகநாறுமரக்கு நவைக்கள்ளுந்
தோயுங்கொடும்பூ சையின்விருப்பந்துகளொன்றளவா யினும்பொருந்தாத்
தூயகடவு ளினமுழுதுந் துதித்தேநாளுந் தொழுதெழுவாந்
தேயும்பிறைவா ணுதற்கவுரி செங்கைக்குருந்தைச் சிவபெருமான்
செவியிற்பரம ரகசியஞ்சொல் சிறுவாய்க்குமர குருபரனைப்
பாயுந்தகரு மயிலேபோற் படியிற்ககனத் துறச்செலுத்தும்
பணைத்தோண்முருகப்பெருமானைப் பழனிப்பதியிற் புரப்பதற்கே. (அ)

## மெய்யடியார்.

சத்தசுரநான்மறைச் சமயங்களாறினுந் தரணிமண்டலமாதியாச்
சாற்றுபுவனங்களினு மென்றென்றுமுற்றபல தரமாயதொண்டர்கட்கும்
புத்தமுதமனையதுதி சொற்றவர்பதாம்புயப் பூந்துகண்முடிக்கணிந்து
புலையுடைக்கயவர்மனை புகுதாதவிரதமொடு போதவஞ்சலிசெய்குவா
மத்தமறுகாத்திகொக் கிறகாதியணிசடில வள்ளல்விழியுதவுமகவை
மயிலேறியண்டபகி ரண்டமெங்கனுமுலவும் வரதனைச்சரதமிகழாப்
பத்தர்மனபங்கயத் திற்றனியனுநிலவு பரமதேசிகனையந்தண்
பழனியங்கிரியில்வளர் குமரபுங்கவனைநனி பாதுகாத்தருளவென்றே. (கூ)

## பொதுத்தெய்வம்.

தனதனதத்தந்த - தானனத்தாத்தன.

அகிலமனைத்துந்தன் வசமிலகக்கொண்டு
மமைவருநிர்த்தொந்த மானதைச்சூட்டுவா
லனமிவர்பொற்கஞ்ச னுததிநடுத்துஞ்சு
மரியொரெழிற்கொங்கை பாதியிற்காட்டுவா
ளனையர்வழுத்துஞ்சொல் வனைவதனைப்பொங்க
மவிர்கருணைச்சிந்தை மோனவித்தாப்பலோ
ரறிபெருமைக்குன்றை வெளிநிறையத்துன்று
மதிசயமுற்றெஞ்சு றுதனைத்தீய்க்குநேர்

திகிலொழியச்சந்த தமுமுணர்கற்பன்பர்
செபதவமுற்றுங்கொ டாள்வதைக்காக்கைபோல்
சிலர்தெரியக்கொஞ்ச மிளிர்பொருளைக்கண்கள்
செறியுடலத்தும்பர் கோனிசைக்கேக்கருர்
திரண்முழுகுத்துங்க மருவியதைப்பண்செய்
திருமறைகட்கந்த மாமுதற்பேற்றையூர்
தினகரசற்சங்க முழுமையும்வெட்கொண்கொள்
சிவபரவத்தென்ற தேவைமிக்கேத்துவாம்

வகிர்வடிவிற்கண்கொள் குறமகளைக்கெஞ்சு
மகிமையுடைக்கந்த வேடனைக்காட்டுமா
மகபதிதற்சொந்தவரண்மனையிற்கொண்டு
வரவளர்பொற்கொம்ப னண்முலைப்போர்க்கவா
மலிகுகனைக்கும்ப முனிவன்முதற்றொண்டர்
மலையமலைக்கண்ப ராவுசொற்பாக்களான்
மகிழ்பவனைக்கங்கை யருள்சுதனைச்சிங்கன்
மடியவதட்டுங்கு ரூரனைத்தோற்றதோர்

பகிரதனுக்கம்பு வியினரசைத்தந்து
பகையுமறுக்குங்கை வேலனைப்பூக்கொய்தே
பதமலரிற்சிந்து தொழிலினர்முற்பொங்கு
பதிதர்குலச்சங்க நாசனைக்கோட்டிருல்
பலமதுவைச்சிந்து பொழிலினிடத்தண்டர்
பழகும்வியப்புந்து சாரலிற்சேற்கொணீர்
பரவையெனக்கண்ட வளமலியக்கொண்ட
பழனிமலைத்தண்ட பாணியைக்காக்கவே. (௧0)

காப்புப்பருவமுற்றிற்று.

---

## செங்கீரைப்பருவம்.

திங்கள்வெண்குழவி தவழ் சடிலச்சிவன்றனது தேவியையுநீத்துநெடுநா
டெக்கணமுகத்தனுக் கல்லாலநீழலிற் செய்தவமுதிர்ந்திட்டதாற்
பங்கயம்பொருதழல் விழிப்பொறிகளாவந்து பைம்புனற்சரவணத்திற்
பாலகனுருச்சமைந் தாரன்மின்னாறுவர் பால்குடித்தும்பசித்துச்
சங்கலம்புறுமென்கை யுமையவளெடுத்தமுது தாவுண்டுவந்துநீடித்
தருவரையழித்தமரர் படுசிறைதவிர்த்தருட் சற்குரவனாகியப்பாற்
செங்கரும்பினனும் விளையாடல்பலசெய்வாய் செங்கீரையாடியருளே
திருவாவினன்குடியின் மருவுமுருகேசனே செங்கீரையாடியருளே. (க)

சைவமாதியவருட் சமயங்களுக்குந் தடஞ்சிலையனைத்தினுக்குஞ்
சலதியுண்டவன்முதற் றவசிகளெவர்க்குந் தமிழ்ச்சங்கம்யாவினுக்கு
மெய்வரோதயஞான தேசிகரெவர்க்கும்விறல் வீரரொடுசாரதர்க்கும்
விண்ணவர்திரட்குமகன் மண்ணவர்தமக்கும்வளமிஞ்சுபல்புனங்களுக்குங்
கைவழாதமர்முடுகு சேனாபதிக்குங் கலாபமயில்சேவலுக்குங்
கனலுதவுதகருக்கும் வெள்ளிவெற்பெனமிளிர் களிற்றினுக்குங்கருங்கட்
டெய்வயானைக்குமற வள்ளிக்குநாயகா செங்கீரையாடியருளே
திருவாவினன்குடியின் மருவுமுருகேசனே செங்கீரையாடியருளே. (உ)

பொய்வேதனைத்தொழிற் கிரவுஞ்சவெற்பினும் புலிவெங்களிற்றின்மீதும்
பூதரொடுவீரரைக் கொடுபெரும்புணரியிற் போமாயவாளியினினுங்
தெய்வேந்திராதியர்க ளுறுதுயரனைத்தினுந் தீயவெஞ்சூர்மாவினுஞ்
சிலையிறைதருங்கவுரி யுறுபெருந்தாகத் தியக்கத்தினும்பல்பொருடோய்
மைவேலையுறழ்பனுவ னுவல்கீரனடைபட்ட வரையினுநிறங்கறுத்த
வடவைபுரையலகையினுமற்றுமிவையன்னபல்வயிற்றொறும்வலம்புயத்துச்
செவ்வேல்விடுத்துச் செயம்பெற்றசேவகா செங்கீரையாடியருளே
திருவாவினன்குடியின் மருவுமுருகேசனே செங்கீரையாடியருளே. (ந)

மின்படுநெடுஞ்சடைச் சிவனிகரகத்தியனும் வீணைவலநாரதனுநல்
விரதமுசுகுந்தனுங் கங்கைவருமாறுதவ மிகமுயல்பகீரதனுமோர்
வன்பனைமணந்துற்ற வணிகமகளும்புலமை வலிபெறுதமிழ்க்கீரனு
மாறில்பொய்யாமொழியு மருணைநகரின்சிகரி வடவருகினுய்ந்துளானுங்
கொன்பரவைநீந்திப் பிழைத்தசிவஞானியுங் கோவலூர்வந்ததொண்டன்
குறைதவிர்பிறப்புதவு முனிவனும்போரூர் குலாவவருவானுநிகர்பே
ரன்பரெதிர்மயிலேறி யாடிவருமழகனே யாடியருள்செங்கீரையே
யணிபொழிற்பழனிமலையாளுமுருகையனே யாடியருள்செங்கீரையே.(ச)

கொம்புடைக்கரியுரிவை போர்த்தவனுரத்தினுங் குன்றமகண்மடிமீதினுங்
கும்பமுனியாதியர் சிரத்தினுங்குஞ்சரி குறக்கோதையங்கைகளினும்
பைம்புனற்சாரற் குறிச்சிகளினும்பல பருப்பதச்சென்னிகளினும்
பாவலவர்சித்தர்மன் னவர்முதலினோர்களவை பலவற்றினும்பனைக்கைச்

செம்புகர்க்களிறுடு மயிலிடபமுதுகினுந் திருவருணையூர்ப்புலவனேர்
சிரியவர்கவியேழுது சுவடிகளினுந்தினந் தினமணங்கமழ்வதாய
வம்புயப்புதுமல ரெனக்குலவுபாதனே யாடியருள்செங்கீரையே
யணிபொழிற்பழனிமலையாளுமுருகையனே யாடியருள்செங்கீரையே. (ரு)

வேறு.

செம்பொற்பணிக ளவிர்ந்தாடத் திருவாய்மலரி னகையாடச்
சீரார்நுதலில் வெயர்வாடச் செழுமாமலர்ச்சி றடியாடக்
கொம்பொற்றையுளா னுடனாடக் கோலாகலமா மயிலாடக்
கூவுஞ்சேவற் கொடியாடக் குழுவுமமரர் குலமாடப்
பைம்பொற்கவரி களியாடப் பழமாமறையி னிசையாடப்
பலதானவருட் பயமாடப் பாம்பும்புலியும் பார்த்தாட
வம்பொற்சிலையோன் கூத்தாட வாடியருளாய் செங்கீரை
யருள்கூர்பழனிக் குருபரனே யாடியருளாய் செங்கீரை.

கணியார்புனங்காப் பிதண்மடவார் கவணுங்களமுந் தருமொலியுங்
கரடிபுலியா தியபிறழுங் காறுற்றொலியுங் கணைசொரிவிற்
றிணியார்புயவேட் டுவரொலியுஞ் சிகியாதியபுட் டிரளொலியுந்
தெய்வத்தகைசா லரமகளிர் தினமாடியதாட் சிலம்பொலியும்
பணியாமகிழ்மா தவரொலியும் பறையாதியபல் லியத்தொலியும்
பைங்காரொலியு மெதிரொலியும் பரவிப்பசும்பொன் னகர்வியக்கு
மணியார்குறிஞ்சிக் கிறையவனே யாடியருளாய் செங்கீரை
யருள்கூர்பழனிக் குருபரனே யாடியருளாய் செங்கீரை.

வேறு.

தனதனதனதனதனதனதனதன - தானனதந்தான.

மறியணிகரதலன் முதலியகடவுளர் வாடலொழிந்தார்கண்
மகபதியுடனுள புலவர்களனைவரும் வாழிமொழிந்தார்கள்
செறிதருகடலினு மிகைபடுமவுணர்க ளுரமிழந்தார்கள்
செபதவநெறியிடை வழுவறுமுனிவரர் தீவினைவிண்டார்கள்
பறிதலையமணரு மவரதுபிறகுசெல் பாவருநொந்தார்கள்
பதிதர்கள்குடைநிழ லலமெனுமிழிவினர் பாறினர்கண்டாய்மெ
யறிவினையறிபவர் வழிபடுமிறையவ வாடுகசெங்கீரை
யழகியபழனியி லமர்சிவகுருபர வாடுகசெங்கீரை. (அ)

தத்தனதத்தனதத்தனதத்தன - தானனதந்தான.

பத்திநெறிக்கண்மி கத்துணிவுற்றவர் பாழின்மயங்காது
பற்பலசித்திகள் பெற்றிலகத்துதி பாடிநின்முன்போதி
முத்திவிருப்பின்மு மூக்குறுசற்சனர் மூடரிடம்போய்வெண்
முத்தொடுபொற்பண நெற்குவையிச்சைகொண் மோகமழிந்தேக

நித்திரையொக்குமி ருட்கணுவப்புறு நீசரகங்கார
நெட்டுரமற்றிட மற்றையர்கட்டம னேகமும்விண்டோட்
வத்திமுகக்கட வுட்கொருபிற்றுணை யாடுகசெங்கீரை
யற்புதமிக்கதி ருப்பழனிக்குக னாடுகசெங்கீரை. (கூ)

தானனதானனதானனதானன - தந்தானந்தான.

பார்வையின்வாழ்பல வூரவர்கூடிய பந்தானஞ்சோலை
பாகுறழ்பாடல்வ லாரிசைவாலுயர் பண்பாடுஞ்சில
நார்வழுவாதசி வோகமெஞானியர் நண்பார்சந்தோட
நாரியரோடுவி ணோர்கள்சதாவர னந்தாவண்சாரல்
போர்வயவீரர னேகர்கள்சூழ்தகை புண்பாடொன்றுத
பூசுரர்சேகர நீர்வளமாதிய பொங்கோர்குன்றுத
சீர்வயலூர்மலை மேல்வளர்தேசிக செங்கோசெங்கீரை
சேவனிலாவிய கேதனமாரத செங்கோசெங்கீரை. (க0)

செங்கீரைப்பருவமுற்றிற்று.

---

## தாலப்பருவம்.

சீரார்குறிச்சி தொறுநடித்துச் சிறுமென்முலையார் பலபேரைத்
திருடிப்புணர்ந்து தமிழ்ப்புலவர் சிந்தைகவர்ந்து சிறிதேனும்
பாராதியின்மால ளூகரிய பரமானந்தத் தவசிகளுட்
பதுமம்புரையு மனத்தவிர்ந்து பங்கேருகனைச் சிறைப்படுத்திக்
காரார்வடிவத் திருநெடுமால் களிக்கத்தகுவர் களைத்தடிந்து
கண்மூன்றுடையாற் குபதேசங் கழறியிருமா தரைக்கலந்து
தாரார்கடம்பு புனைந்தகுகா தாலோதாலோ தாலேலோ
தண்டேந்தியகைப் பழனியப்பா தாலோதாலோ தாலேலோ. (க)

முன்னம்பனுவற் றொகைவகுத்த முனிக்கோன்விதிக்கா வருவிப்ப
மொழிகின்றனனீ யிதுதானே முற்றுநலமா மெனுந்துணிவா
லின்னந்துயிலக் கருதாதே யிந்நாட்டியிலு மறல்வேண்டு
மேபாரூசற் றுதியாக்கொண் டீனர்குடைத்தீங் கொழித்தெமையாள்
கன்னங்கரிய விழிமடவார் கலவிப்போது மெய்யடியார்
கருதும்போது முபநிடதக் காட்டின்முடிவிற் கவின்றுங்கு
தன்னந்தனியாத் திகழ்முருகா தாலோதாலோ தாலேலோ
தண்டேந்தியகைப் பழனியப்பா தாலோதாலோ தாலேலோ. (உ)

அருவுமுருவு மருவுருவு மாமோர்மூன்றுந் தனவேயென்
றறிவார்தமக்குமொருபடித்தேயாவாயெனப்போற்றிசைப்பார்க்கும்
கெருவச்சமணு தியர்பலருங் கெடுமாறியற்றத் தவம்புரியுங்
கிளர்ச்சியினர்க்குங்கொடுங்கோன்மைக்கீழோர்மருமங்கிழிப்பார்க்கும்

பருவமதிநேர் முகமடவார் பரவும்பெருமை படைத்தோர்க்கும்
பகரும்பிறர்க்கு மவரவர்தம் பான்மையளவி லருள்புரியுஞ்
சருவகுருதே சிகமுருகா தாலோதாலோ தாலேலோ
தண்டேந்தியகைப் பழனியப்பா தாலோதாலோ தாலேலோ. (௩)

கண்ணுயிரத்தான் மகள்கணவா கானக்குறத்தி பணிபுரிவாய்
கதிர்வேற்படைக்கைக் காவலவா கயிலைக்கிரியார் விழிப்புதல்வா
வெண்ணூர்குடிக்கோர் நெருப்பாவா யீரேழுலகுந் தகருகைப்பா
யெல்லாமுணர்ந்த முழுப்புலவா விரங்காமனத்தார்க் குணர்வரியாய்
மண்ணுட்டினிற்சிற் சிலமனித வடிவுஞ்சமைவாய் மரகதமா
மயிலூர்ந்துவப்பா யுலகளிக் குமாரோன்மருகா மழைமலிவாற்
றண்ணூர்பொழில்சூழ்பழனிமலைத் தலைவாதாலோதாலேலோ
தவத்தோர்பலர்க்கு மொருகுருவாஞ் சரதாதாலோ தாலேலோ.(௪)

அகரமுதலே யெனக்குலவு மைம்பத்தொன்று மக்கரமு
மவற்றூற்றோனிக்கு நான்மறையு மாகமாதிப் பலநூலும்
பகலுமிரவுங் கதிர்மதியும் பகுத்தோதரும்பற் பலகோளும்
பாராதியவைம் பூதமுமப் பரப்பானிகழ்பல் பவுதிகமு
மிகழ்வும்புகழ்வும் பொலிந்துளவா மெண்ணில்சமயப் பெருங்காடு
மேகபரவா தமுமொன்றென் றிரண்டென்றுரையாப் பொதுநிலையுஞ்
சகளமொடுநிட் களமுமொரு தானுமுருகா தாலேலோ
தண்டமொடுவேல் கொடுபழனி தனில்வாழ்குமாரா தாலேலோ. (௫)

வேறு.

பண்டைநான்மறையினது முடிதொறுமவிர்ந்துளபருப்பதந்தொறுநடித்துப்
பரமனுஞ்சிவையுமவர்விழிகளிலணிந்துமுகர் பங்கேருகங்களாகித்
தொண்டைபங்கனிவாய்மடந்தையர்கள்வாழ்மனைதொறுந்தொறுநடந்துமெய்மைத்
தொண்டர்களனேகரைத் துய்த்துமிழ்கலாததொர் சுதந்தரசுபாவமெய்திக்
கண்டையுஞ்சங்கமுங் காகளமுமாதியன கல்லென்றொலிப்பநாளுங்
கமனசித்தேசரும் பூசனைசெயும்படி கவின்றந்துகழல்சிலம்பு
தண்டைபுனைசெஞ்சரணென் முடிமிசைதரித்தவா தாலேலதாலேலவே
தண்டொன்றுபழனிமலை தனிலூன்றுகுருபரா தாலேலதாலேலவே. (௬)

கவளமென்றமுதமுண் டுண்டுதுயிலாதுலவு கனகநகர்வேழமொன்றுங்
கமலாதனத்தில்வளர் பிரமாவிருப்பமுறு கவினூர்ந்தவன்னமொன்றுங்
குவலயமளித்துண் டுமிழ்ந்தநெடுமாலுவகை கூரவருமுவணமொன்றுங்
கொற்றமுத்தலைவேலுடைச்சிவனைமுதுகினிற்கொண்டுலவுமிடபமொன்றும்
பவளமால்வரையனைய கணபதிதனுக்குப் பதாகையொன்றுங்கவுரிதன்
பங்கிலுள்சிங்கசே தனமொன்றுமற்றுமுள பலவுநாணிப்பராவுந்
தவளவன்சேவற் கொடிக்கந்தநாயகா தாலேலதாலேலவே
தண்டொன்றுபழனிமலை தனிலூன்றுகுருபரா தாலேலதாலேலவே. (எ)

## வேறு.

*தத்தனதத்தனதத்தனதத்தன - தானதானா.*

மெய்த்தவமுற்றவர் கற்பருமைக்குணம் வீணேபோகாமே
விட்டுணுமுற்புக ழுத்தகுனிச்சைகொண் மேலோர்தாழாமே
கைத்தசுவைக்கவி நச்சிவசைப்படு காதார்வாழாமே
கற்பம்வரைக்குமி றப்பறுசித்தர்த காசீர்தோயாமே
பைத்தலையுற்றபு விக்கிடரைப்புரி பாழாராளாமே
பக்குவமெட்புரை யக்கொடுநிற்கிலர் பாய்மாநேராமே
சத்தசுரச்சுரு திப்பொருள்வித்தக தாலோதாலேலோ
தக்கதிருப்பழ னிக்கிரியிற்குக தாலோதாலேலோ. (அ)

*தானனதானனதானனதானன - தானதானா.*

சேவலொடோர்கிளி மேவியதோள்பெறு சீர்மாறுவேடா
சீகரநீர்முத லாவனசூடியொர்சேவூர்வார்பாலா
காவளநாசம தேவிழைவார்கள்வி காதாமாபேர்தா
காரணகாரிய மாகிநிலாவும காராவோகாரா
மாவடுசேவக மோதியபாவலர் வாழ்வாவாய்மாயா
வாசனைதீர்பர ஞானியர்சேகர மாவீடார்பாதா
தாவறநீடுக லாபசிகாவள தாலோதாலேலோ
சாதனர்சூழ்பழ னாபுரிவேலவ தாலோதாலேலோ. (கூ)

*தனதனதனதனதனதனதனதன - தனனதானா.*

பனிமலர்முழுமையு மணிதருசரவண பவனேதாலேலோ
பகலுடனிரவறு வெளியிடைநிலவிய பழையோய்தாலேலோ
தனியெனவுணர்பவர் விழைதருபயனருள் சரதாதாலேலோ
தமிழ்நயமறிபவர் பலர்பரவியவொரு தலைவாதாலேலோ
குனிதருசிலைவலி வயவர்கள்பலர்பணி குழகாதாலேலோ
குமரியரிருவரொ டொருமயின்மிசையிவர் குரவாதாலேலோ
முனிவர்தமரசுட னெருபொருணுவலிய முதல்வாதாலேலோ
முருடரும்வழிபடு பழனிமலையில்வளர் முருகாதாலேலோ. (கய)

தாலப்பருவமுற்றிற்று.

---

## சப்பாணிப்பருவம்.

மந்திரசடாக்கரம் பகருமெய்யடியவர்தம் வல்வினையனைத்துமோட
மரகதகலாபமயி லொடுவேலைநினையுமவர் வந்துவந்தினிதுகூடத்
தந்திரகலைப்பிரியர் தாமுமவருக்குரிய தருமத்தமைந்துவாழத்
தகுவருஞ்சமணருஞ் சாக்கியருமாதியர் தருக்கமிழந்துதாழ
விந்திரனுடன்றேவர் தாமுமறுசமயத் தியைந்தோருமுவகைபொங்க
விஞ்சையுங்கொலைபுலையு மருவியவர்யாவர்களுமிரவிமுற்பனியின்மங்கச்
சந்திரசடாடவிக் கிழவர்தருபாலகா சப்பாணிகொட்டியருளே
தமிழ்வள்ம்பெரிதுவளர் பழனியங்கிரிமுருக சப்பாணிகொட்டியருளே (க)

அண்டபேரண்டங்க ளிடமுற்றபாம்பின மனைத்தும்வசமாறவகவுற்
றரிதாயநாதத் துவம்வரைகலாபத்தி னணிகிளர்ந்திடவிரித்துக்
கொண்டல்சூழ்குலவரைக டவிடெனப்பொடிபடக் குதுகூலநடனமாடிக்
கோரமிகுதானவர்கள் பைசாசர்முதலினர்க் கொத்திக்கிழித்தருந்தி
யெண்டகுதிசைப்பால னத்தர்முதலியதேவர் யாவரையுமாதரித்திட்
டிணையில்குடிலைச்சத்தி யென்றுணருமறிஞருக் கினியவறுபூதியுதவுஞ்
சண்டவேகத்தனிம யிற்பரியுகைபபவா சப்பாணிகொட்டியருளே
தமிழ்வளம்பெரிதுவளர்பழனிபங்கிரிமுருக சப்பாணிகொட்டியருளே (உ)

மகமுயன்றிடுநார தாதிமுனிவோரெலா மனநடுநடுங்கியோட
வானத்துமேடமுங் குசனும்மெக்கினிதன் மைப்பரியும்வெட்கியுட்க
மிகமுழங்கிக்கரிய கோடிரண்டொடுநிலவு மேருவரையெனவுதித்து
விண்ணிற்புகுந்திந்தி ரன்றனகரிற்றேவர் வெருளுறவெகுண்டுமுட்டி
நிகரில்கமலாதனத் துற்றபிரமன்றனகர் நெளிநெளிதரக்கலக்கி
நெடுமாயனகரினும் புக்களவிலின்னல்க ணிறைத்துலாவித்திகழ்ந்த
தகரினையடக்கியொரு பரியெனக்கொண்டவா சப்பாணிகொட்டியருளே
தமிழ்வளம்பெரிதுவளர் பழனியங்கிரிமுருக சப்பாணிகொட்டியருளே.()

கங்குலின்றிபபொன் னகர்க்கடவுள்யானைதரு கன்னிமனநொந்துவாடக்
ககனமுனிமொழிவழி கடுக்கென்றெ பூங்தொரு க நங்கானகம்புகுந்து
வெங்குறவரேனலரு கிற்சிறுமியைக்கண்டுவேடம்வெவ்வேறுகொண்டு
வேங்கைமரமென்றுநின் றவடருதினைப்பிண்டி மிகவுண்டுமேலுமேலும்
பொங்குமயல்வாரிச் சுழிப்பட்டலைந்தொரு புகர்க்கரிசெயுதவியதனுற
போதப்புணர்ந்தவள்சொல்குற்றேவன்முற்றும்புரிந்துவகைபொலியுந்தொறுங்
குங்குமத்தோள்கொட்டியாடுமதிகாமுகாகொட்டியருள்சப்பாணியே
குளிர்பொழிற்பழனியினில்வளர்குமரகுருபராகொட்டியருள்சப்பாணியே.

சீலத்தபோதனர்க ளானந்தமீறித் திருக்கணீர நவிகொட்டத்
தேவர்கின்னரர்கருடர் கந்தருவராதியோர் செங்கைமலர்மாரிகொட்டப்
பாலத்திருட்டம் படைத்தவறுமைமையும் பழிக்கநநலுவகைகொட்டப்
பருவதாகாரப் பெரும்பூதகணநாதர் பல்லியங்கொட்டமுற்று
மாலத்தெழுந்தகுவர் நெஞ்சகம்பறைகொட்டவரமகளிர்வீணைகொட்ட
வறநீதிமன்னர்மனை தோறுமுரசங்கொட்ட வசலந்தொறுங்களிப்பாற்
கோலக்குறச்சிறுவர் தொண்டகங்கொட்டநீ கொட்டியருள்சப்பாணியே
குளிர்பொழிற்பழனியினில்வளர்குமரகுருபராகொட்டியருள்சப்பாணியே.

வேறு.

பலபன்மடவார் விளையாட்டும் பங்கேருகமுங் குவலயமும்
பவளச்சிறுகா லோதிமமும் பருவால்வளையுங் கயற்றிரளு
மலகில்பரிமா வெனப்பாயு மலையின்குழுவு நவமணியு
மறிவிற்பெரியா ரநுட்டான மனைத்தம்விதமாச் செயுமழகு

முலவுங்கவரி சிலபுனல்புக் குழப்பும்வனப்பு மிவையனைய
வோராயிரஞ்சீ ருள்ளனவு மொழியாதென்றுந் தடந்தோறுங்
குலவும்பழனிப் பதிமுருகா கொட்டியருளாய் சப்பாணி
கொல்லாவிரதர்க் கருள்குமரா கொட்டியருளாய் சப்பாணி. (சு)

நாறுமலர்ப்புங் கவன்சொன்மறை நான்குங்கயிலைக் கிரிக்கடவு
ணவிலுமெழுநான் காகமமு நளிர்தென்பொதிய மலைக்குவட்டி
லேறுங்குறுமா முனிபகர்நூ லெண்ணில்பலவுந் தனி நாவா
யிடத்திற்பிறந்தான் காவியங்க ளீரொன்பதுநற் கீரனுவ
லாறுபகுதிப் பனுவலொன்று மருணைப்புலவோன் றிருப்புகழு
மணிப்போரூரன் முதலினர்சொ லருமைக்கவிக ளளவிலவுங்
கூறுந்திருவா வினன்குடியாய் கொட்டியருளாய் சப்பாணி
கொல்லாவிரதர்க் கருள்குமரா கொட்டியருளாய் சப்பாணி. (எ)

வேறு.

தனதனதனதன தனதனதனதன - தத்தனதத்தான.

நிறைபெறுமகளிரும் வயமலிபுருடரு நெய்த்தமலர்ச்சோலை
நிலவியவமரரு முனிவருமனமிக நெக்குருகிப்பாடு
மறையவர்களுமர சினர்களும்வணிகரு மற்பணையிற்சாலும்
வகைபடுபயிரிடு தொழிலினர்களுநுவன் மற்றைநலத்தோரு
முறைவழிவழுவற வொழுகலினருணெறி முற்றுதலுற்றுசு
முழுமையுமிரிதர மகபதிநகரமு தற்சொல்வனப்பேர்வெல்
குறைவறுவளமுறு பழனியினிறையவ கொட்டுகசப்பாணி
குறுமுனிபரவிய சரவணபவகுக கொட்டுகசப்பாணி. (அ)

தனனதனன தனனதனன - தத்தனதத்தான.

படவாளரவா யிரகோடியுமா பத்தடையக்கூவு
பசுமாமயில்வா கனமேறியவா பற்பன்மலைக்கோயி
லிடமேகதியா விழைவாரெதிர்போ யிச்சையளித்தாளு
மிளையாய்குறமான் மகிழ்காவலவா வெற்றுமுரற்கால்கொள்
கடமாமகவான் மகள்சேர்கணவா கட்கவலித்தீரர்
கணநாடியதோர் துணைவாவிணைதீர் கட்டழகுக்கார
குடவால்வளையூர் வயலூர்முருகா கொட்டுகசப்பாணி
குமராகுழகா குரவாகுகனே கொட்டுகசப்பாணி. (கூ)

தத்தனதத்தன தத்தனதத்தன - தத்தானத்தான.

நற்றவமுற்றவ ரைப்பழிசெப்புத னட்டார்கெட்டேக
நக்கனையச்சுத னைக்கமலத்தனை நத்தார்கட்கூறு
முற்றவிரக்கமி லர்க்கிடர்மிக்குற மொய்த்தாரிற்பாடு
முத்தமிழ்விற்பனர் முற்கலியச்சுற முத்தேயொப்பாய

பற்றகைபெற்றவ ரிட்டமயக்கிடை பட்டேனுக்காசில்
பத்தியளித்தது மெய்ப்படமிக்கசெ பத்தார்கட்சூழ்பல்
குற்றமறுக்குமு ழுக்கருணைக்குக கொட்டாய்சப்பாணி
கொற்றமுடைப்பழ னிக்கிரிவித்தக கொட்டாய்சப்பாணி. (கம)

சப்பாணிப்பருவமுற்றிற்று.

---

## முத்தப்பருவம்.

சித்தர்பலர்க்கோ ரரசாகித் திகழ்வெண்கயிலைக் கிரிமிசைவாழ்
சிவனார்தாமு மவரிடபாற் சிறிதும்பிரியா வுமையாளுஞ்
சுத்தமலிபா ரதியுஞ் சுடர்நேருடுக்க ளோராறுந்
தும்பிமுகத்தோர் துணைவோனுஞ் சுரரூர்ப்பிடியுங் குறக்கொடியு
மித்தரையின்கா ழியிற்கூட விடத்திலிருதம் பதிமாரு
மிணையிலருணைக் கிளிதானு மெய்தப்பெறலால் யான்விழைந்தேன்
முத்தர்வருசீர்ப் பழனிமலை முதல்வாமுத்தந் தருகவே
மூவாவமரர் நகர்க்காவன் முருகாமுத்தந் தருகவே. (க)

அந்நாளெனது கனவில்வலி தளித்தமுத்தம் பலவுளவீண்
டவற்றின்மகிமை சிறிதேனு மவிர்கின்றிலதா லயர்கின்றே
னிந்நாணனவிற் றருதல்பெரி திலங்கிற்றென்னினு நலமாநின்
னிதயத்தருட்பண் பெனனுளதோ வெனைநீமகவென் றதும்படிறோ
பொய்ந்நானுரையே னெனுநிசமிப் புவியோருணரப் போகாதோ
புகழ்சால்வீர வாகுமுதற் புத்தேளிரினு நரர்மேலோ
மூந்நானெறியு மகிழ்வயலூர் முதல்வாமுத்தந் தருகவே
மூவாவமரர் நகர்க்காவன் முருகாமுத்தந் தருகவே. (உ)

கோங்கையனைய முலைமடவார் குளிர்சேல்விழிப்பார் வையினருமை
குறியாவிளமைப் பருவத்தாட் கொண்டுதமிழ்ச்சீர் கொடுத்ததுவுந்
தீங்கையடுபே ராசையினற் றிருமாமலைமேற் சென்றருள்காற்
செத்துத்தொலையா தளித்ததுவுஞ் செப்பாதனமிக் குரைத்ததுவும்
வேங்கையணுகன் முதற்சொலவ மிருத்தாயிரமுன் விலக்கியதும்
வீணேமறையத் தருங்கொல்லோ வியன்கூடலிலோர் வணிகன்மனை
மூங்கைமகவு மாம்பழனி முதல்வாமுத்தந் தருகவே
மூவாவமரர் நகர்க்காவன் முருகாமுத்தந் தருகவே. (ங)

கருமம்பரமென் பவருணராக் கருணைக்கடற்பே ரமுதாய
கந்தாவுமையாண் மனத்தொடுகண் களிக்கவருசீர்க் கான்முளையே
பெருமந்தரநேர் முலையாரற் பெயர்மங்கையரோ ரறுவர்களும்
பெருகாதரத்தால் வளர்க்கவளர் பிள்ளாய்வள்ளற் பெருந்தகையாய்
குருவென்றவிர்வா ரனைவருக்குங் கொடுக்குங்கலையா யிரம்பொருந்துங்
குழகாநீசவற் கொடிக்குமரா குலவுமறையா கமங்குறிக்குந்

தருமம்பொலிதென் பழனிநகர்த் தலைவாமுத்தந் தருகவே
தமிழ்மாமுனியா தியருணர்மெய்த் தயையாய்முத்தந் தருகவே.(ச)

குலிசாயுதத்தோ னகர்ப்பிடியுங் குறிச்சிக்குறவ ரிளங்குயிலுங்
கொஞ்சியணையும்பொதுக்கணவாகோலாகலப்போகனுங்கொலைவெம்
புலிவாகனனு தியபலரும் புரிபூசனையேற் றருள்செய்தாய்
பொல்லாவசுரர் குலகாலா புலைவேரறுப்பார்க் கெளியானே
பலியேற்பவர்போ லுருச்சமைந்து பலமங்கையர்கற் பழித்தார்தம்
பாலாவேலா வலயநெடும் பாம்பிற்றுயின்மா யவன்மருகா
சலியாக்கொடையோர் வளர்பழனித் தலைவாமுத்தந் தருகவே
தமிழ்மாமுனியா தியருணர்மெய்த் தயையாய்முத்தந் தருகவே.(ரு)

வேறு.

இருக்கின்முடிவைச்சிவனு மலையமலையாதிபனு மெளிதுணர்ந்திடவிசைத்தா
யிபமுகனுடைமர்செய்து மாயவனெருக்கா லிழந்தசக்கரமளித்தாய்
மருக்கிளர்சரோருகப் பிர்மனதகங்கார மாய்வுறச்சிறையிலிட்டாய்
மலையினஞ்சலியா தடக்கும்வச்சிரபாணி வன்றுயரறக்களைந்தாய்
செருக்கியல்பெரும்புலமை யுற்றநற்கீரன்முன் செய்தகவிமாலைகொண்டாய்
சிறியனேன்மனமறியுமாடல்பலகனவினிற்செய்துநனவினின்மறைந்தாய்
முருக்கிதழ்கடுக்குஞ்செ வாய்கொண்டிவேளையொரு முத்தங்கொடுத்தருள்வையே
முகில்பொதிந்திடுபழனி மலையினின்றருள்குமரமுத்தங்கொடுத்தருள்வையே.

பொழில்வளம்பெறுநெல்லைநகரினுமடுத்தொழுகு பொருனைமாநதிநடுவினும்
புணரியொலிகுன்றுதசெந்திலம்பதியினும்புதுவையொடுசென்னையினிலுங்
கழிநலம்பொலிகேர ளத்திலும்வியன்குலவு கனல்வரைச்சாரலதினுங்
கழறுமிவையனையப விடங்களினுநீவந்து கனவினிற்சொன்னசொற்கள்
யழிபடினுமேருகவி வடிவாரமெய்திநின் படிவங்குறித்திருந்த
பலவேளையிற்றமிய னெஞ்சகமுழும்பரும் பரமயோகியருமறிய
மொழிபவாயினுமெய்ப்படும்படிநின்வாய்கொண்டொர்முத்தங்கொடுத்தருள்வையே
முகில்பொதிந்திடுபழனிமலையினின்றருள்குமர முத்தங்கொடுத்தருள்வையே.

வேறு.

தனதனதானன - தனதனதானன - தத்தனதத்தனனு.

அருகணையேவழி படுமெவராணவ மற்றொழியச்செயும்வீ
றடைபவர்யாவரு நலமுறுமாறுசெ யற்புதசற்குருவே
யொருகவியாசைகொ டழல்படுபாலையி லுற்றுமதற்குயர்பா
வுரைசெயுநாவல மயிலுடனுடுமு கைப்பதனுக்கிசைவாய்
மிருகசுபாவமெய் தியகொடியோர்கள்வெ றுக்கும்வனப்புடையாய்
விலைமகளார்மனை தொறுமலைவாரையு மெய்க்கிளியிற்புனைவாய்
முருகவிழ்தாதகி யணிசடையார்சுத முத்தமளித்தருளே
முதிரருள்சேர்குக பழனியில்யானுய முத்தமளித்தருளே. (அ)

*தானன தானன தானன தானன - தத்தன தத்தனனு.*

பாவமனேகமெ நாளும்விடாதுசெய் பற்பலரைப்புகழ்வார்
பால்புரைநீறணி வாருனுமாறுமொர் பற்றுமிடத்துணியார்
சேவனிலாவிய கேதனமாணுவல் சிட்டர்களைப்பணியார்
சீதைமணுளன ஞாரசாள்வகை சித்தமதிற்கருதார்
பூவலமாருத னேர்தவநாடுநர் புத்தியைமிக்கிகழ்வார்
போல்பவரோடுச தாவகலாதுபு ணர்ப்புறுமக்கினிபோன்
மூவகையேடணை தீர்தரநீயொரு முத்தமளித்தருளே
மூதறிவார்பழ னுபுரிவாழ்குக முத்தமளித்தருளே. (கூ)

*தத்தன தத்தன தத்தன தத்தன - தத்தன தத்தனனு.*

கற்றுணர்வித்தக ருற்றதமிழ்ச்சபை கற்பினுயர்ச்சியதார்
கட்டழகுக்கொடி யொப்பவருப்பொடு கட்டுணர்மிக்கலர்கா
மற்றுவமைப்பொரு ளற்றதவத்தின்ம னத்தைநிறுத்தவலார்
மற்சரமற்றுவ சிக்குமடத்தொகை மட்டில்கொடைத்தொழிலோ
ருற்றுயர்மச்சும ஊைத்திரள்சத்திர முக்கிரமற்பயில்வா
ருட்டினமற்றம ணிக்கழகத்தணி யொத்தனபற்பலசீர்
முற்றுதிருப்பழ னிப்பதியிற்குக முத்தமளித்தருளே
முப்புரமட்டந கைப்பரர்கட்சுத முத்தமளித்தருளே. (கo)

முத்தப்பருவமுற்றிற்று.

---

## வாரானைப்பருவம்.

அயில்வேற்படையுந் திருத்தண்டு மகலத்தொடுதிண் கையிற்றாங்கி
யங்கைமலரோன் றிடபாகத் தவிருங்கடிமீ தமைதரவைத்
தெயில்வேவுறநக் கவர்மகவென் றியாருமறியும் படிமுழுநீற்
றியக்கங்காட்டிக் கண்டிகையு மேற்றவயின்றோ றினிதணிந்து
கயிலைக்கிரியி னிரசிதம்போல் கவின்கோவணங்கீ ளொடுதரித்துக்
கழற்றாட்கருட்பா துகைசாத்திக் கனிவாய்முறுவ லொடுநின்றாய்
மயில்வாகனத்தி லொருக்கான்முன் வருகவருகவருகவே
வளர்தோய்பழனி மலைக்குரவா வருகவருக வருகவே. (க)

சந்தாசலத்துப் பனவரெனத் தவவேடத்துப் பெரியரெனத்
தமிழ்தேர்புலமைப்பழையரெனத்தனிவேல்புனைதோள்வயவரெனக்
கொந்தார்மருமத் தரசரெனக் கொடுஞ்செட்டொழியா வணிகரெனக்
குவளைத்தொடைநீர்க்குலத்தரெனக்குறிச்சியிடைவாழ்குறவரெனப்
பந்தாடியகைச் சிறுவரெனப் பலநாட்கனவில் வந்ததன்றிப்
பசும்பொற்கலப மயின்மீதும் பரணிற்கலந்தா ளொடுஞ்சிலகால்
வந்தாய்நனவி னிலுமொருக்கால் வருகவருக வருகவே
வளர்தோய்பழனி மலைக்குரவா வருகவருக வருகவே. (உ)

அந்தண்பொதியைக் குறுமுனியை யமரருலகி னாதனை
யறுங்கைபெறும்பொன் னனையாளை யலகைத்துயர்தீர்ந்தவிர்ந்தானை
வெந்தசுரத்தை வியந்தானை விண்ணூர்வரைபோய் மீண்டானை
மிளிர்பொற்பணிபெற் றளித்தானை வேலாவலயங் கடந்தானைப்
பந்தமறுநா லுரைத்திறமைப் பாவலனைமற் றிவர்போலும்
பலரைக்கருதித் தினந்தோறும் பரவச்சலியாப் பத்திசெயு
மைந்தரெனையுஞ் சொலும்படிமுன் வருகவருக வருகவே
வளந்தோய்பழனி மலைக்குரவா வருகவருக வருகவே. (௩)

களையாமெனப்பங் கயம்பொலிதண் கழனித்தொகையி லலையெறியுங்
கவினார்தருபற் பலதடத்திற் கணக்கின்மனைமுன் றிலின்சாலி
விளையாருருகச் செயும்பார்வை யெழின்மங்கையர்யாழ் புரைகரத்தி
லிடிப்பின்குடத்திற்பலபணிக ளிடும்பொற்கழுத்தி னெடும்பொழிலி
லளைபால்கவர்ந்துண் டவன்றனே யனையார்பலர்தம் மணிவாயி
லரம்பைகமுகா தியின்குருத்தி லலங்கமதிள்கோ புரமதுகில்
வளையோலிடுந்தென் பழனிநகர் வாழ்வாமுருகா வருகவே
மழமால்விடைப்பண் ணவனுதற்கண் மணியாமதலாய் வருகவே.(௪)

எடுக்கவருக மலர்க்கரத்தி லேந்தவருக தளிர்மடிமீ
திருத்தவருக வுச்சிமுகந் திணையிலுவகை யுறவருக
வடுக்கண்களிக்கும் படிவருக வனசமுகைமென் முலைத்தீம்பால்
வழியவருக பலபணியு மலரும்புனைய வருகவென
நடுக்கந்தவிர்த் தாண்டருள்கருணை நனுகுமுமையாள்சொலுந்தொறும்போய்
நந்தாமகிழ்ச்சி யுறுங்குமரா ஞானப்புலவா நவிறுதிச்சொன்
மடுக்குஞ்செவியாய் பழனிநகர் வாழ்வாமுருகா வருகவே
மழமால்விடைப்பண் ணவனுதற்கண் மணியாமதலாய் வருகவே(௫)

## வேறு.

காவுபடுநெஞ்சருறு பலமதவிகாதமுங் கதிரெதிர்ப்பனியதாகக்
காலியொடுகன் றினம் வதைத்துண்டுவக்குமவர் கனலில்விழுபூளையாகப்
பிரமன்மிசைபழிசொல்லி யங்கிமுனசக்கொலைசெய் பேயருந்துயராகப்
பெத்தமதையேமுத்த மென்றுமகிழ்வுற்றுலவு பித்தருஞ்சுத்தராகத்
தரமதரமறியார் தமைப்பரவுபாவலவர் தாமுமதிநேமராகச்
சந்ததங்கருதியுனை வந்தனைசெய்கின்றேன் றவித்துச்சலித்திடாதோர்
வாழ்தவுதற்குறித் திக்கணமயிற்பரியில் வருகநனிவருகவருகே
வயலூர்மலைத்தலையில் வாழும்வடிவேலவா வருகநனிவருகவருகே. (௬)

சங்கையறுமெஞ்ஞான சாரமறிவார்களுஞ் சகலதேவருநெருங்கத்
தபனனிகலவனுயிர்கொள்பவன்முதலினோர்தொழத்தக்கபல்லியமுழங்கத்

கங்கைபுதர்வன்கரிய மாயன்மருகன்குகன் கார்த்திகேயன்கடம்பன்
கருணாகரக்குமர னென்றுதமிழ்வாணர்பல கவிகளாற்றுதிசெய்திடக்
கொங்கைகள்குலுங்கவர மாதர்நடனஞ்செயக் குக்குகூவென்றுசேவற்
கொடியோலிடக்ககன வனிதையுங்குறவர்தரு கோதையுமெனக்குலாவு
மங்கையர்களிருவருட னிக்கணமயிற்பரியில் வருகநனிவருகவருகே
வயலூர்மலைத்தலையில் வாழும்வடிவேலவா வருகநனிவருகவருகே. (எ)

## வேறு.

தனதன தனதன தனதன தனதன தனனதனன தனதன.

அறிவினையறிபவ ரநுபவமுழுமையு மதுவாமிளிர வருள்செய்வா
யருணையிலொருமுதுசிகரியின்வடபுறமமர்வானுவல்பல்கவிகொள்வாய்
மறியொடுமழுவணி தருகரர்விழியுமிழ் மணியாமெனமுன் வருகுகா
மகிதலமளவிய நெடியவனமரர்முன் வழுவாதுரைசெய் புகழுளாய்
வெறிகமழ்குரவமென் மலரலர்புயமிசை விதிர்வேல்புனையும் வயவனே
விடவரவினமழ வகவியமயின்மிசை விரைவாயுலகை வளைகுவாய்
பறிதலையமணர்கள் குடிகெடவெகுள்சிறு பனவாவருகவருகவே
பழனிமலையிலநு தினம்வளர்சரவண பவனேவருக வருகவே. (அ)

தனன தனன தனன தனன தனன தனன தனதன.

கசமுமரிய மளவில்கிளைகொள் கடலின்மரமு மட்டவலாய்
கமலம்விரவு குவளையனைய கருணைவிழிகள் பலகொள்வாய்
நிசமிலமணர் கழுவின்மடிய நிகரில்கவிகள் பகர்பவா
நிதமுமுயிர்கொல் வினைசெய்புலைஞர் நிரையமுழுக முடுகுவாய்
வசவனெனமெ யடியர்பணிசெய் மகர்தமனதை யகல்கிலாய்
மதுரவசன சரசுவதியுண் மகிழ்வொடுணர்பல் வகைசொல்வா
யசலமுழுது மயிலின்முதுகி லலையும்வயவ வருகவே
யரியபழனி மலையின்மருவு மதுலமுருக வருகவே. (௯)

தனனதன தனனதன தனனதன தனனதன.
தனனதன தனனதன தனதன.

குமரகுரு பரமுருக சரவணசண் முகவரத
குறைவிலநு பவசரத வருகவே
குலகிரிக ளுடனுலக முழுமையுமெ யடியருணர்
குடைநிழலி னிடைகொள்குக வருகவே
சமரபிர பலவயவ ரனைவர்களு நினையுமொரு
சகளசரு வுணுமதலை வருகவே
சரபமுட னிகலியடு மொருபறவை யினதுசிறை
தகரவடர் தடிகொள்கர வருகவே
பமரமுரல் குரவமலர் விழையுமட மகளிர்பல
பலர்கலவி நுகரினைஞன் வருகவே

பகடனைய வடிவுகொடு வருதமைய னுதவிகொடோர்
பரணருங்கன் மகிழ்கடவுள் வருகவே
யமரர்படு சிறைதவிர வசுரர்களை யடுதவினைய்
தரிவைமண மகன்வருக வருகவே
யருள்வளமை பொலிபழனி மலையினில வியவொருவ
னநுதினமெ னெதிர்வருக வருகவே. (கo)

வாரானைப்பருவமுற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

### சாமம்.

கயிலைப்பெருங்கடவுள் விழியிற்பிறந்தலைக் கயநீர்முழுக்காடினாய்
கற்பகநிழற்புலவ ரவுணரான்மடியாது கனவுதவிசெய்தளித்தாய்
வெயிலைத்தரும்பரிதி யுடனுட்புகுந்துற்று மீண்டுங்குளிர்ச்சிகுன்றாய்
மேடத்திவர்ந்திணையி விடபத்துமேறியேமிதுனத்திலாசைகொண்டாய்
சயிலத்தலைத்தொடர்ந்தமொருநாளுமொழிகிலாய் தாரகைக்கூட்டம்விழைவாய்
தாமோதரன்றனக சம்பந்தமெய்தலாற் றனவர்க்கூறுசெய்தா
யயிலைப்பொருந்துமுரு கையனுனையனையனு லம்புலீயாடவாவே
யன்பர்மலிதென்பழனி யின்கண்வளர்கந்தனுட னம்புலீயாடவாவே. (க)

மாநிலத்துற்றபல மக்கட்கும்விளையாடும் வாஞ்சைவருவித்தலாலும்
வானுலகுடைக்காம தேனுவின்பாலனைய வாலொளிபரப்பலாலுங்
கானிடத்திற்குடிகொள் வார்களுங்கண்டுளங் களிகூரவருவதாலுங்
கயிரவம்விழைந்திடுத லாலுஞ்சின்மாதரைக் கவலாதுமகிழவைத்து
வேனின்மதனுற்சிலம டந்தையர்துயர்ப்பட விடுத்திடுதலாலுமொருமால்
வேழத்திலேறிமிளிர் வதனுமீசன்றன் வேணிமணம்வீசலாலு
மானியிலனுனகும ரேசனைநிகர்த்தியா லம்புலீயாடவாவே
யன்பர்மலிதென்பழனி யின்கண்வளர்கந்தனுட னம்புலீயாடவாவே. (உ)

கொங்கைமயிலேயனைய மங்கையரனேகர்மயல் கொண்டுவலிதணையுமழகுங்
கூறுமொருபதினாறு கோலத்தனெனமறைக் குலமிசைக்குஞ்சிறப்பும்
பங்கயமலர்த்திரளெ லாமொல்குபேரெழில் படைத்தவானனமுமுள்ள
பன்னிருநெறிக்கொண்டு மேருதிறமும்பிறர் பழிக்கரியமானமும்பாழ்ங்
கங்கைநரிநாயையனை யார்புரிபுலைப்பூசை கருதாமையுங்கழைக்கைக்
காமனைக்கீழ்ப்படுத் துங்கனமுமெய்தலாற் ககனம்விழைதருமெம்பிரா
னங்கைமலரானுனை யழைப்பதறிவாயென்னி லம்புலீயாடவாவே
யன்பர்மலிதென்பழனி யின்கண்வளர்கந்தனுட னம்புலீயாடவாவே. (௩)

### பேதம்.

வையகத்துள்ளவர்க ளுங்கரணநாடோறும் வருமெளியைநீயிவன்றான்
மலங்களமுறிவுபடு சிவயோக சாதனர்த மனவெளியிலுலவவல்லான்

சையமொரிரண்டன்றி வேறுபயிலாயிவன் சகலமலையினும்வாழ்பிரான்
றகைகுன்றிநீடிவெகு வாறுதிநீயிவன் றணவருமொரே தன்மையான்
பையரவினச்சம் படைத்துளாய்நீயிவன் பரியுமதையுண்டுவக்கும்
பட்சியொன்றெவ்வொர்காலுனையணையுமிவனைமுப்பறவைதொட்டுற்றகண்டா
யையகோவிவனுன்னை விழைவதுன்றவமாகு மம்புலீயாடவாவே
யன்பர்மலிதென்பழனி யின்கண்வளர்கந்தனுட னம்புலீயாடவாவே. (ச)

இந்திரன்றனதேவ லாளனீயிவனவற் கினியவரசுரிமையீந்தோ
னிகலவுணரைக்காணி லஞ்சுவாய்நீயிவ னெடுத்தவேல்கூறுசெய்யு
மந்திரசடாக்கர செபஞ்செய்குவார்திரு மனத்தினிடையன்றிறுமையான்
வானில்வருமேகங்க ளோடுறுதழைவுற்றெளி மழுங்கிமிளிர்தரகாணிடாய்
தந்திரகலைப்புலவ ருக்கிவனடங்கிடான் றக்கன்மகவருகினெந்தாய்
சலனமிவனுக்கில்லை யுன்றனக்கோடலே தருமமாகியதுகண்டா
யந்திபகன்மாறிடவும் வல்லசிறுபெருமாளொ டம்புலீயாடவாவே
யன்பர்மலிதென்பழனி யின்கண்வளர்கந்தனுட னம்புலீயாடவாவே. (ரு)

வேறு.

தானம்.

இழைத்தமணிப்பொற்பணிக்கரத்தாலிவனுன்றனையீண்டழைப்பதனுக்
கென்னதவமுற் செய்துளையோ வெய்தா திருக்கை முறைதானோ
குழைத்தவமுதேதிகர்மொழியார்கூறும்வசைத்தீக்கொளுஞ்செவிக்கென்
கோலாகலச்செந்தமிழ்ச்சந்தக்கொழும்பாட்டோவிகைத்துளதேயோ
தழைத்தகலைதேய்ந் திடும்பாவந் தவிரப்பெறலா மாவுன்பேர்
சாற்றிடினுமச் சுறுபேறுந் தலைமேற்கொளலாந் தாமதியா
தழைத்தவுடனே வானலங்கா ருடைவாரா யம்புலியே
யழகார்பழனிக் குமரனுட னுடைவாரா யம்புலியே. (சு)

வடியாப்பிறவிப் பெருங்கடலும் வடியப்பெறலாம் பலகோடி
மறைக்குமுதலாம்பிரணவத்தின்வண்மைப்பொருளுந் தெரிதரலாங்
கொடியார்பலர்க்கோர் நமனுகுங் கொற்றந்தானுங் கொளலாகுங்
குன்றுதொறும்போய்த் தமிழ்ப்பாடல் கொழிக்கும்புகழுங்கைகூடும்
விடியாமாயையிருள்விடியும் விளங்குமொளிச்சீர் மறையாது
வீணேதருக்கி மெலிவடையேல் வெளிமன்றகத்தின் மிகநடிக்கு
மடியார்க்கெளியான் றருமகவோ டாடவாரா யம்புலியே
யழகார்பழனிக் குமரனுட னுடைவாராயம்புலியே. (எ)

வேறு.

தண்டம்.

தன தன தனனு தன தன தனனு தானுதந் தனனு.

அளவறுமுனிவோர் வெருளுறவருபே ராநேர்கின்றிலனோ
வமரர்கள்பலரோர் நொடியிடைபிணமே யாநீர்கண்டிலையோ

குளவனல்விழியா லரனருளியசீர் கூர்கோரங்தெரிவாய்
குருதிபெய்தொருமா மரமறவடும்வேல் கோல்வீரங்குறியா
யிளமையனெனவே யெணியவமதியே லேனுவக்திலேபோ
யிடல்பலகுரவோர் வழிபடுபதிகாண் யான்வீண்விண்டிலனே
வளமலிகிரிதோ றுலவியகுகனோர் வாவாவம்புலியே
மயிலிவர்வயலூ ரிறைமகிழ்வுறவே வாவாவம்புலியே. (அ)

தானனதானனதானனதானனதானதந்தனனு.

ஆணவமார்முது சூரெனமாய்வுற லாகாயந்தனில்வாழ்
வாமிருபானெழு தாரகைமாதர் மூவாறின்றுணர்வாய்
காணமதேபொரு ளாமெனநாடுநர் காதோநின்செவிமா
காதலொடியானுவல் பாடலினேசைபு காவாறென்புகலாய்
வேணவிகாதமி தால்விளைவாகுமெய் வீணேவம்புசெயேல்
வேழமிதோரிலி வேளையுணமல்வி டாதேவென்றிகுலாம்
வாணவவீரர்ச காயவிசாகன்முன் வாவாவம்புலியே
வாழ்வயலூர்முரு கேசனெடாடிட வாவாவம்புலியே. (கூ)

தனனதந்தனதனனதந்தனதனனதந்தனனு.

அரனருந்தவ மூதிரிலம்பக வழலில்வந்தவிர்வா
னசலமெங்கணு மயில்விடுங்குக னகளநெஞ்சினர்கோ
வரமனந்தமு முதவுபுங்கவன் மகிமைகண்டறியா
மலினர்தங்களை யடுதலுஞ்செயும் வயவனெண்டிசையோர்
புரநிறைந்துள திருவினும்பழி புகலும்வன்புடையார்
புகழ்பெருந்தகை முருகன்வண்டமிழ் புரைகடம்பணிசேய்
மரகதம்புரை யுமைமகன்றன்முன் வருகவம்புலியே
வளமலிந்துயர் பழனிநண்பன்முன் வருகவம்புலியே. (க0

அம்புலிப்பருவமுற்றிற்று.

---

## சிற்றிற்பருவம்.

ஆரார்சடிலப் பெருங்கடவு ளனற்கட்பொறிக ளெனத்தோன்றி
யங்காரகனும் பவனனுங்கொண் டறனூடுய்ப்பத் திருவுருவாய்த்
தாராகணமங் கையரறுவர் தடமாமுலைப்பா னனியருந்தித்
தருமம்வளர்ப்பா டருமமுதுஞ் சாலப்பருகி விளையாடிக்
கூரார்கதிர்வே லாதியன கொண்டுதகுவர் குடிகெடுத்துக்
குன்றுதொறும்போய்த்தினமுலவிக்கோலாகலக்கோமளத்தமிழ்ச்செஞ்
சீரார்பழனி நகரில்வளர் சேந்தாசிற்றிற் சிதையேலே
சிலம்புபுலம்புந் துணைச்சிறுதாட் செல்வாசிற்றிற் சிதையேலே. (க)

பங்கேருகப்பூந் தடம்பரப்பிற் பலபன்மடவார் விழிக்கடையிற்
பாசமறுமா தவருடையிற் பழமையுணர்பா வலர்மனத்திற்
கொங்கேய்தருமென் றுணர்ப்பொழிலிற்கோழிக்கொடியின்கொழுஞ்சூட்டிற்
குலையாவீர ரிலைவேலிற் கோரமலியுந் தகர்ப்பரியிற்
பொங்கேர்பெறுமோ திமத்தாளிற் பொலிநெற்கதிரிற் புனைகடம்பிற்
போதக்கொடிப்பார்பொதுக்கரத்திற்பொன்னார்மதிள்கோபுரப்பெருக்கிற்
செங்கேழ்பிறங்கும் பழனிநகர்ச் சேந்தாசிற்றிற் சிதையேலே
சிலம்புபுலம்புந் துணைச்சிறுதாட் செல்வாசிற்றிற் சிதையேலே.(உ)

உன்னைப்பொருளா மெனக்கருதா தொருங்கியாங்கூடிக்களிக்குதுமா
வொருவனுன்னில் வலியானீண் டுள்ளானெனும்பொய்யுரைத்தேமா
வன்னைக்குயர்பே ரருள்கொளுநீ யாடவருமா றெண்ணிலமா
வடுத்தவுடனிற் கடங்கார்போன் றதட்டிச்சிலசொல் லறைந்தேமா
மின்னைப்பொருபே தையரிடைநீ வேண்டுமவரை மணந்துகொள
வேண்டாமென்னத்தடுத்தேமாவெறுப்புன்னுளத்தேனுதித்ததுவோ
தென்னைப்பொழில்சூழ் பழனிநகர்ச் சேந்தாசிற்றிற் சிதையேலே
சிலம்புபுலம்புந் துணைச்சிறுதாட் செல்வாசிற்றிற் சிதையேலே.(௩)

பவளம்புரையுந் திருமேனிப் பாங்கும்பலபொற் பணித்திரளும்
பட்டாடையும்பங் கயத்தாளும் பாரிற்புழுதி படலாமோ
சிவனுமுமையு மலர்விழியிற் சேர்ப்பதுனது பதமன்றோ
தெருணன்மறையின் சிரத்தவிருஞ்சீர்த்திக்கிஃதோர்சிறுமைகண்டாய்
கவளக்கரிமா முகற்கிளையாய் கவினார்குறிஞ்சிக் காவலவா
கந்தாமுருகா வெனப்போற்றிக் கரங்கூப்பிடுநீர் கடவேமா
லவலந்தணந்தாண் டருள்செயுநீ யணியார்சிற்றி லழியேலே
யமருமைத்திருவா வினன்குடியா யடியேஞ்சிற்றி லழியேலே. (௪)

சந்தோடத்தான் மணற்கொழித்துச் சமைத்தவருத்த மறியாயோ
தமிழ்மாமுனிவன் புனைந்துயுநின் றூட்டாமரைக்கித் தகைதகுமோ
பைந்தோகையபுட் பரிநீத்துப் பாரின்மிதிக்கை முறைதாமோ
பல்வீழ்ந்தறியாச்சிறுவர்களைப்பகைத்திட்டொறுக்கப்படுங்கொல்லோ
திந்தோமெனநா டகம்புரியுஞ் சிவனுமவன்ற னிடம்பிரியாச்
சிவையுமுனைத்தான் றேடாரோ செயுமுற்றவத்தாற் றிகழ்தருநீ
யந்தோவுடனுற் றூடாம லணியார்சிற்றி லழியேலே
யருமைத்திருவா வினன்குடியா யடியேஞ்சிற்றி லழியேலே. (௫)

## வேறு.

அண்டமிசையுற்றவர்கள் வாழ்வையுமதித்திடா தாறெழுத்தோதியோதி
யஞ்சகத்துடலினுட் புக்குமீண்டவனையை யரியதமிழாற்றுதித்துக்
கண்டதத்துவவாதி கட்குமதனேனைய கணத்தோர்க்குமடுவினின்று
காதினிக்கிடர்செயுங் கயவர்குலவேரறக் கடிந்தேதகருநிரைந்து

தொண்டரதுபாதபங் கயமலருருக்குமென் றுகண்முடியினுக்கணிந்து
சுத்தவுணவல்லா தசுத்தவுணவுண்ணார் தொடர்ச்சியேகொண்டுவந்து
தெண்டனிட்டுனையே விரும்புமடியேஞ்செய்த சிற்றிற்சிதைத்திடேலே
திருவாவினன்குடியின் மருவுமுருகாவெமது சிற்றிற்சிதைத்திடேலே. ()

மாகநகரிற்புலவ ரின்புறச்சூரன்முதல் வல்லவுணரைத்தடிந்தாய்
மரகதகலாபச் சிகிப்பரியின்மிசையேறி மாநிலஞ்சுற்றிவந்தாய்
சோகமலிவெய்துமோ ராயிரந்தவருயச் சூழ்வரைக்குகையிடித்தாய்
தொடுவளைமுதற்சொல்சிலபணிகளுடனங்கையொருதோகைநல்லாட்களித்தாய்
சாகத்துணிந்துசிக ரியிலேறிவிழ்ந்தான் றனைக்கிளியெனப்புனைந்தாய்
சாற்றுமிவையனையபல விளையாடலின்னமுந் தரையினுஞ்செயவல்லநீ
தேகமுதன்மூன்றுங் கொடுக்குமடியேஞ்செய்த சிற்றிற்சிதைத்திடேலே
திருவாவினன்குடியின் மருவுமுருகாவெமது சிற்றிற்சிதைத்திடேலே. ()

வேறு.

தத்தத்தனதன தத்தத்தனதன தத்தத்தனதானா.

அத்தர்க்கொருபொரு ளைச்சொற்றருள்சுத வத்திக்கிளையானே
யற்பிற்பணிபுரி பத்தர்க்கெளியவ வக்கத்திரடோய்வாய்
சத்தக்கடலினி டுத்துத்தகுவர்க டத்துப்படநேர்வாய்
சட்டச்சதுமறை விற்பத்தியனெதிர் தக்கித்துயர்சீலா
புத்தர்க்கமணர்த மக்குப்புலைமலி பொக்கர்க்கெமனுவாய்
புற்றுட்பணிகளு மட்குற்றிடமுரல் பொற்புச்சிகியூர்வாய்
சித்தர்க்குயிர்நிலை யொத்துத்திகழ்குக சிற்றிற்சிதையேலே
செப்பொப்பறுபழ னிச்சற்குருபர சிற்றிற்சிதையேலே. (அ)

தானனதானன தானனதானன தத்தத்தனதானா.

மாதவர்சேகர நான்மறையோர்குழு மச்சக்கொடியோனேர்
வாழ்வுறுகாவலர் பேரவைவாணிப மற்பெற்றுயர்சீரார்
பூதலமேதுணை யாமெனவேருழு பொற்புத்தொழிலோவார்
போல்பவர்யாவரும் வாழ்மறுகூடுபு மைக்கைக்கரிதேர்மா
வேதமிலோதைபு மாதர்களுடியி டத்தக்கனபூணு
லோர்தருபேரொளி மாலையின்வாசமு மெய்ப்பற்றுறுமாணூர்
சீதளநீர்வய லூர்முருகாவெமர் சிற்றிற்சிதையேலே
தேவர்தமூராழி யாதருள்வேலவ சிற்றிற்சிதையேலே. (கூ)

தத்ததன தத்ததன தத்ததனதானா.

முக்கணவிர் பொற்பறுமு கத்தினுமு ளானே
முப்புரமெ ரித்தபரன் முத்தமிடுபாலா
சக்கரமெ டுத்தவரி தத்தறவெல் வானே
சட்டிவிர தத்தினர்தி மக்கெளிய வேலா

மக்களுரு வத்தொடும்வ ரத்தகுசெ வேளே
மத்திநிலை பெற்றதவர் மட்டமறி பாதா
செக்கர்நிற முற்றருக சிற்றிலழி யேலே
தெட்டபழ னிக்குமர சிற்றிலழி யேலே. (௧0)

சிற்றிற்பருவமுற்றிற்று.

---

## சிறுபறைப்பருவம்.

திகழ்சித்திமுத்தியெனு மிருபேறுமாதவச் செல்வமேயாகுமென்றுஞ்
செந்தமிழ்ச்சந்தக் கவிச்சுவைநுகர்ந்திடார் செவிடரேபோல்வரென்று
மகவெனவுயிர்த்திர ளனைத்தையும்விழைந்திடா மன்னர்புலியனையரென்றும்
வட்டிக்கும்வட்டிகள் வருக்கின்றதீவணிகர் மறவேடர்புரைவரென்று
நிகரிலுழவுத்தொழி னடத்தியுமிரப்பவர்த நெஞ்சமெரிதருலோபமே
நித்தமுஞ்செய்யுமவர் நீசரிற்கடையரே நிச்சயமிதென்றுமென்றுஞ்
செகமெங்கணுஞ்சென்று சென்றுசலியாமனின் சிறுபறைமுழக்கியருளே
திருவாவினன்குடியி லொருவாவிரைந்துனது சிறுபறைமுழக்கியருளே.

உயிரொன்றினுக்குமிடர் சிறிதுஞ்செயாமையே யுயர்வாயதருமமென்று
மொருதீவினைத்தொடர்புமின்றிமுயல்கின்றதேயோங்குபொருளாகுமென்று
மயில்போலுமங்கையரு மாடவருமொருமைபடன்மாசற்றவின்பமென்று
மறைமுடிப்பொருளன்றிமற்றொன்றும்வெஃகாமைமன்னுபாமுத்தியென்றுங்
குயில்போலும்வடிவமுட னிசையுங்கொள்கானக் குறத்திக்குமூத்தநங்கை
குவலயமும்படியோர் வெண்பாவினன்கன்று கூறிவைத்துள்ளபடியே
செயிர்யாவுநீக்கவல பன்னிருகரங்களாற் சிறுபறைமுழக்கியருளே
திருவாவினன்குடியி லொருவாவிரைந்துனது சிறுபறைமுழக்கியருளே.()

மார்க்கண்டமுனியனைய மனவலியுளார்களே மாண்பிரமசரியரென்று
மறையினைத்தமிழ்செய் திருவள்ளுவனையனையர்புகழ்மருவுகிரகத்தரென்றும்
பேர்க்கரியசீர்பெறும் வசிட்டனிகர்வானப் பிரத்தரேபெரியரென்றும்
பிறர்தொழில்வசப்படா வல்லமனையனையரே பிரமபதமுத்தரென்று
நீர்க்கடலுடுத்தளவி லாதமலையாதிய நெடுஞ்சுமைபொறுத்துமாய
விறைமகிழ்வுறப்புணர்ந் துள்ளபார்முதலாநிலாவுலகமெங்கணும்போய்ச்
சீர்க்கமலமலரனைய செங்கையின்குணில்கொண்டு சிறுபறைமுழக்கியருளே
திருவாவினன்குடியி லொருவாவிரைந்துனது சிறுபறைமுழக்கியருளே.

தேவதுந்துமியொலியி லமராவதிப்புலவர் சிந்தைமகிழ்வெய்திவாழச்
செங்கட்பெரும்புலியை நிகர்தானவக்கொடியர் தீநெஞ்சுபறையடிப்பப்
பூவகத்துற்றசதுர் முகன்மறைகளுன்குறுவல் பொதுநெறிகளாறுமோங்கப்
புலைகொலைக்கஞ்சாத புன்சமயமெல்லாம் புகைந்துநீறாகியொழியச்

சேவலிடபங்கருட னுதியவரைந்துள திருக்கொடிகள்யாவும்வெல்லத்
தீயனவரைந்தகொடி முழுதழியவறமெலாஞ் சிதருமலெங்கும்வளரப்
பாவமென்பனமுற்று நசிவுறநினைந்துசிறு பறைமிகமுழக்கியருளே.
பழனியங்கிரியின்மிசை வளருநங்குமரசிறு பறைமிகமுழக்கியருளே. (ச)

சருவசித்துஞ்செய்ய வலனுமுனக்குமுன் றனைநம்பெனக்குமென்னைச்
சார்ந்தொழுகுமொருதொண்டனுக்குமெய்தியமூன்றுதாமாயமூன்றுமிணறும்
பொருவில்பெருநீரூற் றுதித்துலகமெங்கணும் புகழ்நலம்பெறவுமினப்
பூசனைகொளும்புலைத் தேவதைகளும்பெரும் புனிதமுற்றிடவும்பொலாக்
கெருவமுற்றியசமய வாதருங்கவிஞருங் கேடுபட்டிடவு நல்லோர்
கேளிரொடுவாழவுங் கவுமாரநெறியோர் கிளர்ச்சியுறவுங்குறித்துப்
பருவதகுலந்தோறு முலவுமுருகையசிறு பறைமிகமுழக்கியருளே
பழனியங்கிரியின்மிசை வளருநங்குமரசிறு பறைமிகமுழக்கியருளே. (ரு)

வேறு.

காவாள்பவர்க்கோ ருயிர்த்துணையாங் கந்தாகதிர்வேற் படையேந்திக்
கலபமயிலூர்ந் துலகையொரு கணத்தில்வளையுங் கதியுடையாய்
சேவார்கொடிப்புங் கவனெடுநாள் செயுமாதவத்தின் பயனுனைய்
சிலம்புக்கிறைமுன் றருகவுரி செங்கைக்கணியாஞ் சிறுகுருந்தே
நாவாணியும்போற் றிடப்பலநூ னவிலும்புகழு முழுப்புலமை
ஞானக்கடலும் புணர்குரவா நறியமலர்த்தார்பல புனைவாய்
மூவாப்பழனிப் பதிமுருகா முழக்கியருளாய் சிறுபறையே
முந்நீர்ப்புவியுண் டவன்மருகா முழக்கியருளாய் சிறுபறையே. (சு)

கழங்கொன்றியகைச் சிறுமடவார்கனிவாய்க்குரவைத் தொனியுமிளங்
காளையனையார் பலர்பயிலுங் கழகத்தொனியுங் கனிமலர்த்தேன்
வழங்கும்பொழிலிற் ககத்தொனியு மாறுற்றிகல்வா ணாத்தொனியும்
வானோர்தொனியும்பசுத்தொனியும்வாவிக்கரையின்வளைத்தொனியும்
பழங்கன்றினுக்குஞ் சொரிதருவெண் பாலார்கவரிப்படைத்தொனியும்
பரியுங்கரியுந் தேருமுதற் பலவற்றுதித்துப் படர்தொனியு
முழங்கும்பழனிப் பதிமுருகா முழக்கியருளாய் சிறுபறையே
முந்நீர்ப்புவியுண் டவன்மருகா முழக்கியருளாய் சிறுபறையே. (எ)

வேறு.

தனத்ததனதன தனத்ததனதன தனத்ததனதனன.

இரட்டுகவரிகண் முதற்சொல்வனகொளுமெழிற்பெண்மிகையுடையா
யிலக்கர்நவர்பல கணத்தர்தலைவர்க ளினர்க்கொரணையனையாய்
திரட்டுமமுதையு மிகழ்ச்சிசெயுமதி திறத்தருணர்குரவா
திருக்குமிருகரு மருப்பொடுலவொரு சிவத்ததகரிவர்வாய்
கரட்டெனெருதொகை விகற்பறுவலிய கனத்தபுலமைவலாய்

கவிச்சொனயமறி கிலர்க்கொரிடியுறழ் கனைப்பரொடுதிரிவாய்
முரட்டுமதகரி முகற்கொரினையவ முழக்குசிறுபறையே
முனைத்தபழனியில் வசிக்குமிறையவ முழக்குசிறுபறையே. (அ)

தத்ததன தத்ததன தத்ததன தனனு.

சத்திரமெடுத்தவர்த மக்குளொரு பெரியாய்
சத்தியொரு பக்கமுறு சற்குரவன் மதலாய்
நத்தியவை முற்றுமரு ணற்கருணை முருகா
நச்சரவி னுச்சியின டிக்குமயி லிவர்வாய்
பத்தியைவெ றுத்திகழ்ப டிற்றறிஞர் பகைவா
பற்பலம லைத்தலைப தக்கமல மணிவாய்
முத்திருவு டைக்குகமு ழக்குசிறு பறையே
முற்பழனி வித்தகமு ழக்குசிறு பறையே. (கூ)

தனனதன தத்ததன தனனதன தத்ததன
தனனதன தத்ததனனு.

தவமலதெ மக்கொர்துணை யிலையென வுனைப்பரவு
தகவினர்த யக்கமறவோர்
தகர்விடுதி றத்தையநு தினநுவல்க விப்புலவர்
தமையெதிர்து டுக்கர்கெடவேல்
குவடுறழ்பு யத்தின்மிசை யணிதருசி றப்பையுணர்
குறியிடைநி லைத்தமுனிவோர்
குகுகுகுவெ னத்தொனிசெய் பறவையைய மைத்தெழுது
கொடிபுவன முற்றும்வெலநீ
யவனவள தற்குளும்வை கியநிசமி கத்தெரியு
மவர்பிறவி யற்றொழியநா
ணலைகடன்மு தற்சொல்பல புனலொடுக னற்குளிடு
மரியதமிழ் கைக்குவரவே
சிவசுதர்க ளிற்சிறுவ னெனின்மகிழ்த கைக்குமர
சிறுபறைமு ழக்கியருளே
செயமலிதி ருப்பழனி மலைமுடியி லுற்றகுக
சிறுபறைமு ழக்கியருளே. (கo)

சிறுபறைப்பருவமுற்றிற்று.

## சிறுதேர்ப்பருவம்.

காரினமழுக்கா றடைந்திடவொராயிரங் கண்ணுனிவர்ந்ததேருங்
கமலாதனப்பிரம னிவர்தேருமாயன் கவின்றேருடன்கடுக்கைத்
தாரிறைவனேறிய பெருந்தேருமோராழி தலமிரவியின்றேருமோர்
சற்றுமெலிவடையாம லதனதன்செலவினிற்சஞ்சரித்திடவும்வெங்கோற்

சூரினதுதேருமவ னினமானதானவர் தொடுத்தேறுகோடிதேருஞ்
சூடேயொர்வடிவாத் துலங்குபேய்த்தேருந்தொலைந்திடநினைந்துசுந்தச்
சீரியவர்வாழ்பழனி மாநகர்த்தெருவிலொரு சிறுதேருருட்டியருளே
சேவலொலிநீடுந் திருக்கைவடிவேலவா சிறுதேருருட்டியருளே. (க)

மருவார்குடிக்கொரு நெருப்பாயகவுமாரர் மனதினிடைவீரம்வளர
வண்டமிழ்ச்சங்கக் கவிப்புலவர்சங்கத்தின் மாறுதவுவகைவளரப்
பொருவாதசத்துவ குணத்தேவராலயப் பொலிவுதொறும்விழவுவளரப்
புலையாடுதற்குரிய பேய்ப்பீடமெங்கணும் புற்றினொடெருக்கும்வளரக்
குருவார்த்தையேமறை யெனக்கொள்ளுமாதவர்குழாத்திலருளாடல்வளரக்
குகரத்தொனிப்பறவை யெழுதியபதாகையிற் குன்றுதவென்றிவளரத்
திருவாவினன்குடியில் வளர்குமரகுருபரா சிறுதேருருட்டியருளே
சேவலொலிநீடுந் திருக்கைவடிவேலவா சிறுதேருருட்டியருளே. (உ)

வருமந்தவிர்ந்தமன மாதவர்வலக்கைதொறு மன்னுசெபமாலையுருள
வாதவூர்முனியனைய புனிதர்விழிகளிலன்பு மலிகணீர்மணியினுருளத்
தெருமந்துநல்லோர் வருந்தமுயல்பாதகர் சிரம்படுகளத்தினுருளத்
தெய்வமங்கையரவுண மகளிர்பணிநீத்தாடல் செயுமெழிற்பந்துமுருளக்
கருமம்பரம்பொரு ளெனுஞ்சிறுவரருளாடல் கண்டுதுயர்மிஞ்சியுருளக்
கன்மலைத்தலையுருண் டெய்ந்தசிலகவுமாரர் கவிபுறங்காட்டினுருளத்
தெருவெங்கும்வால்வளைக ளுருள்பழனியாதிபா சிறுதேருருட்டியருளே
சேவலொலிநீடுந் திருக்கைவடிவேலவா சிறுதேருருட்டியருளே. (ங)

அட்டமாசித்தியொடு முத்தியும்பெறுவதற் காகியதவஞ்செய்யவு
மருமறையுமாகமபு ராணவிதிகாசமு மறைந்தபொருளாராயவும்
பட்டவர்த்தனர்மகுட வர்த்தனர்களாதியவர் பணிகளசெயந்தோயவும்
பருமணிக்குவையுமம் பொற்பணக்குவியலும் படமுதவியவுமெய்தவுங்
குட்டகுன்மங்கண்முத லானபலநோய்களுங் குடியோடுலமேவவுங்
கூறுமற்றையபயன தொவ்வொன்றுநெஞ்சிற் குறித்தபடிபெற்றுய்யவுஞ்
சிட்டர்பற்பலர்நாளும் வருபழனிநாயகா சிறுதேருருட்டியருளே
சிவஞானதேசிகத் தலைமைபெறுபாலகா சிறுதேருருட்டியருளே. (ச)

மாதர்மொய்க்கும்படியொர் பைங்கிளிப்பரியில்வருமதனவேள்வெட்குமழகு
மரகதமணிக்கிரியெ னக்கடனடுத்துயினு மாயவன்புகழ்வீரமும்
போதகத்திற்குடிகொள் பிரமாவும்வாணியும் போற்றிடத்தகுகல்வியும்
புற்றினரவப்பணி புனைந்தவன்பரவுபரி பூரணனந்தநிலையு
மாதவனுமம்புலியு மங்கியுங்கருதுதற் கமைவருபெருஞ்சோதியு
மனையநலமுள்ளன வெல்லாமனைந்தென்றென்று மாறெழுத்தோதுமன்பர்
தீதறுக்குந்தொழில் செயும்பழனிநாயகா சிறுதேருருட்டியருளே
சிவஞானதேசிகத் தலைமைபெறுபாலகா சிறுதேருருட்டியருளே. (ரு)

## வேறு.

நாதக்கழற்றுட் குகவேளே நளினப்பிரமா வழப்புடைத்தாய்
நயனமமுன் றுடையானே நறும்பூங்கடம்பு புனைமார்பா
சீதக்களபக் குரும்பைமுலைத் தெய்வானையுங்கா னகத்தினிளந்
தினைகாப்பவளும் புணர்கணவா செங்கேழ்ப்பவளக் கிரிபோல்வாய்
வேதக்கலைமேற் பொருளானாய் விண்ணோர்குடிக்கோர் காவலவா
வீரர்பலருந் தொழுமொருவா வெற்பாயிரத்து மிளிர்தேவே
யோதக்கடலுண் டவன்குரவா வுருட்டியருளாய் சிறுதேரே
யுலகோர்புகழ்சீர் வயலூரா வுருட்டியருளாய் சிறுதேரே. (சு)

நீச்சுக்கடங்காக் ககனவெளி நிறையவெயிலு நிலவுமுமிழ்
நீர்மைச்சுடர்க ளுருளாக நிகமத்தொகைவாம் பரியாக
வீச்சுக்கசைதா ரகமாக வெற்புச்சிலையும் பணிநாணும்
விழியாக்கணையுங் கொளும்பித்தன் வென்றிவிழையு மிறையாகப்
பேச்சுத்தொழிலோ வருமனையும் பிரசமலர்ப்பீ டமுந்தவத்தோர்
பெருங்கூட்டமுந்தோய் கிழப்பனவன் பிழைதீர்தருசா ரதியாகி
யோச்சும்புவியாம் பெருந்தேர்மீ துருட்டியருளாய் சிறுதேரே
யுலகோர்புகழ்சீர் வயலூரா வுருட்டியருளாய்சிறுதேரே. (எ)

## வேறு.

தனத்ததனதன தனத்ததனதன தனத்ததனதானா.

கலப்பில்பிழைமுய றிருட்டுநினைவினர் கருத்திலுழையாதாய்
கதிக்கொர்விதையென வுரைத்தகிளியமர் கனத்ததிரடோளா
வலப்புமலியவெ னுளத்தில்வெருவித வவிர்ச்சிதருகோலா
வகத்தியனைநிகர் சிலர்க்கொர்பிரணவ வருத்தநுவல்வாயா
நலப்பனிருநெறி யினர்க்குமொருபொது நடக்கைபருவாதா
நரைத்தமழவிடை முகத்தொர்பெரியனு நடுக்கமுறுகோபா
வுலப்பில்பழனியில் வசிக்குமிறையவ வுருட்டுசிறுதேரே
வுடைமப்பெண்முலைநுகர் சிவத்தநிறமக வுருட்டுசிறுதேரே. (அ)

தத்ததன தத்ததன தத்ததனதானா.

மைக்கிரிநடத்தியொர்ம யிற்பரியுமூர்வாய்
மத்தகயமொற்றையுண்ம திக்கவிவர்வானே
சுக்கிரனடிப்பணிசெய் துட்டர்குலகாலா
சுத்தபரதத்துவசு கத்தர்குருநாதா
வெக்கியமதிற்றகரி றைச்சிறுகர்தீயோ
ரிட்டமுமொர்சற்றருளி றைக்கினியசேயே
யுக்கிரனுளூற்றவவு ருட்டுசிறுதேரே
யொப்பில்பழனிக்குகவு ருட்டுசிறுதேரே. (கூ)

தனனாதனத் தனனாதனத் தனனாதனத் தனனா.

அவனாதிமுப் பிரிவாகியெட் டரிதாகுமெய்ப் பொருளே
 யருணாசலத் துறுகோபுரத் தவிர்சாருவிற் கெளியாய்
சிவமாவிழற் கிசையாமுழுத் தவர்மாமனத் தணேவாய்
 தமிழ்மாரிகொட் டிடுமேகமொத் தவர்மாலறத் தொடர்வாய்
கவளாசலத் தொருதோழமைக் கருணாகரக் குமரா
 கடலேழுடுத் தவள்வாழ்வுறக் கருதாருயக் குறியாய்
சிவனார்விழிப் புதல்வாவெழிற் சிறுதேருருட் டுகவே
 திருவாழ்தகைப் பழனாபுரிச் சிறுதேருருட் டுகவே. (கo)

சிறுதேர்ப்பருவமுற்றிற்று.

ஆக - பருவம், கo, க்கு கவி - ஶ.

ஆ கவி - எஶஉ.

வேலுமயிலுந்துணை.

உ

## கலம்பகம்.

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

சீர்பூத்த நெடுங்கயிலைச் சிகரிமிசை தினம்வாழு
நீர்பூத்த சடைப்பெருமா னெற்றியங்கட் பொறியாரு
லுந்ததிரு வுருக்கோல மாங்கனியோன் றின்பொருட்டா
லந்தரர்கண் கண்டேங்க வரைக்கணத்தின் மறைத்தருளிக்
கவுமாரத் தவவேடங் காட்டுபுவே லொடுதண்டும்
பவுராணி கரும்பரவும் படிபரித்துப் பார்முகம்போல்
கொங்குவள நாட்டிலியல் குளிர்பழனி மலைக்கோயிற்
றங்குதகை யொருக்காலுந் தவறாநங் குகவேளே

இவைநான்குந்தாவுகள்.

மூவருக்குங் குறுமுனிக்கு முறைப்படிநல் லருள்செய்து
சீவகொலை மகத்தூன்கொ டேவருக்குஞ் சிறைமீட்டா
யிந்திரன்றன் மகளந்நா ளெய்துபெருங் கலவிநலம்
வெந்திறற்கா னவர்வளர்த்த மெல்லியலும் பெறச்சேர்ந்தாய்
பத்தமலி நாரதனேர் பலர்வாழப் புரந்தப்பாற்
சித்தர்களிற் சிலர்செய்யுந் திருட்டினுக்கு மிசைவுற்றாய்
செங்கிரியா மெனத்தோன்றுஞ் செருச்சேவல் பெறுஞ்சீர்த்தி
பைங்கிளியும் பெறுமாறோர் பணைத்தோளிற் பரிக்கின்றாய்

இவை நான்குங் கொச்சகங்கள்.

சசிமுதலியபல தாவரமகளிரும்
விசிகமென்விழிவழி விடுமறலொருவினை
கலைமகளனையபல் கவிஞர்கள்பெறுபுகழ்
நிலையுறவவரவை நிறைவிடைமருவினை

யமணரையபறுதின மரசடிவிழைதரு
பிமரரையனையவர் பிறரொடுகெறுவினை
கலபமென்மயிலது கடவியெனறுபல
குலவரைதொறுமொரு கொடியினைகிறுவினை

இவை நான்கு மராகங்கள்.

யளவில்கவிப்புல வர்க்கருளிட்டனை
களவனெனச்சொல் கனற்சொலுநட்டனை
தளமலிபொற்சல சற்குகைவிட்டனை
துளவுமலர்க்குர வத்தொடுதொட்டனை

இவைநான்கு நாற்சீரோரடியம்போதரங்கங்கள்.

கங்கையார்வம் விளைத்தனை
யங்கைவீறு கிளைத்தனை
வெங்கைமேரு துளைத்தனை
கொங்கைகோடி திளைத்தனை

இவைநான்கு முச்சீரோரடியம்போதரங்கங்கள்.

தகருகைத்தனை
நிகரொழித்தனை
புகழ்பொறுத்தனை
யிகழ்வறுத்தனை

இவைநான்கு மிருசீரோரடியம்போதரங்கங்கள்.

( அவைபோன்று )

இதுதனிச்சொல்.

நாடொறுந்தமியே னுடைமாறு
நீடொளிக்கலாப நீழலின்கண்
மயின்முதுகிவர்ந்து வடிவேற்படையுஞ்
செயிரறுஞானத் திருமுத்திரையு
மிருகரத்தேந்தி யென்முற்றோன்றிப்
பெருகவாவறமெய்ப் பேறருள்செய்தென்
னுறவினர்தாமு முவப்புறக்காட்டி
மறமலிபகைஞர் வாழ்வறமுருக்கி
வானுலகிடத்து மண்ணுலகிடத்து
மியானுலாஅப்நிற் கினியார்பலரொடுன்
றண்டையந்தாள்புகத் தாங்கிப்
பண்டைநாட்கதைபெனப் பகர்புகழுருளே. (௧)

இஃதாசிரியச்சுரிதகம்.

நேரிசைவெண்பா.

புகழருளி நிந்தைமுற்றும் போயொழிய நீக்கித்
திகழ்பதங்க ளொன்றலையிற் சேர்த்தா - னிகழ்வளமை
கோடாறுகோடி குலவும்பழனிமலைத்
தாடாளண்மைச் சற்குருநா தா. (உ)

கட்டளைக்கலித்துறை.

நாதங்கடந்தநின் பாதாரவிந்தங்க ளுடுமென்னை
வேதங்கடந்தவன் சிட்டிசெய்யாத விதம்புரப்பாய்
சூதங்கடந்தங்கு கொங்கைக்குறத்தி தொழும்பமத
வாதங்கடந்தனர் சூழ்பழனுபுரி வாழ்குகனே. (ஙூ)

கொச்சகக்கலிப்பா.

வாழையதன் மரபேபோல் வருமடியார் பெருங்கூட்டத்
தூழைமதி யாச்சிலரு டொருவனென வெனையாள்வாய்
பேழைவயிற் றனைத்துணைப் பிள்ளாயொண் பிறைச்சடிலத்
தேழைபங்கன் விழிப்பாலா வெழிற்பழனி முருகோனே. (ச)

கலிவிருத்தம்.

முருகனுமலர்ப் பூசையிலழுத்தனு முதிர்சொற்
பருவமுத்தமிழ் பொழிதருகாரெனப் படரு
மொருதவத்தினை யன்றிமற்றொன்றறி கில்லேன்
சருவதேசிகப் பழனிமாமலைச்சர வணனே. (டு)

எழுசீர் விருத்தம்.

சரவணத்தடத் துருவமாயினும்பல சயிலமுமனநாணு
முரனுடைப்பழ னித்திருமலைமுகட் டொளிர்திருவுருவேனுங்
கரவிலீசனு முமையுமால்விடைமிசைகாண்டொறுநடுத்தோற்றும்
வரதநல்லுரு வாயினுங்கருதுநர் மகத்துவத்துயர்ந்தோரே. (சு)

எண்சீர்விருத்தம்.

தவம்.

உயர்ந்தமா தவமியாதென் றலைய வேண்டா
முலகத்தீ ருணர்ந்தவுண்மை யுரைக்கக் கேண்மோ
நயந்துயிர்கட் கிடர்செய்யா விரதி யாகி
ஞானமொடு கல்விநல நணுகப் பெற்று
வயந்தழைக்குந் திருக்கைவேற் சேந்தன் வாழு
மலைப்பழனி யடிவாரம் வந்து தங்கிப்
பயந்தவிர்க்குந் தியானசெபம் பூசை செய்து
பைந்தமிழாற்பலபாடல் பகர்வ தொன்றே. (எ)

நேரிசைவெண்பா.

பக்லவனைப் பல்லுகுத்தார் பண்டைத் தவத்தாந்
திகழ்தருசே யாவனெனத் தேரி - னிகரில்பல
மன்றத் தவிர்புலமை வாய்ந்து வயலூர்ப்பொற்
குன்றத்தில் வாழுங் குரு. (அ)

குருவென்றெங்கெங்கவிர் கின்றுரெவருங் குளிர்பழனி
மருவுங்குருபரன் றன்னருட்சீர்த்துளி வாய்ந்தவுண்மை
தெருளும்புலமைக் கவுமாரரெண்வகைச் சித்திகளும்
பொருவின்றியமுதன் முத்தியுநாடிய போதத்தரே. (கூ)

வெண்டளைக்கலிப்பா.

போதன்கதறப் புடைத்தாண்ட புண்ணியவேள்
கீதம் பயில்வார் கிளர்தென் பழனிமலை
நாத னவனே நமக்கோர் துணையெனுஞ்சொ
லோதன்பர் பாதத் துகுதூளென் சென்னியவே (ய)

குறுந்தாழிசை.

சென்னியாறுடைச் சிவகுருப்பிரான் செங்கைவேல்வலிக் கீரவேள்குறக்
கன்னிதாடொழத் துணியுமோகனக் கர்வனெம்பெருங் கடவுளெக்கறிந்
தென்னினைப்பெலா முற்றநாடியே யெழில்குலாவுதென் பழனிவெற்பினிற்
றுன்னிபிரந்துதிப் பரிசதெய்திடிற் படியும்வானமும் பரிவுதீருமே. (கக)

புயவகுப்பு.

தானனந்தனனதன தனனதனதானன.

தீரமொன் றியபலபல் வீரரும் புகழவளர்
சேயருங் குமமலைக ளெனமிகநிலாவுமே
சீதளம் பொலிமதியி னுர்வமிஞ்சிடமருவு
தீதிறங் கொளுமகளி ரறுவர்முலைநாறுமே
சேவினம் புரைவிழிக ளாலரன் றனைவிலைகொள்
சீலவந் தரிகளப முலைமணமும்வீசுமே
தீதொழிந் துயர்துருவ னேமியின் றிரிவொழிவில்
சேணலம் பெரிதுபிறழ் தாவும்விளையாடுமே
சேதமின் றியமலைகள் போய்வருஞ் சலனமறு
சீர்பெறும் படிசெயரி யமையுறுவமோவுமே
சேலையும் பணியுமணி தோகையென் றிலகுசசி
தேவிமங் கலியமது நிலைபெறுதல் காணுமே
தீர்வருந் துயருதவி வீழ்சயந் தனையெளிது
தேறிடும் படிசெய்திட வொருகனவினேருமே

தேளினுங் கொடியகுண மேவுதிண் டிறலவுணர்
தேவர்தங் கழலிலிடு தளைகளறமோதுமே (௯)

தேனிலின் சுவைசெயிசை நாரதன் றொழுபொழுது
சேணமங் கவடியில தொருதகர்கடாவுமே
தேசிகன் பிரணவவி னோதனென் றுணருமதி
தீவிரங் கொளுமுனிவர் தலைகடோறுமேறுமே
தேசினம் பொருவுதொகை யாயகுண்டலமுநிகர்
தேய்விலங் கதமுநிரை படவணையநீடுமே
தேசுமென் பனமுழுது மீயுமந் தணன்வெருவு
தீமைகொண்டொருகுகையி லலறநனிசாடுமே
சீறும்வன் குணமருவு தாரகன் சமரினிடை
சீதரன் செலவிடுமொர் படையைவலிதீயுமே
சேடனும் புனலுமதி யார்கரந் தையுமுதல
சேர்நெடுஞ் சடையடவி தனிலளவளாவுமே
சேவைகண் டலதுமகி ழாதழுந் துறுதிகொடு
தேடுமன் புறுமடியர் பகைமுழுதுமீருமே
தேரெனும் படிசிறிய காலிவர்ந் தவனளவில்
சேனையும் பெரிதுமுன முருகுமெழில்வாயுமே, (௰)

மாரன்வந் திரவுபக லாமணங் கமழுமலர்
வாளிசிந் தவினனுவு மெலிவிலதுமீறுமே
மாறுமொண் பரசுமணி தோள்பெறும் பதினொருவர்
வாகைவெம் படைகளென மருவுதகைசாலுமே
மாய்வில்சங் கரனதொரு பாதிகொண் டவளுமதி
மானுறுங் கதிரயில தெனநெடிதுசாருமே
வானிலம் புவியிலுயி ரியாவையுந் துயிலொருவு
வாரணங் குகரவொலி கொடுபெரிதுகூவுமே
மாசறுங் கனல்வரைகொள் சாரலின் சிகரிமிசை
வாழ்பசுங் கிளியினிய தமிழுடனுலாவுமே
வாசமிஞ் சியகுரவு நீபமுங் குவளையும
தாணியும் பணிபிறவு மிடை யிடைவிராவுமே
மாதர்கண் களுமுனிவர் வீரர்நெஞ் சமுமிலகு
மாழைமென் சிறையமது கரமுநனிசேருமே
மாதிரங் களினிறைவ ராதியண் டர்களறிய
மாயன்வெங் களநடுவி னுவல்புகழ்சுலாவுமே (௰௧)

மாரதங் கடவன்முத லானதொண் டினிதுசெயும்
வாயுவின் பலமொராறு வெனும்வலிமையேயுமே

மாரிதந் தளவில்பல வர்யசெந் தினமுழுயு
மாறும்ண் டிடவகல்வின் முழுமையினுமாயுமே
வானிறம் பெறுகடலி னூடெழுந் தமுதொடவிர்
வானமங் கையர்வதுவை மலியுமறுகூலமே
வாயிகம் பலருமறி காயிகஞ் சரதமலி
மானதஞ் செயுமவர்கள் பலரையினிதாளுமே
வாடைவந் துலவின்மலர் தாழையின் புதுமலரொன்
வாண்முணிந் திடினுமகிழ் வுறுகுணவிசாலமே
மாமனென் றவனவுணர் சேனையின் சமர்முடுகி
மாழ்குறுந் தொறுமவரை யெளிதடுசகாயமே
வாய்மையொன் றறிகிலவ ராகியங் கியினெதிரின்
மாமிசந் தினுமவர்க ளுணர்வரியகோலமே
வாதுளம் பொருவுசில வாகமங் களினுவலும்
வாழ்வெனுஞ் சரதகதி விழைபவருண்மூழ்குமே; (௯)

சாரமின் றியகவிகள் கூறிடும் புலவர்களவி
சாரமுங் கெடவுதவி செயுமதியுதாரமே
தானவெண் களிறமரரூரின்முன் கொணருமக
டாளமென் றவிர்களப முலைபுணருநேயமே
சாகரம் பொருவிழிகொள் வேடமின் கலவியொரு
சாரலின் றலைநுகர வவடனெதிர்கூடுமே
தாலமென் றதனிலுள தேவமங் கையரனையர்
தாமுமின் புறமருவு மொருபெருமைசூடுமே
ஆரகன் சடமுமொரு மாயவெங் கிரியுமுள
தானையும் பொடியவென வடியயிலையேவுமே
தாழ்வறும் புயவலிகொ ளாசிங் கமதனைய
தானவன் றனதுயிரை நுகருமவகையோருமே
சாகையெண் டவிரவளர் மாமரங் குருதிவெகு
தாரைகொண் டுகவலறி விழவெளிதுகீறுமே
தானதந் தனனவென நாடகஞ்செயுமகளிர்
சாயுமிந் திரசபையை நிறுவியளிகூருமே (௧0)

தாகமிஞ் சியகவுரி நீருணும் படியெழுவர்
தாமுமங் கவர்மருவு மெழுகிரியுநூறுமே
தாரிழந் தலமருப கீரதன் பழையபடி
தானிலங் கிடவவன திகலடுகுரூரமே
சாதனம் பெருகுமுசு மாமுகன் ககனம்வரை
தாவுமொண் புகழ்புனைய வருளுமதிகாரமே
தாரகம் பெறுமலய் மாதவன் றனதடியர்

சாவொழிந் துலகுதொறு முலவவிடும்வாரமே
சாலதந் திரமுமுணர் போகனம் பிடிமுபய
தாள்விழைந் தவர்தமிடர் முழுதடர்குடாரமே
சால்கொடுந் தகையபுலி வாகனங் கொளுமுனிவி
தாயகந் தெரிபவர்கள் சிலர்பெறுசினேகமே
சாருவென் றொருபெயரை யேமொழிந் தவள்கைதரு
சாமியென் றுருகுமவர் துயரடுசுபாவமே
சாபமுங் கணையுமொரு வாதுகொண் டலையெயினர்
சாறயர்ந் திடல்பகரு மகவலுமவாவுமே, (௯)

யாரணன் றனதுமனை யாளெனுஞ் சரசுவதி
யார்வமிஞ் சிடமிளிரு மபிநயசொரூபமே
யாகமங் களுமுளபு ராணசங் கமுநிசமெ
னுவிலங் கிடவழலி லொருசுவடிபோடுமே
யாலமுண் டவர்தமது கூடலம் பதியினரு
காறுசெந் தமிழருமை யறியவிடுமானமே
யாகுலம் பெறும்வழுதி கூனும்வெஞ் சுரமுமொழி
வாகவெண் பொடியமணர் விழியினெதிர்பூசுமே
யாசொழிந் தனவுமது சேரநின் றனவுமென
லிமதந் தொறுநிகழு மநுபவசமூகமே
யாழிவென் றசலமுறு பாலையன் பலபனுவ
லாரமங் கணியவொரு கவிஞனுளிலேகுமே
யாமியின் சுவைகுலவு பாடல்விண் டவர்கள்பொது
வாதனந் தனிலவர்செய் கலகமறவாலுமே
யாயிரந் தவரையொரு பேய்நுகர்ந் திடுகணம்வ
ராமுனங் குகையினது கதவடுமுபாயமே (௰)

யாடலஞ் சிகியினது சோர்வொழிந் திடவிவரு
மானவம் பியலினதன் மிசையிடியில்வீழுமே
யாணவந் தவிருமுது வேதியன் சினவுதலு
மாவியின் கரையிலொரு சிவனெதிரினீளுமே
யாலிலந் தணமுனிவர் நால்வருய்ந் திடல்செய்குரு
வாதிபுங் கவரும்விழை தருகுறியின் மூலமே
யாதரஞ் சிறிதுமில ராமுரண் புரிதருவ
ராண்மைகுன் றுபுநசிய வெகுளிசெய்விரோதமே
யாழமிஞ் சியகடலை வானமன் றனைமுதிரு
மாடகங் குலவுகிரி யினைவெலிசைகோலுமே
யாகநொந் துலையமலை மீதுருண் டெழுசிறுவ
னுசைவண் கடல்சுவற வெனமுயலுமோகமே

யானைகொண் டெர்பெரிய மாசுணம் பலபலுக
மாரவின் டிடினுமமை வருபுகழபாரமே
யாதியந் தமுநடுவு மேகமென் றுணரவரு
ளாவினன் குடிமுருக னடல்குலவுதோள்களே. (கஉ)

நேரிசைவெண்பா.

தோளா றிரண்டானைத் துங்கவடி வேலானை
யாளாவார் சூழ்பழனி யாதிபனைத் — தேளாம்
வினைப்பேய்செய் நோய்க்கஞ்சி வேண்டுகின்றே னன்னு
னெனைப்பேணிக் கொள்ளுவதென் றே. (கஙு)

கட்டளைக்கலித்துறை.

என்றுங் கவலைப் படாதார் தங்கூட்டத்தொ டென்விழி முன்
னின்றுங் கவலை நினைத்தூறற்குத்து நிரப்பொழித்தாள்
வன்றுங் கவலைப் பொருமுலைமாதர் மலிவயலூர்க்
குன்றுங் கவலையச் சித்தேசர்நெஞ்சுங் கொளுங்கந்தனே. (கச)

மடக்குக்கொச்சகக்கலிப்பா.

கந்தமலி சூரவோனே கருணைமலி சூரவோனே
யந்தாருக் குடையானே யதிதாருக் குடையானே
பைந்தகைய மயிலோனே பரித்தகைய மயிலோனே
வெந்தவய லூரானே வியன்கொள்வய லூரானே (கரு)

ஊர்.

கட்டளைக்கலிப்பா.

ஊர்கண்மாத்திர மோபழனிக்குக னுற்றுவாழ்தல மொண்கிரிபற்பல
சீர்கவின்ற தினைப்புனம்பற்பல செம்பொன்வாய்ந்த சிகரிகள்பற்பல
நீர்கலிக்குங் கடற்கரைபற்பல நீக்கொணாத நிசமறைபற்பல
வார்கலந்த சடைச்சிவன்கும்பனே ரன்பர்நெஞ்சமு மங்ஙனமாகுமே. (கசு)

இரங்கற்றுறிசை.

ஆகுவேறி யண்டபிண்ட மெங்கணும்பு குந்துமீ
ளண்ணல்பின் னுதித்தபால னுவினன்கு டிப்பிரான்
பாகுவன்ன சொற்குறத்தி தாடொழத் துணிந்தவேள்
பச்சைமா மயிற்கண்வந்த பவனிகண்ட பாவைமார்
வாகுவிற் கரும்புவைத்த வேள்பவுஞ்ச தல்லரோ
மற்றவன் சமர்க்குடைந்து வாடுகின்றதென்கொலோ
யோகுமுன் புரிந்தவீச னைப்பிரித்த வாளியோ
டொன்றிரண்டு மூன்றுதொட்டு முயிர்பிழைப்ப தருமையே. (கஎ)

நேரிசையாசிரியப்பா.

அருணெறித் தவத்தோ ரஞ்சிநொந்து
தெருமாரவண்ணஞ் செந்தகருகைத்தும்

பாவமன்ன பன்னூனவராற்
றேவரியாருஞ் சிறைப்படறவிர்த்துங்
காயிகமுயன்று கருத்துநெக்குருகு
மாயிரங்கண்ணு னமையுருவொழித்தும்
பொன்றயங்குருவப் போதனூர்வங்
குன்றவோர்குன்றக் குகையிடையடைத்துந்
தீயதாரகன்மேற் செலவிடுத்திழந்த
சேயவாழி திருமாற்களித்தும்
டையராவணிந்த பரமனுள்ளத்
தையந்தீர்தர வரும்பொருளறைந்துந்
தேடுஞ்சீர்த்தித் திறஞ்சிறிதே நதி
நாடுந்தமியே னவிவுறத்தகுமோ
மூலன்மரபின் மூன்றுந்தலைமுறைப்
பாலனுதியரைப் பரிந்தன்றுண்ட
வருட்டிறமிந்நா ளகன்றதேயோ
மருட்டிறத்தினத்தொடு மாயச்செய்யேல்
வந்தன்றென்னுள் வகுத்துரைத்துளவா
றந்தவுண்மை யவிழ்தரக்காட்டாய்
பைந்துணர்ச்சோலைப் பழனிவெற்பிற்
செந்துவர்க்குன்றெனத் திருக்கைத்தண்டொடு
வேற்றிருமார்பமும் விளக்கிநாளு
மேற்றிசைநோக்குபு மேயவித்தகனே. (கஅ)

நேரிசைவெண்பா.

வித்தகனைத் தென்பழனி வேலவனை மெஞ்ஞானத்
துத்தமச்சீர்ச் சற்குருவென் றோராதா -- ரெத்தகவோ
ரானுலு மன்னோ ரகம்புறமென் றுள்ளவையம்
போனூரன் றென்றுநிந்திப் போம். (கக)

கட்டளைக்கலித்துறை.

நிந்திப்புக்கஞ்சி நெடுநாண்மெலிந்துன்னை நேடியிந்த
வந்திப்புச்செய்யத் துணிந்தேனெந்நாள்வந்து வாழ்விப்பையோ
சிந்திப்புக்கொண்டுளந் தேறிப்பழனிச் சிலம்பில்வருஞ்
சந்திப்புக்காரர் விருப்பமெல்லாமுந் தருங்குகனே. (உ0)

கலிவிருத்தம்.

தருவையன்ன வீகையுந் தவப்பெருக்கு மெய்தினூர்
மருவுபேர வைக்கணியானும் வைகும்வாழ் வளிப்பையோ
பொருவிலாவி னன்குடிப் பொருப்பினிற் பொலிந்துவாழ்
திருவருட்கு கேசனுஞ் சிவோகஞான சித்தனே. (உக)

### எண்சீர்வண்ணவிருத்தம்.

### தத்ததானதன தானதன தானனா.

சித்தகோடிகளெ லாநினைய நீடுமோர்
செக்கர்மேனிமுரு கேசனுமை கேள்வனார்
பத்தரோடுவழி பாடுசெயு ஞானவேள்
பட்சிவாகனவி சாகனவ னாணைநீர்
சுத்தமாமுணவு மீடில்வய லூரையே
சொற்பபாடலுணர் வீறுமரு ளாசையா
லெய்த்ததேகமுமு ளாரறிவ ரேனையோ
ரிக்குமாரனது சேனையிடை மாய்வரே (உஉ)

### அம்மானை.

மாயன் புகழ மலைப்பழனி வாழ்முருகோன்
றூயன் குரவன் றொழுகடவுளம்மானை
தூயன் குரவன் றொழுகடவு ளாமாகில்
வேயன்ன தோளாரை வேட்பானே னம்மானை
வேட்டவித மெண்ணில் விளையங்கா ணம்மானை. (உ௩)

### நேரிசைவெண்பா.

காணங் கருதிக் கடைத்தலைதோ றுந்திரிந்து
நாணமி ருக்குமென்னை நத்தியே — வேண
பயனளிப்பான் கொல்லோ பழனிக்கிரிமேல்
வியன்வடிவே லேந்திநின்ற வேள். (உ௪)

### கட்டளைக்கலித்துறை.

வேளைக்குதவுங் கருணைநிற்கில்லைகொன் மெய்யறிய
நாளைக்கெனச்சொன்ன நின்னெஞ்சஞ்சற்று நகவில்லையோ
பாளைக்கமுகிற் பசுமூங்கில்சூழ்தென் பழனிமலைக்
காளைப்பருவ முருகாகுன்றுத களிப்பருளே. (உ௫)

### கலிநிலைத்துறை.

களிகொண்ட மதவேழ முடனாடி மூர்நின் கழற்சேவடி
பொளிகொண்டவுணர்வாளர்பலரைத்தொடர்ந்தாண் டுவுயர்வுன்னியே
யிளிகொண்ட வென்னைத் தடுத்தாள நாணுங்கொ லெங்கோரநீர்ந்
துளிகொண்ட முகின்மூசு பழனிக்கிரியின்மேய சுடர்வேலனே. (உ௬)

### அறுசீர்விருத்தம்.

சுடர்நெடுவேற் படையேந்தித் தோகைமயிற் பரிமீது தோன்றியென்ற
னிடர்முழுதுங்களைந்தாண்டா வியாவருநன்னைத்தடைசெய்வா ரிரக்கமின்றே
வடர்பொழில்சூழ் பழனிமலை யதிபபொன் னகர்ப்பலவோ ரார்வமெய்தக்
கிடர்படுவா ரிதிநடுப்போய்த் தீயவெஞ்சூர்ச்செகுத்தபுகழ்ச்சீ ருள்ளாரே.()

எழுசீர்விருத்தம்.

உள்ளமொத்துனையே யுணர்கிலாதவர்போன் றுலகரூடுழல வேன்விடுத்தா
யெள்ளளவருட்சீ ரீகுதியாயி னிகபரமுயச்செய்வேன்கண்டாய்
கள்ளநெஞ்சகத்துத் தானவர்தமக்குங் கருதியபேறளித்தருளும்
வள்ளலங்தகையார் மலர்விழிப்புதல்வா மலைத்திருப்பழனிவானவனே.(உஅ)

மடக்குக்கட்டளைக்கலிப்பா.

வானகத்தரை யாண்டலையாதவா வானகத்தரை யாண்டலையாதவா
ஞானதேசிகச் சற்குருநாதனே ஞானதேசிகச் சற்குருநாதனே
மானளித்த மகண்மணவாளனே மானளித்த மகண்மணவாளனே
பானலம்பழ னிப்பதிக்கண்ணியே பானலம்பழனிப்பதிக்கண்ணியே. (உ௯)

எண்சீர்த்தாழிசை.

கண்ணும்புகழ் பெரிதுற்றது கவிஞர்க்கிடி யேறுக்
காணத்தகு சந்தக்கவி கவினுற்றது கடல்சூழ்
மண்ணுங்கக னமும்வாழ்வுற வைக்கத்தகு மாண்மை
வருமாறுத வஞ்செய்திடும் வலியுற்றது வயலூர்
நண்ணுங்குரு பரநாயக னனவிற்கன விடைபன்
ஞாயஞ்செசான் மனச்சாட்சியு நன்குற்றது நரர்சொற்
புல்லுறும்வறு மையும்வேரொடு போகப்பெறு கில்லேன்
புத்தேளிருஞ் சித்தேசரும் புரையுற்றன ரன்றே. (௩0)

வெண்டளைக்கலிப்பா.

அன்றுதொட்ட நின்கிணற்றுக் காற்றாற்றொன் றுண்டாக்கி
யின்றுதொட்ட வென்கிணற்றுக் கீற்றாற் றீதிகண்டாய்
குன்றுதொட்ட வேலா குளிர்பழனிக் கோயினடுத்
தொன்றுதொட்டு நின்ற துணைத்தோட் சுரேசுரனே. (௩க)

கட்டளைக்கலித்துறை.

சுரேசுரனென்றுனும் புலவர்தம்மீசனுந் துங்கவைவேல்
வரேசுரமூர்த்தியு மின்னோர்பலரை வலிதுபற்றுங்
கரேசுரக்கர்வனுந் தென்பழனிக்கிரி காண்பவரை
நரேசுரராக்கு முருகோனென்றேசொல்லு நான்மறையே. (௩உ)

எண்சீர்விருத்தம்.

மறம்.

மறவர்குடிலிற்பெண்கேட்டல்.

நானுக வந்துநின்பாற் பெண்கேட் டிங்கு
நன்குசெய்கின் றேனெனநீ நவில வேண்டா
மூன்றும் வாய்ப்புளினர் குலக்கோமானே
யுன்றனை யென்னைமன்ன னுன்பால் விட்டான்

சேனுதி பதிவரினுந் தாங்க மாட்டாய்
திக்னகீகூழி னெல்லமுது தீதாங் கொல்லோ
மேனுளோம் பழனிமன்னோர் பெண்கொண் டேகில்
விரைந்துபிற்போய் நம்மினத்தார் வென்றதென்னே. (௩௩)

மறவர்மறுத்துக்கூறற்றாழிசை.

வென்றிதுன்று பழனியிற்செ வேடனைத் தெரிந்திலாய்
வேதமுற்று ணர்ந்ததோர் வியாசனூல் விளம்புமுன்
பன்றியாலொர் மன்னைவென்ற வேடர்தம் பிரானுடன்
பக்கநின்ற வெயினமங்கை பாலனென்ப தார்சொலா
ரன்றியெங்க டெப்வமன்னை சங்கமுற்ற கீரன்வா
யகவல்சொல்லும் புளினர்வேறி னத்தரிற் கலப்பரோ
சென்றிறைக் கியம்பிடஞ்சி டாதெதிர்க்கொ ணாதெனத்
தேவரென்று ணர்ந்தொல்காது தேடிவந்த தூதனே. (௩௪)

இருவுமது எண்சீர்விருத்தம்.

தூதகேண்மறமென்றசொற்பொருணீ துணியிலித்தனைதொலைநடந்தனு நாய்
மாதராசையி னுலுயிரிழந்த மன்னரெண்ணிலர் மாநிலத்தங்கோ
சீதநாண்மலர்ப்பொழில்சூலாம்பழனிச்சேந்தனணையாஞ்செருச்செயிலவர்க்
காதன்மங்கையர்குறிச்சிதோறமைவார்கடலுஞ்செக்கரிற்கொண்டருமன்றே.

நேரிசைவெண்பா.

காண்டமொரு மூன்றுங் கடந்துன் கழல்புகுஞ்சீ
ரீண்டடைய நாடுமென்னை யெள்ளாதேநீண்டவனும்
போற்றப் பழனிப் பொருப்பில்வளர் புண்ணியனே
யாற்றன்முழு தின்னே யருள். (௩௫)

கட்டளைக்கலித்துறை.

அருளந்தரங்கத்திற் சற்றுமின்றாயினன் றூண்டுசொன்ன
பொருளந்தரங்கண்ட பொய்யாமெவ்வாறுய்ந்து போதுவனியா
னிருளந்தரங்கக் கடன்மாவட்டாய்நல் லெழிற்பழனித்
தெருளந்தரங்கன் மருகாவன்சோதனை செய்திடலே. (௩௭)

கலிநிலைத்துறை.

செய்யாறமைக் குங்கதிர்வேல்புனை செங்கைநாத
னையானனத் தார்தருபாலக னுமென்றோர்ந்து
மையார்பழ னிக்கிரியிற்றினம் வாழ்த்துநாயே
னுய்யாதொழிந் தாற்புவிமாதழ லோய்வுறுளே. (௩௮)

களி — தாழிசை.

ஓய்வுறுதருட் பேறுவேட்பவ ருள்ளமாங்கம லத்தையே
யொத்தசீர்த்திரு வாவினன்குடி யூரில்வேள்புகழ்க் களியரியா

மாய்வுறுது பிதற்றிடேமதற்;கானசாட்சிகள் கேண்மினோ
வத்தனுக்கிறை செம்பொனுரு மரிக்குநாயக னெல்லதே
காய்வுறுவிதி வாழ்தலஞ்சுடு காடதேயட லேமனே
காசினிக்குயர் செல்வனூர்வக் கடலளிக்கவும் வல்லவன்
றேய்வுறுமதி யெண்ணிலாதன தெய்வமேமுழு மோசனக்
தேகமேபல கோடியாலய சிலமார்வது தேறினே. (ங௬)

இதுவுமது எண்சீர்விருத்தம்.

தேறிடுங்கட் குடியருக்கே யடிமையென நின்றோர்
தீராத கஞ்சாவைத் தினந்தினமும் வேட்பார்
நாறியநீர் மேன்மேலும் வழிதரவே கொள்வார்
நளிர்பழனி மலைக்குகனை நம்புதலு மாட்டா
ராறிரண்டு சமயமுந்தஞ் சம்மதமென் றேற்பா
ரறங்கள்வகை செய்வாரை யடியோடு கெடுப்பார்
பாறினத்திம் பண்டமுண்டு பார்முழுது மலைவார்
பாவலவர்க் கிதனிரண்டு பட்சமுந்தோன் றிடுமே. (௪0)

கண்ணி.

தோன்றுவதுந் தோன்றாச் சொருபமுமா நின்றபொரு
ளியான்றுதிக்குஞ் சீர்ப்பழனி யிற்குலவு சற்குருவே. (௪க)

வேற்றொலிவெண்டுறை.

சற்குருவா மவர்பலரிற் றலைமைபெறு பழனிமலைத்தண்டபாணி
நிற்குநிலை யுணர்ந்தவன்ற னெழுத்தாறுஞ் சந்ததமு நிகழ்த்தவல்லார்
கற்குநாவலர்பெருங் கருணைமாதவர்
விற்குனித்தமர்செயும் விறற்கைவீரரே. (௪உ)

மடக்குத்தாழிசை.

வீரராயவரிற் பெரியவாண்மையனே மிகுக்கும்வெப் பெரியவாண்மையனே
விண்ணவர்சேனைக் காவலுள்ளானே விகற்பர்வெலைக் காவலுள்ளானே
சாரதர்கூட்டம் பரவுதேசிகனே தமிழ்முனி பரவுதேசிகனே
சண்டன்மேற்கழற்றுக் குமரநாயகனே சரவணக் குமரநாயகனே
நாரதாதியர்க்கோர் தாரகமானாய் நளிர்புனத் தாரகமானாய்
நறைமலிகடப்ப மாலிகையானே நவில்சொலா மாலிகையானே
பாரதிமகிழக் கலையருள்வானே பதுமம்வாழ் கலையருள்வானே
பாதுகாத்திலையி தென்னையாண்டருளே பழனியி லென்னையாண்டருளே. ()

நேரிசைவெண்பா.

ஆண்டானைத் தென்பழனி யானை யலர்கடம்பு
பூண்டானைக் கோடி பொருப்பானை — வேண்டாத
நாள்கழிந்த துன்பமுற்றோர் நன்மொழியாற் றீர்க்கவல்லான்
வாள்கவின்ற கைவீர வாகு. (௪௪)

கிள்ளைவிட்டிரங்கல் — கட்டளைக்கலித்துறை.

வாருகிற்கிள்ளையொன் றேந்தும்பழனி மலைக்குகன்பாற்
போகுமென்கிள்ளையை யாங்கதுபற்றிப் புணர்ந்ததுவோ
வேகுமிக்காமவெந் தீயாறியானின்ப மேவலென்றோ
யோகுடையார்க்கு மயலூட்டுந்தோழியொ ருண்மைசொல்லே. (சரு)

எழுசீர்விருத்தம்— இரங்கல்.

சொல்லுந்தூதினுக் காவனவெனமுனூ றொருகுத்துரைத் தவையெல்லாஞ்
செல்லும்போதுமோ ரணுவளவிரங்கிலான் றிருப்பழ னியிற்செவ்வேள்
கல்லுநாணுறுங் கருத்தனேயவன்றரு காமநோய்க் கடல்வீழ்ந்தே
னல்லுமங்கசன் வில்லுமெற்செயுந்துய ராறுமா றறியேனே. (சகூ)

எண்சீர்வண்ணவிருத்தம்.

தனன தந்தன தானனதனனு.

அறிவறிந்தபரி பூரணனலையோ
வடிமைநின்சரண நாடுதல்படிறோ
குறிபகர்ந்தகுண வேடமினுடனோர்
குலவியென்றுயரெ லாமடவிசைவாய்
மறியணிந்தகர நாதனுமுகிறோய்
மலயாண்பனுமு ளுளுயவருள்வாய்
பறிபடுந்தலைகொள் சாரணர்கலகா
பழனியங்கிரியில் வாழ்குருபரனே (சஎ)

பத்துச்சீர்வண்ணவிருத்தம்.

தனனதத்ததன தத்ததன தத்ததன தந்ததானு.

பரம தத்திமிர முற்றறவொ றுத்தசிறு சிங்கமேநோர்
பனவ புத்திரனை யொத்தபுகழ் பெற்றுயமு யன்றநாயே
னிரவ லத்திரளி னுக்குளுழி ளைத்திவண முங்கலாமோ
வினிய சற்குருவெ னத்திருவு ருக்கொடெதிர் வந்துகாவாய்
காத லத்திலொரு சுத்தியொட டற்றடிபு னைந்தவீரா
ககன முற்றவிரு பத்தினிக ளுக்கிடைம கிழ்ந்தகோவா
மரக தக்கிரியெ னத்தரும யிற்பரியி வர்ந்தவேளே
வளமி குத்தபழ னிக்கிறையெ னத்தினந டஞ்செய்வானே. (சஅ)

கைக்கிளை - மருட்பா.

வானமங்கை யல்லளிவள் வார்குழற்பூ வாடுகின்ற
தேனனைய மைக்கண் சிமிட்டுகின்ற — ஞான
குருவெனப் பழனிக் குவட்டின் மேய
வொருவனை யேதின முன்னு
முருடர்தங் குலத்து முகிழ்முலை மகளே. (சகூ)

இதுவுமது - கட்டளைக்கலிப்பா.

மகரவாரிதி யன்னகட்பார்வையான் மாழ்கி நொந்துமறுகுமென் வன்மனஞ்
சிகரமால்வரையேங்கர்கொங்கைமேற்சென் றுலாவித்திருந்தியென்றெய்தமே
தகரவார்குழ லாரிடந் தூதும்போனு சங்க ரன்றரு சாமியைச்சந்ததங்
குகரமாகுங்கொடிப்பழனிக்கிரிக் கோயி லிற்கண்டுகொள்வார்கள் போலவே.

தாழிசை.

போல்வதொன் றில்சீர்ப்பழனிவேலனைப் பொறிகளாறுடைப்புனிதநாதனைக்
கோல்வலிக்கொடுஞ் சூரர்காலனைக் கும்பி நிந்தொழிற்கொண்டதொண்டர்கா
ணல்வர்பெற்றபேற் றிச்சையின்றியே நரரொடங்கனே நலிவுறேன்மினோ
வால்வயிற்றனைக் கடவுளாருமற் றவனைநம்பியுய்ந் ததுமெயாகுமே. (௯௧)

நிலைமண்டிலவாசிரியப்பா.

மெய்யறிவினரே விரும்பும்வீறுடைச்
செய்யமேனிச் சிவகுருபரனைப்
பல்வயிற்கருதிப் பரதவியாமற்
செல்வவீடுந் திருவாவினன்குடிக்
குன்றிற்கருதுங் கூர்ப்புறப்பெற்றும்
வென்றிப்பேறே விழைந்தயர்கின்றேன்
முன்னைவினைநோய் முழுதறமுனுக்கி
யென்னையன்று னேற்றுக்கொளினே
யொருபெயரன்றிமற் றென்றறிகில்லாள்
பருவரல்களைந்த தாதியபலபல
காதையுமெய்யாக் கவின்றருங்களிசால்
பேதைமாந்தர் பிணக்குமுற்றழியும்
பதுமப்பொகுட்டுப் பண்ணவன்பகர்ந்த
சதுமறைச்சமயந் தழைக்குமேனைப்
புன்னெறியாவையும் புறம்பா
மன்னெறிவழுவா மாண்புலகுறுமே. (௯௨)

இன்னிசைவெண்பா.

உலகமுற்றுந் தன்குடைக்கீ ழோவாது கொண்டு
கலகமறக் காக்குங் களிப்புடையா ரேனுந்
திலகநுதற் குஞ்சரிகோன் றென்பழனி போற்றும்
புலவரொப்பக் கொள்ளார் புகழ். (௯௩)

கட்டளைக்கலித்துறை.

புகழ்துன் றுதென்பழ னுபுரிக்கோயிற் புனிதனன்ப
ரிகழ்வொன் றினுமஞ் சாருடலாதிய வென்றுதம்பா
னிகழ்கின்றயாவு மவன்றன்னவேயென நிச்சயித்துத்
திகழ்சிந்தையாள ரவரேபிறவித் தியக்கிலரே. (௯௪)

சித்து. எண்சீர்விருத்தம்.

தியக்கமறு முணர்வளிக்கும் பழனிச் செவ்வே
 டிருவருட்பேற் றிச்சைகொள்ளுஞ் சித்த ரேமியா
மயக்குகையிற் பொன்னுருக்கும் விபரந் தேர்வே
 மணிமாவும் பிறவுமெளி யனவாக் காண்பே
மயக்குளிகை யிட்டுநெடுங் ககனத் தேகும்
 வகையறிவேங் குருச்செயலே வலிதென் றோர்வேம்
பயக்குழம்புந் தயிருநெய்யு மமுதும் வேட்டுப்
 பரிசழிகின் றேங்கிடைத்தாற் பசிதீர் வோமே. (ருரு)

இதுவுமது - தாழிசை.

பசியினன்மிக வாடுநோன்பது பற்றுமாண்புடைச் சித்தரேம்
பழனிவேலனைப் பாடியாடிப் பணிந்துகெஞ்சிடச் சோம்பிடே
மசியனந்தம் பொறுத்துளேம்வெளிற் றனையுங்கண்முற் காட்டுவே
மாரணத்துட னுகமத்துயி ரஞ்சுமாறும் விளம்புவேங்
கசியுமன்பதை யும்பர்வாழ்வு கடைப்படும்படி நாட்டுவேங்
காரசால வணமருந்தியங் கம்பலத்திற் குலாவுவேஞ்
சுசியிலாதன யாவர்சொல்லினுந் துய்த்திடேமிது சத்தியஞ்
சோறுபால்கனி காய்கிழங்கிலை தொக்குநல்குமின் றெண்டரே (ருசு)

குறள்வெண்பா.

தொண்டர்சொற்றா தானேன் சுதன்பழனி மாமலைமேற்
றண்டணிந்து நின்றகுகன் றான். (ருஎ)

கட்டளைக்கலித்துறை.

தானன்றுநானன்றென் றன்றுநின்கைக்கிள்ளை சாற்றியபே
ரானந்தமென்றனக் கென்றருள்வாய்பண் டகத்தியற்கு
மோனந்தருஞ்சற் குரவாபழனி முதுகிரிமேல்
வானந்தழைப்ப நிலம்வாழநின்ற மகத்துவனே. (ருஅ)

கலிநிலைத்துறை.

கத்துந்திரைத்தண் கடற்பாலுறங்குங் கவின்செங்கண்மா
லொத்துன்பெருஞ்சீ ருரைக்குந்திறந்தந் துயக்கைக்கொள்வாய்
முத்துந்துவர்க்குப்பை யும்பொன்னுமணியுங்கொண் முதுவீதியிற்
றத்தும்பல்வளையோலும் வயலூர்புரந்துற்ற தனிவேலனே. (ருகூ)

கலிவிருத்தம்.

தனியனுவொரு தண்டுங்கைக்கொடு
புனியருப்பொழிற் பழனிக்குன்றின்மேன்
மனிதமாதவன் போன்றுவாழ்பர
னினியன்மற்றெமக் கியாருமில்லரே. (சுO)

ஊசல் - எண்சீர்விருத்தம்.

இல்லறமுந் துறவறமுந் தூண்களாக விகாபரசா தனப்பொதுச்சீர்விட்டமாக
நல்லறமா தியநான்கும் வடங்களாக நழுவநுஞ்சத் தியமதுவே பலகையாக
வல்லசத்தி யோராறும் போற்றி யாட்ட மாயன்மக்க ளிருவருட னூடி ஊசல்
பல்லவச்செஞ்சடைச்சிவனார்தவப்பேறானபழனிநகர்க்குழகர்மகிழ்ந்தாடூசல்.

அறுசீர்விருத்தம்.

ஊசலெனச்சுழல்வுறுமென்னொருமனத்திற் பலவாறேறெனிர்கின்றாய்நீ
பேசநயைச் சொன்முழுதும் பிழையாமோவென்றுமொர்ந்தேன்பேணிக்கொள்வாய்
நாசமில்சீர்ச் சிவபெருமா னயனமணி யாமுநகா நலமிக்கோங்கி
யாசற்றென் பழனிமலை யதிபாவின் னவர்குடிக்கோ ரரணாவானே. (கஉ)

எழுசீர்விருத்தம்.

வானநாட்டினர்க்குமரியநின்னருட்சீர் வாஞ்சைகொண்டுழைக்குமென்றன்னை
யீனநோய்விளைக்குங் காலகன்மத்தா லிடர்படப்படுத்தலேனியம்பாய்
தானமால்களிற்றுக் கிளையபாலகனுச் சரவணத்துதித்தசண்முகவா
ஞானதேசிகனுப் பழனிமாமலைமே னணுகியகுமரநாயகனே. (கங)

எண்சீர்த்தாழிசை

நாயாதியவே துகரத்துகுமு னல்மெனமயில்கின் றவரிற்சிலரு
மாய்ரீரசமென் றவிர்சித்திகளான் மகிழ்வுற்றிடுமிம் மகியிற்றமியே
னீயாதுவலப் பெறுசின்மொழியா னினைகின்றனவீணெனமாய்தரினின்
வாயானதன்வண்மையெனுமுணர்வாய்வபலூர்மலைவாழ்மயில்வாகனனே

குறளடிவஞ்சிப்பா.

கனாநிவர்தகை யினர்முதலினர் புலைகொலைமகத் தலைபுறலறத்
துறவி னரருட் டிறமிகழ்தரு பிழையொடுகதி விழைமருள்கெட
வேதியர்மறை யோதிடலொழித் திழிகலைபயில் பழிவிடுபட
மன்னவர்பலர் பொன்னசைவழி யுலகழப்புரி கலகமற்றிடச்
செட்டினர்பொரு வட்டியினவா நழுவுறநிலத் துழுதொழிலினர்
தடைபடாதருள் கொடைநலம்பெற வினையனபிற வெனையவுமிக
நீடுறத்தின நாடுமென்றனை யாள்கிலையெனில் வாள்கிளர்தரு
குக்குடக்கரு மிக்குடைத்துடைத் தப்புனற்கொடு செப்புருக்குநர்
சித்தராயருண் முத்தராகவுஞ் செய்தநீரொரு மெய்தவாவிதத் - துணர்மதி
வண்புகழ்ச்சற்குரு வடிவாத் தண்புனற்பழனிச் சயிலமுற்றவனே. (கரு)

சவலைவெண்பா.

அவமிருத்தோ ராயிரநீத் தாண்டுகொண்ட தன்றிச்
சிவன்விழிநீ யென்றுமுறை செய்தாய்
பவமொழியச் சற்குருட்கண் பாராய் பழனித்
தவகுலவே டக்குருநா தா. (கசு)

தழை - கட்டளைக்கலித்துறை.

தாதார்கடப்பும் குரவமுஞ்செச்சையுந் தண்குவளைப்
போதாதிபவு மிருக்கால்காதொரு பொற்றழையென்
சீதாரவிந்தத் திருவன்னபேதைகை சேரவுடத்தான்
மாதாளும்பாகர் மகவாம்பழனி மலைவள்ளலே. (கூ௭)

இதுவுமது - தாழிசை.

வள்ளலென் முலைப் பாவையாடைபோய் மயலுழப்பவென் வளைகவர்ந்ததோர்
கள்ளவேடனிப் பழனியூருளார் காணமென்றழைக் காப்புவிட்டபின்
னெள்ளலஞ்சிலா னென்னைத்தன்னொடு மெதிருரைக்கின்று ளேங்குகின்றிலான்
புள்ளலம்புபொன் னீபமல்கிமலன் புதுமைசெய்யுமோ புளகமிஞ்சிமே.(கூஅ)

எண்சீர்வண்ணவிருத்தம்

தனனதானனத் தனதனதனதன.

புளகபூடணப்புதுமுலைவனிதையர் புருவவாள்பொரப்பொறிபிறழ்தருமெனை
யளவுறுவருட் கடனவிழிதுயி லரிபெறுவுவப் புறவிடநினைவகொல்
பளபளீரெனக் குலவியவயிலொடு பழனிமாமலைத் தலைமிசைநிலைபவர்
களவெலாமறக் கருணைசெப்திடவொரு கலபமாமயிற் பரியிவர்கடவுளே. ()

வஞ்சிவிருத்தம்.

கடவுளர்க் கிறைதொழுக் காத்தருள்
சுடரயிற் சேவகன் றொண்டர்சூழ்
தடவரைப் பழனியைச் சார்ந்தவர்க்
கிடர்வினைப் பந்தமுற் றில்லையே. (௭0)

கலிவிருத்தம்.

இல்லையென் றிரப்பவ ரெவரு மேங்கவச்
சொல்லையான் பகர்கலாச் சுகந்தர் தாட்கொள்வா
யல்லைவென் றவிர்திரு வாவி னன்குடிக்
குல்லைகாண் மலர்த்தொடைக் குமர நாதனே. (௭க)

சம்பிரதம். இரட்டையாசிரியவிருத்தம்.

காதந்தருஞ்சத்தி பேதமொருநான்கினையு நசரெலாமறிய நவல்வோ
நாயகமெனத்திரியு மவர்களெல்லாம்பொதுவி னடுநடுங்கவிடுவோம்
வேதந்தடந்தவர்க ளானவமறக்கறவும் வேளைவருமாறுமுயல்வோம்
வேலாவலயமறக் கொண்டமுனிவோர்பலர் விரும்பவிடையிற்குலவுவோம்
போதம்பயந்தபல வாவிகள்விளங்கப் புரிந்தபொருளைக்காட்டுவோம்
புலமைத்தொழிற்பெரியரிவையனைத்துஞ்சொற்பொருட்சம்பிரதமென்பரா
வீதம்பொலிந்தவய லூர்மலைத்தலையினித நின்றமுருகேசனருளே
ந்திசஞானவநுபூதி யெனுனுபவமறிசிலர் செறிபேணிமகிழ்வாமரோ. (௭உ)

இருவிகற்ப நேரிசைவெண்பா

மகிழமலர் வேளாபுகழ வாழ்பழனிச் செவ்வேள்
விகிர்தமுறப் பெற்றசில மேலோர் — சிகிபிகழ்வார்
பொன்னைப் புகழ்வார் புலையாட்டைப் போன்மதிப்பா
ரென்னைப்போற் கண்டுசொன்மி னே. (எங)

கட்டளைக்கலித்துறை.

சொன்மிஞ்சுமாதர்க்கு மால்கொண்டின்றுரைத் தூதிக நுக்கெஞ்சி
யன்மிஞ்சுசிறுதைப் புலவீரிதநீததொழி லாலுமகிழ்
கென்மிஞ்சுமென்றுழைக் கின்றீரநதோவரம் பின்புறத்து
நென்மிஞ்சுசீர்வைய ஆர்க்குகன்சீர்த்தி நிகழ்த்துமினே. (எச)

எண்சீர்விருத்தம்.

நிகளமிடப் பட்டுழன்ற நான்முகன்கைப் படைப்பு
நின்னருளா லாழிபெற்ற நெடுமால்கைத் திதியு
மகளபர ஞானநின்னு ளுற்றசிவன் றுடைப்பு
மடியேனை யணுகாவா றுண்டுகொள்ள வேண்டுஞ்
சகளமொடு நிட்களமுந் தானான தலைவா
சச்சிதா னந்தபர தத்துவசற் குருவா
யுகளபதஞ் சூட்டியமெய் யொளிர்தரச்செய் கில்லா
யுயர்திருவா வினன்குடிவா மொளிர்வேற் குகனே. (எரு)

எண்சீர்வண்ணவிருத்தம்.

தாத்ததானதன தானதன தத்தன.

வேற்கைவீறுறும்வி சாகனைநி னைத்துளார்
வேட்கையாவுமருள் வானைவிபு தர்க்கோர்தாய்
போற்குலாவும்வைய ஆரனைவெ ளிற்றுவாள்
பூத்தவேழமிவர் சாமியைவ ழுத்துவீர்
சேற்கிலாலமுது வாரிதிநி கர்த்தமால்
சீர்த்திதோயநெடு நாளுலகி லுற்றுமே
லாற்கண்மேவுபெரு மானெனவி ணிற்குலா
வாக்கமாரவதி யாசையெனை மொய்த்ததே. (எசு)

பதினான்குசீர்வண்ணவிருத்தம்.

தத்ததத்ததன தந்தத்தனதன - தத்ததானா.

மொய்த்த ளிக்குலநு கர்ந்திட் டிசைபயில்
பொற்பு மிக்குறும லங்கற் குழலியர்
முத்த மிட்டணைத ரும்பொய்க் கலவியி — னிச்சையாலே
யத்த நத்திமுய லுந்தூர்த் தகையினர்
பற்ப லர்க்கொருமனை யென்றுற் றுழலென்று

டத்தி னந்த நணை யின்கட் பகர்வது — பொய்ச்சொலேயோ
ந்த மிப்படிவ ருந்தற் றெரிகில
ரொத்தி ருப்பதென்வி ரைந்தெற் கெதிரவிர்
சிக்க மிக்கமயி லொன்றிற் குலவும்வி — ருப்பிலாயோ
த்தர் பற்பலர்வ ணங்கப் பழனிம
லைத்த லத்திலொரு தண்டக் கரமொடு
பற்ப முற்றிலும ணிந்திட் டறுதின — நிற்கும்வேளோ. (எஎ)

இரங்கற்குறிசை.

வேலை வென்றசெவ் வேளென்மான்மிகும் வேளைகண்டிவண் மேவிலான்
வெள்ளவேணியர் பாலனென்விழி வெள்ளமோடல்வி லக்கிலான்
காளையேரெழிற் கந்தனென்மனக் காளைநீக்கல்க ணிக்கிலான்
கைந்தலத்தவிர் வேலன்றுய்தமர் கைத்தொளாகலங் காட்டிலான்
கோலயாவும் வல்லசேந்தனென் கோளைமுற்றும்பொ றுக்கிலான்
கொல்லும்வேழமு கைத்தசெய்முலைக் கொல்லுமாடல்கு றிக்கிலான்
வாளைபாய்வய லூரன்மாரன்கை வாளைவெல்வழி நல்கிலான்
மையன்றுப்சகிக் கின்றிலேன்வரு மையலும்பெரு குற்றதே. (எஅ)

கட்டளைவிருத்தம்.

உற்றமனத் தானும் பெற்றகனத் தானு மோர்மறியானும்பாரட்டி யானுஞ்
சொற்றபொருளானுமற்றமருளானுந் தோகைமயிலானும்வாகைபயிலானுங்
கொற்றநிலையானுங் கற்றகலையானுங் கூதளநட்டானும் வாதளவிட்டானுந்
துற்றவிருக்கானுஞ் சுற்றமருக்கானுந் துழனியுலையானும் பழனிமலையானே.

மதங்கி - நேரிசைவெண்பா

ஆனமுதுந் தேனமுது மண்டரின முண்டுவக்கும்
வானமுது நாண வயங்கியதே — ஞானகுரு
வாழும் வயலூர் மலைமதங்கி வாய்ப்பாட்டி
லாழுமிசை யேழி னமுது. (அ0)

இதுவுமது - கட்டளைக்கலித்துறை.

அமுதுண்டவோர்தொழுஞ் செவ்வேள்பழனி யணிமதங்கி
குமுதம்பொருங்கனி வாய்க்கிருதானவர்க் கொல்லவந்தாள்
கமுகொன்றுகண்டமும் வீணையுந்தோற்றன காண்கமலச்
சமுகங்குயஞ்செய்யும் வென்றியிவ்வாறெனச் சொல்லரிதே. (அக)

கொச்சகக்கலிப்பா.

சொல்லிறந்த மெஞ்ஞானச் சுகக்கடலிற் றோய்வதனுக்
கல்லிழந்த் வருபூதி பனுவளவு மருளாயோ
மல்லிகைசூ சீர்ப்பழனி மலைக்கோயி லிடைமேவி
வில்லிருந்த கைவேடர் விருப்புமளித் தருள்வானே. (அஉ)

கலிவிருத்தம்.

வானத்தினர்வாழ் வுறவைத்துளவா
றீனத்தனமற் றயுமாறெமையாண்
மீனத்துவசன் சமர்வென்றிதரும்
பானற்புனல்சூழ் பழனிக்குகனே. (அங)

குறம் - சிறுசிந்து.

குகவேளைத் தென்பழனிக் கோயிலிற்கண்டேத்திக்
குறியுரைக்கும் குறவர்பெருங் குலக்கோதை நானே
மகராச ராசகுல மங்காய்நீ வீணே
வாட்டமுற்றுப் பலவாறு மனம்வருந்த வேண்டாஞ்
சுகமோடு நாகணைவாய்ப் புள்ளுமன்னன் றானுந்
தூதுசென்ற காரியத்திற் சோர்வுவராதம்மே
யிகலோகம் பரலோகம் போற்றுமிசை பெறுவா
யேழுநெற்கை யொன்றியதா லிதுசகுன நன்றே. (அச)

இதுவுமது - குறுந்தாழிசை.

நன்றுமென்குறி கேளாய் நாளைப்பழனி நகர்க்கோன்
றன்றார்நீபெறத் தருவான் சரதமெண்ணெயு நெல்லுங்
குன்றுநன்னிறக் கலையுங் குடிலைவநிரம்பக் கூழு
மின்றுநீர்வத்தொடு நல்கா யிமயக்குறத்தி யானே. (அரு)

இன்னிசைப்பஃறொடைவெண்பா.

யானே பரமென் றிறுமாக்கின் றூர்பலர்க்குந்
தானேயென் றேங்கித் தவம்புரியுந் தக்கோர்க்கு
மொவ்வோர் சமயத் துடன்பா டுடையார்க்கும்
வெவ்வேள் கணையான் மெலிகின்ற வீணர்க்குஞ்
சொந்தமென நின்றுந் தொடர்ந்தென் றனையாள
வந்தவித மெல்லா மனமறிதல் வம்பாமோ
சாக்கிரத்தி லோர்காற் றவளக் களிற்றில்வந்து
நோக்கி யருளாட்சி நுண்மைநல்கக் கூடாதோ
மானக் கருணை வழக்கறிய மாட்டாத
வீனக் கவிஞ ரிகழ்ச்சியுநான் றுய்ப்பதென்னோ
வெத்தனையோ பல்கா லெனைக்கிளியென் றோதியசொல்
லத்தனையும் பொய்யானு லாரணங்கண் மெய்யாமோ
நீயுரையா மாற்ற நெடுநீர்ப் புவியறிய
வாயுரைக்கு மாகின் மலிநிரையம் வெளவாவோ
வன்ன கருணை யகமறியக் காட்டியபின்
னின்னம்வம்பிற் சோதனைசெய் தீடழிக்கை நீதிகொலோ
வொல்லு நலந்தா னொருவனுற வேண்டலினும்

பல்லுயிர்க்கு மின்பம் பயப்பநத்தல் பாவமதோ
வுன்னையலதிங் கொருதுணையு மின்றிறைவேன்
றன்னை விழையுஞ் சகாவொன்று நல்காயோ
வென்னை யுனதென்றே யீந்திட்டு மேதேதோ
பின்னையுஞ்சின் மாற்றம் பிதற்றும் பிழைபொறுப்பாய்
தேக்குந் தமிழ்ச்சீர்ச் சிறுமுனிவ னுநியரைக்
காக்கும் பழனிமுரு கா. (அகூ)

கட்டளைக்கலித்துறை.

காவேரியாறளித் தும்பர்தங்கோனுயக் காத்தருளு
மாவேழத்தின்பிற் றுணைவாபழனி மலைக்குமரா
பாவேறச்சூட்டுந் தமியேற்கிரங்கப் படாதெனிற்ப
லாவேசத்தொண்டர்க்கும் வேண்டியசீர்நன் கருளலென்னே. (அஎ)

பாண்—அறுசீர்விருத்தம்.

என்னைத்திருவா வினன்குடிக்கோ னிசையப்பகர்ந்தானெனச்சொன்ன
யுன்னைப்போலுந் தொழிற்பாண ருலகிற்பலபே ருள்ளாரோ
மின்னைப்புரையு மிடையார்பால் விடுந்தூதெனப்போய் வரும்பான்மை
தன்னைப்புருட ரிகழ்பாங்குஞ் சகத்தூடறிந்தொல் கிலைநீயே. (அஅ)

இதுவுமது — தாழிசை.

நீயுரைத்த ஞாயநன்று நன்றுபாண வென்றன்மே
னீமொழி னன்குடிக்க ணின்றவேலர் நெஞ்சமா
லாயுனைச்சொ லும்படிக்க னுப்பலுண்மை யாகுமே
லன்றுசெய்த வென்றவத்த ழூக்கிலாமை யங்ஙனே
சேயுடைக்க ரத்தளொன்றி கழ்ந்தநீர்மை கெட்டதோ
செம்பொன்வேண்டு மாதரார்தி ருட்டறிந்து ளார்கொலோ
பாயுமுத்த ரீயமுங்க மழ்ந்திடச்சொ ரிந்தபாற்
பருமுலைச்ச மர்க்கிளைத்த பண்பரல்லர் போலுமே. (அகூ)

மடக்கு - கட்டளைக்கலிப்பா.

போல்வதொன்றுமில்செந்தக ரத்தனே புரைபடாதுயர் செந்தக ரத்தனே
யேல்வைகண்டரு ளம்பிகை மைந்தனே யெயினனுநரற்கம்பிகைமைந்தனே
பால்வனப்பொடிபோர்த்தவி சாகனே பலபன்மாவிகைப்போர்த்தவிசாகனே
கால்வ லிக்கக மூர்முரு கையனே கவின்கு லாம்வய லூர்முருகையனே.(கூ0)

பள்ளுத்தாழிசை.

ஐயமின்றிய ஞானவாசக மறையுங்கருணைக் குமரவே
ளாவினன்குடி வயலினடைக் காகவிறங்குங் கடைசியீர்
பையநாற்றை யெடுக்கிறீருழும் பருவப்பள்ளரைப் பார்க்கிறீர்
பகட்டுஞ்சிமிட்டும் வாய்வக்கணையும் பயின்றுநாழிகை போக்குறீர்

செய்யவகுத்த கூறுநட்டன்றிச் சேரிக்கேகுதன் முடியுமோ
செய்யாளென்கின்ற கிழட்டுப்பள்ளிகைச் சிர்கண்டாயினுந் தேறுவீர்
மையனுடக மாடுதற்கிடம் வயலன்றென்பது மறிகிலீர்
வளைந்த முதுகு நிமிர்ந்துபாராமல் வழக்கம்போனடும் பள்ளீரே. ()

வண்டுவிடுதூது.

நேரிசைவெண்பா.

பள்ள வயற்பழனிப் பண்ணவன்றன் பாற்புறந்தென்
னுள்ளமயன் முற்று முரைத்திடு- றெள்ளரிய
விண்போன் மறையுமிடை மெல்லியனல் லார்வியன்மைக்
கண்போற் குலவும்வண்டு காள். (கூஉ)

கட்டளைக்கலித்துறை.

காளியைக்குத்திக் கதிரோன்பகைவற் கடிந்தபெரு
மீளியைப்போலும் விறலீந்துகாத்தருள் வெண்ணிறத்தோ
ராளியைச்செற்றபுள் ளானுர்குமார வணிக்குறத்தி
கேளியைவேட்ட முருகாபழனிக் கிரித்தெய்வமே. (கூா)

கழிக்கரைப்புலம்பல், நற்றாயிரங்கல்.

எண்சீர்மடக்கு விருத்தம்.

கிரியனைய முலைமடவா ரினமறையு மலரே
கிளர்மதனன் செயுமடவாரினமறையு மலரே
கரியநிறக் கடலலையே கறங்கியநா வாயே
காதலின்னல் காணலையே கறங்கியநா வாயே
சரியணிகைக் குஞ்சரியாள் காந்தன்மய லாலே
சாதமுங்கைக் குஞ்சரியாள் காந்தன்மய லாலே
பரியபகைத் துகளார்வம் படைக்குநா ளென்றே
பழனியிலென் மகளார்வம் படைக்குநா ளென்றே. (கூச)

இதுவுமது — தலைவியிரங்கற்றாழிசை.

என்றுமதியுங் கனலும்விழி யெனக்கொண்டவிர்வார் தரும்புதல்வ
னெழிலார்திருவா வினன்குடியி லியலும்பவனித் திறங்கண்ட
வன்றுதுவக்கி யுனையேபோ லல்லும்பகலு மலைவதன்றி
யாரந்துவர்பூந் துணரெறிந்திட் டடுத்தார்வெருளக் கிடக்கின்றேன்
பொன்றுமதன்செய் பெரும்போரும் புலியேபோலுஞ் சிறுகாலும்
புறத்தார்வசையுங் குயிலன்றிற் புள்ளினொலியும் புலர்த்துகின்ற
நன்றுபொலியத் தகுமாற்ற நவிலற்கிரங்காய் புலிமான
நாளுங்காக்குங் கலையனவே நாற்றிக்கினும்வாழ் நளிர்கடலே.(கூரு)

காலம் - எண்சீர்விருத்தம்.

கடலும்வற்றக் காயுமொரு காலம் விண்ணுங்
காசினிமண் டோயுமொரு காலங் காமர்த்
தடவரைகண் மறையுமொரு காலஞ்சீதத்
தாமரையுங் கருகுமொரு காலமெல்லா
நடனமயிற் பரியூரு முருக வேளை
நான்முகனைப் புடைத்தகுரு நாதன் றன்னை
யிடர்களையும் பழனிமலைத் தலைகாண் கின்றூர்க்
கினியனவே யாகுமென வியம்ப லாமே. (கூ௭)

இதவுமது - பதினன்குசீர்விருத்தம்.

இயம்பியவண்ண முடித்திடத்தக்க வியல்வலிப்புலவர்கடாமு
மெவ்வகையுயிர்க்கு மிரங்குநெஞ்சினரா யேனையர்ச்செறுமுனிவாரு
மயன்றனூல்சொலினு நெறிபிழைத்தொழுகா வரசருமவிர்தனற்கால
மருள்வலிகுறியாக் கவிஞருமுலகிற் காநலஞ்செயவில்புன்றவரும்
வியன்கொண்மூமாரிவறப்பினுங்குடிகள்வெருளுறப்பொருள்கவர்வேந்து
மேவுறுர்க்காலம் வேனிலுங்குளிரு மாதியமிகப்பிறழ்தலுமாஞ்
செயங்கமழ்வடிவேற் படைகொடுமயிலூர் சேவகனுவினன்குடியூர்
தேவர் தம்மூரிற் சிறந்ததென்றமைவேங் தெரிதருகாலநுட்பமிதே.

கலிவிருத்தம்.

காலகன்மங் கடந்தமெஞ்ஞானமே
சாலவேண்டுந் தமியனைத்தள்ளிடேல்
சீலநீடுந் திருப்பழனிக்கிரி
வேலவாவருள் வித்தகவீரனே. (கூஅ)

எழுசீர்வண்ணவிருத்தம்.

தானதத்ததன தானதத்ததன தானதத்ததன தத்தன.

வீரமிக்கவரு ஞானசற்குணரும் வேதவிற்பனரு நத்துமோர்
காரணக்குரவ னுகிநிற்குமதி காரமுற்றகரு ணைப்பிரான்
வாரணக்கொடிவ லாரிமுற்றிகழும் வானவர்க்கிடர்த விர்த்தவேல்
சேரடற்புயவி சாகனத்தனருள் சேய்திருப்பழனி யப்பனே. (கூகூ)

நேரிசைப்பஃறொடைவெண்பா.

அப்பணியுஞ் செஞ்சடையா னுழியுண்ட மாமுனிவ
னொப்பவரே தேறு மொருபொருளு - மெய்ப்பதிக
மொன்றுரைத்துச்சுட்டவெள்ளென்பொள்ளிழைப்பெண்ணுதல்கண்டோன்
றுன்று பெருங்கல்வித் தோற்றமதுங் - குன்று
முழுதுஞ் சிறையறுத்தோன் மொய்ம்பழிய வென்ற

வழுதி பெறுதோள் வலியு — மெழுதரிய
வேதநூற் சிக்கறுத்த வித்தகனை யொத்தசிலர்
போதப் புனையும் புகழ்ப்பேறு — மாதவனைத்
தீயோர் கெடற்காத் திகிரியத ளுன்மறைத்த
மாயோன் முதற்சிலர்கொண் மான்மியமும் — வேயோ
டுறழ்புயத்தாட் கன்னடநாட் டொல்கவென்று பல்லோர்
பிறவியறுத் திட்டமுனி பெட்பு — மறமழிந்த
போதபரா னந்தப் புணரியினிற் போய்முழுகும்
வாதவூ ரண்ணலுற்ற மாவீடும் — வேதனழக்
குட்டித் தளையிட்டோர் குன்றிலடைத் திட்டசிறு
செட்டி பதமே தினநாடி — மட்டில்
புகழார் பழனிப் பொருப்பினிசை போற்றித்
திகழார்வத் தோர்விழையுஞ்சீர். (எ)

---

முற்றிற்று ஆ கவி — அஎஉ.

வேலுமயிலுந்துணை.

உ

## ஒருபாவொருபஃது.

மணிதிகழ் பஃறலை மாசுணஞ் சுமந்த
வணிகிளர் நிலமக ளயர்வொழிந் துவப்ப
வறக்குமாரி வரன்முறைபொழிதரக்
கறக்குமானினங் களிமலிந்துலவத்
தெய்வத்தலந்தொறுஞ் சீர்கனிபொலியச்
சைவப்பனவருஞ் சதுமறைமுனிவரு
மாதியர்மகிழ்வுற வநுதினங்கருதித்
தீதின்மாதவஞ் செய்குநர்ச்சேர்ந்து
நின்னருளெய்தி நெறிப்பிழைக்கொடுங்கோன்
மன்னராதியர்க்கோர் மறலியில்வயங்கி
விழுமியபகவப் பெயர்த்தனிவேதிய
னெழுதுருவியக்கு மெழிலாராதிப்
பெயர்மகள்வயற்றிற் பெய்தமக்க
ளியன்மொழித்துணைக்கொண் டிமையாநாட்டத்
தவர்மகப்புலையு மறும்படிகளைந்து
சிவமகமியாண்டுந் திகழ்தரவிளக்கிக்
கற்குடைப்பிடித்துந் காலிகாத்தோ
னற்குணம்பலவு நன்குதாங்கிப்

பால்வனநீற்றைப் பரப்பும்பான்மை
நால்வரேய்ப்ப நறுந்தமிழ்பொழிந்து
முத்திவாஞ்சை முதிர்ந்தார்பலரொடு
பத்திவாய்ந்த பண்பினர்பழிச்ச
நின்கழற்புகலே நேடுமென்னை
வன்கணர்வசைத்தீ வாட்டத்தகுமோ
கொங்குநாட்டின் குளிர்முகம்புரைய
மங்குல்வாய்ந்த மலைத்திருப்பழனிக்
கோயிலுறைப்பட் குருமணிக்குவட்டின்
மேயிசைபரப்பும் விகிர்தவித்தகனே. (க)

வித்துறழ்சிவத்தின் வியன்குறுமுளையே
யொத்துறுமொருவ னொள்ளிழைக்கவுரி
பால்குடித்தான்ற பண்டிக்களிறே
போல்குகப்பெருமான் புயங்கப்பூண்புனை
டைந்தலைத்தேர்கைப் பரியிவர்ந்துலவுஞ்
சுந்தரச்செவ்வேள் சுடர்வேற்றடக்கைக்
குமரநாயகன் கோழிக்கொடியோ
னமரர்சேகர னவினன்குடிக்கோ
வென்னத்தினமேத் தெடுக்கச்சோம்பா
நன்னலத்தோரே நந்தமராவார்
நான்முகக்கிழவ னவின்றவாய
நூன்முகப்பிணக்கா னுடங்கிவாடார்
சமரசானந்தத் தண்கடற்படிந்திட்
டமரராதிபரால் கார்வமயில்வார்
சித்தியின்பஞ் சிறிதுஞ்சேராப்
பத்தியுஞானமும் பாழெனப்பகர்வார்
கொலையும்புலையு மாதியகொடுந்தொழின்
மலையெனத்திகழ்தல் வானெனமறையு
முன்னரெய்தினு முத்தியிற்புகாஅர்
தன்னதுடலந் தரையினில்விழாஅப்
பேறலதொன்றைப் பெரிதெனமதியார்
றுறவாவுறினு நோற்றுவெல்குநரே. (உ)

வெல்கொடிச்சேவன் மிளிர்திருபுயத்திற்
புல்கொழுமுலைமுற் புரிதவமேலோ
மாத்தடிந்துயர்ந்த வடிவேற்படைச்சி
ரேத்தணிநாமுன் னியறவம்வலிதோ

வாசறுகிரிதோ ரூடுமெம்புயத்தாண்
மாசறக்கருது மனத்துமாண்புயர்வோ
மூன்றுஞ்சரியோ முருக்கலர்குமுதம்
வான்றுவரேய்க்கும் வாய்திறந்துரையா
யிமையாப்பிடிக்கு மேனற்குமிற்கு
முமையாள்பயந்தன் றுதவுமொருவனைக்
கொள்ளைமுதருள் குலாந்திருவருணைக்
கிள்ளையாதியர் கிளத்திசையோனைக்
கடல்குடித்துதவுங் கலசனாதியர்
திடமுறவுணருஞ் சீர்க்குருபரனைக்
காணுறெழுகுங் கவின்றிகழ்சாரற்
றேனாசோலைத் திருவாவினன்குடிக்
குன்றிற்பாவுங் கூர்ப்பினர்குறிப்பி
னின்றினிதாடு நிமலவெண்கொடியே. (௯)

கொடிமரமில்லாக் கோயிரேறமைந்துக்
கடிமதிள்சிகரி யாதியுங்காட்டி
விழவுஞ்சிறப்பு மேன்மேலுயர்த்திப்
பீழமறையாகமப் பண்பெலாம்விளக்கி
மாதவர்கூட்டம் வாரியென்னக்
கோதறுபண்பிற் குலவப்பெருக்கி
யிருபிறப்பாள ரீனமெய்தாப்
பெருமைசான்று பிறங்கப்பேணிப்
பொற்பதுமப்பேர்ப் புனிதவாவி
நற்பலகையினு ணுவலர்ச்சிறப்பித்
திரக்கமின்றி யிகத்தினர்த்துயர்செ
யரக்கவேந்த ரகமுழுதழித்து
வேண்டியவாறே வியன்சித்தாடி
யீண்டியவடியா ரீட்டத்தொடுநின்
பெய்கழற்றிருத்தாட் பெயராதடைந்துற்
றுய்கதிவேட்ட வுளத்தினேன்பாற்
கனவினுநனவினுங் காட்டுங்கருணை
தினகரனொளியிற் றிகழாதாயிற்
கிள்ளையென்றெற் கிளத்துமாற்றமும்
வெள்ளைவாணியும் விரும்பியற்பெருஞ்சீ
ராதாத்திருவ ரறியுவர்நா
ணீதரலாக நிகழ்த்தியதுணிவு
மன்னூர்கோவில் வயிணவப்பனவ

ரின்றொழிவா னியன்றகூத்து
மன்னபிறவு மடியனேன்மனப்
பின்னபாவனையெனும் பெட்பினருயர்வார்
நின்செயலன்றி நெடுநீர்ப்பாரி
லென்செயலுளவென் றிறுமாந்தழிவேன்
கண்டாய்பழனிக் கனமலைக்காவற்
றண்டாயுதக்கைச் சகுணதேசிகனே. (ச)

தேசிக்கனியோ செம்பொற்சிமிழோ
வாசிக்கிளியோன் மகுடமோமலையோ
வென்னப்பலவா றிளகுகைமடவார்
வன்னத்துணைமுலை வனப்பெடுத்தோதி
மற்றையவுறுப்பின் வளனும்பழிச்சிப்
பொற்றையினுடலம் பொலியவுண்டுடுத்த
லல்லதுபயனின் றுமெனச்செருக்குங்
கல்லல்வெம்புலவர் கணத்தெனைச்சேரே
லருள்விளையாட லாயிரமுஞற்றி
யிருண்மலமறநீத் தின்னும்பிறவா
வீடுபுக்கு மெய்ப்புகழ்பொறுக்கும்
பீடுசான்முனிவருட் பிறங்கச்சேர்ப்பாய்
கொம்புடைக்களிறுங் குளிறுபிடியு
மொய்ம்புறுகலவி முறைமுறையயினுஞ்
சாரற்குறிஞ்சித் தடவரைப்பழனியில்
வீரவேலும் விறற்பெருந்தண்டு
மண்டுவெண்ணீறும் வான்கீளுடையுங்
கொண்டுநின்றுடுங் குருபரக்குகனே. (ரு)

குருவேபரமெனக் கூறத்தேறுந்
திருவார்சமரசச் சிலர்தமையுஞ்
சேவல்கூவிற் றினந்தினமுதித்துத்
தாவறமிளிருந் தபனச்சோதி
யலதொருதுணையின் றுமெனுமவரையு
நிலவணிவேணி நெடுங்கிரித்தடக்கைக்
கயிலைநாதற் கருதுவாரையு
மயிலுறழ்சாயன் மலைமகள்பதமே
நந்துணையென்னுஞ் சாத்தேயரையு
மைந்துறுதடந்தோண் மாயனன்பரையு
முண்டிமிக்கமைப்பா ரூழ்வினைகளையுங்

திண்டிறற்களிற்றின் சீர்பகர்வாரையு
நின்னடித்தொழும்ப ரென்றேநினைந்திட்
டின்னலோருயிர்க்கு மியற்றுகில்லா
ரெம்மதத்தோர்க ளெனினுமவர்சொற்
சம்மதமென்னுந் தகையுமெய்தி
யாறெழுத்துரைக்கு மடியேன்விழையும்
பேறெளிதுதவாப் பெட்புனக்கழகோ
குன்றுதோறுங் கூத்துமிக்காற்றி
யென்றும்பழனி யெழின்மலைத்தலைநின்
றுயிரிழைவனிதைய ரன்புங்கைக்கொடு
பாயிரப்புலவர் பலர்துதிசூடிச்
சித்தர்பற்பலர்க்கோர் தேசிகனாகிச்
சுத்ததத்துவத்தோர்த் தோய்தருசேயே. (௬)

சேயபவளத் திருவுருத்திகழ
மாயனன்ன மயிற்பரிமுதுகிற்
சத்திவேல்வலன் றயங்கத்தாங்கி
முத்திவேட்கை முனிவரர்பலரொடு
நனவிற்றோன்றிடி னன்றிப்பன்னாள்
கனவிற்பகர்தரு காதைமெய்ப்படுமோ
சமையவாதத் தறுகட்பாழ்ங்குணத்
தமையுநாள்செயு மாடலளவு
மிந்நாள்செய்கிலை யெங்ஙனமகிழ்வேன்
முன்னுனெறியுநின் மொய்ம்பெனல்படிறே
வாயின்மற்றோ ரடற்பெருங்கடவு
ணீயிவண்டளர நிறுத்துகின்றானோ
வல்லதென்வினைப்பேய்க் கஞ்சுகின்றாயோ
மல்லலம் பழனி மலைத்திருக்கோயி
னிலைஇயகோல நினைவார்நெஞ்சத்
தலைவிளையாடுந் தண்டபாணியனே. (௭)

பாணியின்மானொடு பரசுமேந்தி
வேணியிற்புனலொடு விதுவணிபெருமான்
முதலியபற்பல மூர்த்தியுருவு
மிதமுறுமென்மனத் தியங்கச்செயுநீ
புற்கறித்துண்பவும் பொன்றக்கொன்றுண்
டற்கடல்புரையு மகத்துடனலைவார்
நால்வகைப்படைக்கு நமனாலமிவ்

வேல்லைகண்டுதவா திருக்கத்தகுமோ
வீரர்பற்பலரும் வியக்கும்விதிர்வேற்
காரனென்றுன்னைக் கழறல்பொய்ப்புகழோ
வென்மனத்துன்போ லியங்கியெண்ணி
னன்மொழிபகர்ந்த நாதன்வேறுளனோ
வலைகடலுடுத்தா ளழுதழுதலமந்
துலைதருபெருந்தீங் குணர்கிலைகொல்லோ
வேனமாய் மிரும்புவிபுரந்தோன்
மானமின்றி வார்கடற்றுயிறீங்
கொழிக்கவல்லா னொருவனிலனோ
வழிக்குநாள்வந் தணைந்ததுகொல்லோ
வேதாகமங்கள் விதித்தவண்ண
மியாதாயினுமீண் டியைதரக்காட்டாய்
கருணைப்பெருஞ்சீர் கருதியறியா
மருண்முற்றியபுன் மனத்துமாந்தர்
சிலர்க்கும்வேண்டிய சீரருள்செய்து
நிலத்துவிண்ணூர் நேரிழைபனையார்
கலவியும்வேட்டுக் கருங்கட்குறத்தி
புலவியிலயர்தற் போற்றும்புலவோர்
வேண்டுவயாவும் விரைந்தருள்செய்து
கூண்டுளதொண்டர் குழாந்தொறுங்குருவாய்த்
தொன்மைப்பழனித் துகடீர்பொருப்பில்
வன்மைசான்ற வான்றடியூன்றி
யெழுபரித்தேர்போ மெல்லைநோக்கு
முழுதுணர்புலமை முருகபுங்கவனே. (அ)

முருகார்கடம்பு மொய்ம்மலிகுரவு
மருகாச்செம்மை யமைதருகுல்லையும்
போல்வவென்றென் புன்சொற்புகழ்ந்தா
யால்வயிற்குரவற் கருள்பொருள்வேட்டேன்
கொள்ளைவண்டமிழ்ச்சீர் குலாந்திருவருணைக்
கிள்ளைநீயென்றுப் கெடாவிசைவிழைந்தேன்
வானினின்றிழிந்தோர் மாற்றஞ்சொற்று
யானியின்முதல்வீ டடைதலுங்குறித்தே
னென்மேற்பிழையோ வெனையுமீண்டசைக்கு
நின்மேற்பிழையோ நெடிதுணர்ந்துரைப்பா
யாலிக்கன்மஞ்ஞ யணிமுகில்பொழிதலின்
வாலிக்குரங்குறழ் வானரமனந்தங்
குளிர்கனியெய்திக் குருகிக்கோடுங்

தளிர்மலிசோலைத் தடங்குவடெங்கும்
வெள்ளிவண்சிலம்பன் மேயமனையும்
வள்ளியுமோகினி மாதும்புரையுங்
கலபமயிலினங் களிநடம்பயில்சீர்
குலவுதென்பழனிக் குன்றுடைக்கோவே. (கூ)

கோவைவாயிதழ்க் குறமகளதுவோ
காவையாள்வான் கன்னிகைதனதோ
விசையனெடுமர்புரி வேட்டுவன்றனமோ
திசைமுழுதருளுமை செங்கைச்சிறப்போ
மாயன்றனதோ வழுவைமாமுகத்
தூயன்றனதோ சுரகணத்தினதோ
வாழ்கடற்குடித்திட் டன்றுவிட்டான்முதற்
சூழ்கனமுனிவோர் சொந்தப்பொருளோ
வாறெழுத்துரைப்பா ரனைவர்தம்பொதுவோ
வேறெழுத்துரைப்பார் விருப்புமாவதுவோ
பாமலிதொல்சீர்ப் பழனிமாமலைமேற்
றேமறவிளைக்குஞ் சுப்பிரமணியே. (க0)

முற்றிற்று.
ஆ கவி - அகஉ.
வேலுமயிலுந்துணை.

---

## நவமணிமாலை.

வெண்பா.

குருமணியோ வுள்ளனவாங் குன்றமுற்றுங் கொண்ட
திருமணியோ மாதேவன் செங்கண் - டருமணியோ
வீழ்சுப் பிரமாவை வென்றமணி யோபழனி
வாழ்சுப் பிரமா மணி. (க)

கட்டளைக்கலித்துறை.

மணிகொண்ட பாம்பணை மேற்றுயின்மாலு மறைப்பெருநாற்
றிணிகொண்டநான்முகப் புத்தேளுமெச்சுந் திறமருள்வாய்
பணிகொண்டபச்சை மயிற்பரியூர்ந்து பழனிமலை
யணிகொண்டநாவினர் பாற்சென்றுநாளு மவிரண்ணலே. (உ)

வெண்டளைக்கலிப்பா.

அண்ண னிடமோ ரருமாங் கனிநிமித்தம்
விண்ணவர்க ளஞ்சும் வினைவிளைத்தாய் வேடமகள்
கிண்ணமுலை வேட்டவர்நாள் கெஞ்சியமைத் திட்டதென்றோ
பண்ணளித்தண் சோலைப் பழனிமலைப் பாவலனே. (ங)

கொச்சகக்கலிப்பா.

பாவலவர்க் கெளியானைப் பன்னிருதோள் படைத்தானைச்
சேவலங்கே தனத்தானைச் சிகிப்பரியூர் சேவகனை
மூவலில்சீர்ப் பழனிமலை முருகோனைப் பரவாதார்
யாவர்களே யானாலு மெமக்கினிய ராகாரே. (ச)

கலிநிலைத்துறை.

ஆகாரமின்றித் தவஞ்செய்யுமுனிவீ ரணிப்பாவைமார்
போகாந்தகாரப் புணர்ப்பெய்தினாலும் புரக்கும்பிரான்
சோகார்வமெய்தப் பொருஞ்சத்திவைவே லுெடுந்தோளனு
மாகாதிபகர்க்கின்ப முதவுநதென்வயலூர் மலைக்காரனே. (௫)

கட்டளைக்கலிப்பா.

காரணக்குரு வாவருபேரருட் கந்தநாதன் கடற்றுயில்கூர்திரு
நாரணற்கினி யோன்பழனாபுரி நாகமீது நடஞ்செயுநாயகன்
வாரணக்கொடி யேசெயமென்பவர் மாரனுக்குமறலிக்கும்வாரிசத்
தாரணற்குமஞ்சாதளிப்பானெனற்கைந்துமாமுகத்தானொருசாட்சியே.

எழுசீர்விருத்தம்.

சாட்சியாம்பர தத்துவப்பொருளதே தண்டொருகரத்தேந்தி
மாட்சியார்தரு பழனிமாமலைத்தலை வயங்குமாறுணராதார்
காட்சியாபிரம் பெறினுமெண்ணறுபல களிநலம்படைத்தாலு
மீட்சிதோய்பவ சாகரங்கடந்தத னெடுங்கரைசேராரே. (எ)

ஆசிரியப்பா.

சேரமான்செய் திருப்பணிக்கோயிற்
சீரவிர்தொன்மைத் திருவாவினன்குடிக்
குன்றிலொருவன் குருவடிவாகி
யன்றினிதாண்ட வதிசயமிகவுள
வன்னவனுள்ள மறியுமவற்றி
லென்னதுநெஞ்ச மேன்றமட்டறியும்
யோகசாதனத்தா லுலகமுற்றுணருஞ்
சேகரமுனிவோர் சிந்தையுந்தெரியும்
பூவலயத்தோர் புகல்வலசயோழிவான்
யாவருமுணர்ந்தேத் திசைவிழைந்தனனே. (அ)

சந்தவிருத்தம்.

தனனதந்தன தனதன தனனா.

உளமுணர்ந்தபடி யறுபவமின்றொ-
வுலகிடஞ்சமுது மெனையொருபொருளா-
வுளவனும்பொருவில் வழுதியுநனிபரா

வழிபடு பெருமை வரவு நல்புரி வா
யிளகுசெந் தினைபல் பறவைகள்கவரா
திதணிடங்கலெறி கவணுடனுறைவாள்
களவினென் றிடினு மகிழ்வுறு முருகா
கவின்மிகுப் பழனி மலைவளர் குகனே. (கூ)

வெண்பா.

வளங்கொண்ட தென்பழனி மாமலையோ டன்ப
ருளங்கொண்டு வாழு மொருவன் -- களங்கொண்ட
நஞ்சத்தார் மைந்தனவ னல்ல நட்பே றுற்றுரே
யஞ்சத்தான் கைத்தலத்தெய் தார். (க0)

கட்டளைக்கலித்துறை.

ஆர்பூத்தசென்னிப் பிரான்றந்தபால னருவியந்தெண்
ணீர்பூத்தகுன்றுடைத் தென்பழனுபுரி நின்றசெவ்வேள்
கூர்பூத்தவேற்படைக் கேமலர்தூவிக்கை கூப்புமென்னைப்
பார்பூத்தவாழ்வுடை யார்நிந்தைகூறப் படுத்தலென்னே. (கக)

வெண்டளைக்கலிப்பா.

என்னேயு நின்மீ திருக்கு மளவறிந்து
மின்னேயோர் சற்று மிரங்குகிலா யென்செய்வேன்
பொன்னேரு நல்லார் புகழ்ந்தாடும் பூம்பழனி
மன்னே கலாப மயில்வா கனத்தானே. (கஉ)

சொச்சகக்கலிப்பா.

கனங்குழையார் மயலுலையாற் கடைப்பட்டுக் கழிவேனைத்
தினங்கருணைக் கடலாட்டத் திருவுளஞ்சற் றிசையாயோ
மனங்களிப்பார் பலர்சூழ மலைப்பழனித் தலைமேவி
யனங்கவேள் புகழ்ந்தேங்கு மாடல்செயு மயில்வேளே. (கரு)

கலிநிலைத்துறை.

அயில்வேலெடுத்தம்பொன் மயிலேறியென்னெஞ் சகத்தெய்தியே
வெயின்மேயபுழுவிற் றுடிக்கச்செய்வினைநோயின் வேர்கெல்லுவாய்
கயிலாயமலைநாதர் புதல்வாநல்வயலூர்க் கருஞ்சோலைசூழ்
சயிலாதிபாகீரன் முதலோர்தொடுக்குந் தமிழ்ச்செல்வனே. (கச)

கட்டளைக்கலிப்பா.

செல்வர்வாயிற் கடைப்படிதோறுநான் சென்றலைந்து இயங்காதவாறொரு
நல்வரங்கொடுத் தாண்டுனைநாடோறு நம்புமன்பர் நடுப்பெறச்சேர்த்திடாய்
கல்வரைக்குறிஞ் சிப்பழனுபுரிக் கந்தநாயக னேகருணாகரச்
சொல்வரோதயச் சற்குருதேசிகா துங்கவேற்படைத் தோளலங்காரனே. ()

எழுசீர்விருத்தம்.

காரவாவுதண் பொழிலுடைப்பழனியூர்க் கனகிரித்தலைநாளும்
வீரவேலொடு தண்டுகொண்டாடிய விமலவித்தகவேளே
மாரவேள்படைச் சமரும்வெந்தானவர் வலியசேனையின்போருந்
தீரவெல்புகழ் வேட்டுளேற்குனதருட் சித்திமுற்றருள்வாயே. (கசு)

ஆசிரியப்பா.

வாயசமுகைத்த வன்கோட்பகையு
மாயபுள்ளுயர்த்தா ளளிக்கும்வெந்துயருங்
கொன்றலதருந்தாக் கொடுங்கோன்மன்னர்
புன்றகைக்கருங்குடைப் பொல்லாவெப்பமு
மாதியதீங்குமுற் றழியமாற்றித்
தீதில்விண்டலத்தார் தேசிகனுக்குஞ்
செந்தகைக்கமலத் திருமகளுறவு
மைந்தனைத்தேர்க்கால் வயினிடுமவனேர்
வேந்தன்றன்னது வெண்குடைநிழன்முத
லாந்தகைபிறவு மமைத்தெமைப்புரப்பாய்
சூரனுதியர் துணிவறத்துணித்து
நாரணன்முதலோர் நலம்பெறப்புரந்து
தென்பழனுபுரிச் சிகரித்தலைநின்
றன்பர்வேட்டளவா ருடமற்புதனே. (கஎ)

சந்தவிருத்தம்.

தத்ததத்ததன தந்தத்தனனு.

அற்புதக்கருணை பொங்கித்தினமா
டத்தனுக்கருள்செ யுங்கட்புதல்வா
நற்புதற்புரையு மின்சொற்புலவோர்
நத்தெழிற்பழனி யின்கட்டிகழ்வாய்
புற்புதத்தைநிகர் கொங்கைக்கொடியார்
பொற்பைநித்தமுநி னைந்திட்டயர்வேன்
விற்புதக்கமுடன் வெண்பொற்பொடிதோய்
வித்தகத்தரைவி ரும்பப்புரியே. (கஅ)

வெண்பா.

விரும்பப் பனுவல்பகர் வீறுப்புற் றூர்க்கும்
பெரும்பக் குவமருளைப் பேறே — கரும்பு
மலிபழனிச் செவ்வேள் வரத்தா லொருவன்
புலியுகைத்துந் தோய்ந்தான் புகழ்." (கக)

கட்டளைக்கலித்துறை.

புகல்பக்குவங்க ளனைத்தினுமேன்மை புகழ்ப்பழனி
யிகல்வடிவேலனைப் போற்றிசைத்தோர்சிற் றெறும்புங்கொல்லா
தகல்கருணாலய ராய்க்கொலைத்தியர்க்கொ லார்வநச்சிப்
பகலிரவாயெழுத் தோராறுமன்பிற் பகர்தன்மையே. (உ0)

வெண்டளைக்கலிப்பா.

தன்மஞ் செயலுந் தவமென் றுணராமற்
கன்மமெனும் பொல்லார் கருத்தழியக் காணேனே
வென்மனத்து ளங்கா ளியம்பியபே றீந்தருள்வாய்
சென்ம மொழிக்குந் திருப்பழனித் தேசிகனே. (உக)

கொச்சகக்கலிப்பா.

தேசிகர்க்கெல் லாந்தனருட் டிவலையிடு மரசாயும்
பாசியணி குறப்பேதை பதந்தொழவு நாணுதான்
வாசியென மயிலூர்ந்து மலைதொறும்போய் நடமாடி
மாசில்பெரி யோர்பரவ வயலூர்க்குன் றமர்வானே. (உஉ)

கலிநிலைத்துறை.

வானுடர்மெச்சுந்தென் வயலூர்மலைக்கோயில் வளர்வேலனை
நானுகநம்பித் தொழப்பெற்றிலேன்வந்து நானுவிதத்
தானுதவினையாடல் செய்திட்டிழுத்துத்த னருகுய்த்துநற்
றேனுர்தமிழ்ப்பாடல் வனையச்செய்கின்றான்மெய் சிவனுனையே. (உங)

கட்டளைக்கலிப்பா.

சிவனுமாயனு நான்முகவேதனுந் தேவர்யாவருஞ் சீரருட்டேசிக
ரெவருநீயென நம்புமென் றன்னைநன்கேற்றுக்கொள்ளிவிளப்பமுண்டாகுமோ
தவளநீறுடன் முற்றணிவார்மனச் சஞ்சலப்பிணி யுந்தவிராய்கொலோ
குவளைநீர்வயற் றென்பழனுபுரிக் குன்றிலாடுங் குமாரகெம்பிரனே. (உச)

எழுசீர்விருத்தம்.

பிரமங்குமை தரநுகர்ந்தருந்தமிழ் பெயுமுனியினுஞ்சீர்த்த
வீரநல்கினை யருட்செயலனுத்துணை விளக்குகின்றிலையந்தோ
பாரணங்கழும் பெருந்துயர்சகிக்கிலேன் பழனியம்பதிக்குன்றில்
வாரணக்கொடி திறவியகுருபரா மரகதமயிலோனே. (உரு)

ஆசிரியப்பா.

மயின்மிசையொருக்கால் வடிவேலேந்திக்
குயில்புரைகானக் குறத்திதன்னொடு
கனவிற்றோன்றுபு காந்தசொற்பகர்ந்தாய்
நனவிற்றோன்றென நனிபிரக்கின்றேன்

மிடியொடுநோ புமவெருட்டுமாழ்ந்துய
ரடியொடுகெடுமா றருவுநல்கிலை
யென்செயலனுவு மின்றியாண்டு
நின்செயலொன்றே நிறைந்தமையுணர்ந்து
மாசைப்பெருவலை யகப்படுமென்னை
யோசைக்கடல்சூ ழுலகுயப்புரப்பாய்
மங்கலமபொலியும் வயலூர்மலையிற்
செங்கண்மால்பரவத் திகழ்தருதேவே. (உசு)

சந்தவிருத்தம்.

தானதத்ததன தத்ததன தத்தனு.

தேவருற்றநக ரத்தழல்கொளுத்துமோர்
 தீயனைச்செறும டற்புயனெனக்கநா
ணீவருத்தனவெ னச்சொலியசொற்களா
 னேயமிக்குவகை பெற்றதுபிழைக்குமோ
வாயசத்தியம திற்றவறடுக்குமே
 லாரணத்தொகைவி தித்தவிதிநிற்குமோ
பாயடற்புலியு கைத்தவனிறுத்துசீர்
 பாவுநற்பழனி வெற்பின்முருகப்பனே. (உஎ)

வெண்பா.

அப்பன் பணிய வருண்ஞான வார்த்தையொன்று
செப்பருமைப் பாலன்வளர் சீர்வயலூர் — முப்பழச்சா
றன்ன தமிழா லரிய கவியனந்தம்
பன்னவல்லார் வேண்டும் பதி. (உஅ)

கட்டளைக்கலித்துறை.

பதிதருமெள்ளப் பரதவித்தேங்கெனைப் பாருலகி
லதிரதமாரத ரும்புகழ்பேறளித் தாண்டருள்வாய்
ததியறியாரொத் திருந்தாய்நொந்தேன்முதற் றூரகத்தால்
விதியழக்குட்டுமெந் தாய்பழனுபுரி வேலவனே. (உகு)

வெண்டளைக்கலிப்பா.

வேலணைக்குந் திண்டோள் விசாகா விமலர்விழிப்
பாலனென வந்தாய் பழனிமலைப் பண்ணவனே
ஞாலமுய்கை வேட்டு நலியுமென்னை யாளாயேற்
சாலவித்தைச் சித்தர் தமக்கருள லென்னுமே. (௩0)

கொச்சகக்கலிப்பா.

ஆமென்று மல்லவென்று மறையார்தார் மனைதோறும்
போமென்னை யர்ண்டானின் புகழ்க்கடற்கோ ரிழிவாமோ

தேமென்சொல் வியாடர் திருப்பழனி முருகாமுன்
வேமென்பிற் பெண்ணமைத்தோன் மைந்தகலை யுடையானே.(

கலிநிலைத்துறை.

ஆனே றுமையற்கு மலைபாசலத்தற்கு மன்றேறுசொற்
றானேவிழைந்தேனி வாதிக்குவாடத் தகாதையகோ
வானேறெனத்தக்க சிறையோதையொடுகூவும் வல்வாரணக்
கோனே தண்வயலூர் மலைக்கோயிலிடைமேவு குமரேசனே. (௯௨)

கட்டளைக்கலிப்பா.

குமரநாயகன் றென்பழனுபுரிக் குன்றினின்ற குருபரன்கோதில்சீ
சமரசேனைக் கொருபெருங்காவல னுடல்வேட்டவ னாரேனுமன்னவர்
நமரவர்க்கென் றுமெண்வகைச்சித்தியுஞானவாழ்க்கையு[illegible]ர்
சமரவாட்படை வீரர்க்குமஞ்சுபுதம்மைநாடித் தயங்குகின்றோர்களே.

எழுசீர்விருத்தம்.

ஓராமுன்னுளத் துள்ளவாறுணர்ந்தன னுடனுமப்பெறல்வேட்ட
கீரனுதியர்ப் புரந்தனைசதுமறை யளத்தியவெறியாறும்
பாரகத்தினிற் றிகழ்தரவிழையுநான் பரதவித்திடக்கண்டாய்
தீரர்சூழ்பழ னுபுரிக்குருபரா சிறிதருள்புரிவாயே. (௯௪)

ஆசிரியப்பா.

புரிதருகோட்டுப் பொருப்பேயெனமுன்
னெரிதருதகரினு மென்மனங்கொடிதன்
றானவாவொன்று மொருவுதில்லாக்
கானவரூரினுங் கடையதுமன்று
செல்லினம்பொதிந்து திசைதொறுமவிருங்
கல்லினத்தினிலுங் கடிதுமன்று
மின்னேவந்தென் னிதயமத்தியிற்
பொன்னேர்மயிலிற் பொலிந்துதோன்றி
வேண்டியவாறே விளையாட்டருளிப்
பாண்டிநன்னாடும் பரவுசீர்சூட்டா
யெல்லாவுயிரு மியன்மகாரெனக்கொடு
கொல்லாவிரதங் குறிக்கொள்பேரருளு
மாயிரத்தெண்மாற் றவிர்தருகனகமு
மாயிருஞால வயிற்செய்வல்லபமுங்
கொழுநனையலர்ந்த கடப்புநறைவருந்
தழுவுறவிழைதரத் தக்கவிப்பு
மின்னுமோர்தா[illegible]ருணர்த்
துன்னுறுதாச் சூழ்ப[illegible]

தொண்டர்ப்பற்பலர்க்குந் தொகுத்தருள்பழனித்
தண்டபாணியனுந் தனிப்புலவோனே. (கடு)

சந்தவிருத்தம்.

தனனதந்ததன தனதனதனனு.

புலவனென்றபெயர் மொழிதருகனிவாய்
பொலிதருங்குமர குருபரமுருகா
கலசபுங்கவனொ டரனுணர்பொருளே
கழறியம்பர மயிலவுமுன்விடுவாய்
தலமனந்தமுமொல் கியபழனியிலே
தறியல்வெந்தகயல் களுமுயவருள்வாய்
திலகசுந்தரமெ லியர்படைவலியே
செயமெனுஞ்சிலரை வெலும்வகைநவலே. (கசு)

வெண்பா.

நூவலரிய பேரின்ப நோக்கரிய போதஞ்
சிவனடைந்த மெஞ்ஞானச் செல்வந் — தவமுனிவர்
கூட்ட மலிபழனிக் குன்றமிசை நின்றவிரு
தோட்டலைவன் பூந்தாட் டுகள். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

டீர்நல்லுண்டிக ளாயிரத்தோடெண்புந் தோலுந்துய்க்கு
டீர்பழனிக் குகவேளை நாடி யருளினராய்த்
உயென்பார்க்கன்றி நல்காருறவைத் தணந்துவெள்ளைப்
உனமெய்தவென் றூனைச்செற்றூனைப் பழிச்சுமினே. (கஅ)

வெண்டளைக்கலிப்பா.

மின்னையார் மாலால் வெதும்பும் வினையேனை
நின்னடித்தொண் டாளர் நெறியிலுய்க்க வல்லையன்றோ
மன்னறிஞர் போற்றும் வயலூர் மலையாண்டு
பன்னகந்துய்த் தாமம் பசியமயி லூர்வானே. (கசு)

கொச்சகக்கலிப்பா.

ஊரனந்தம் பேரனந்த முறவனந்த மெனல்கேட்டுஞ்
சீரனந்தம் விழைந்தேங்கித் தியங்குமெனைத் திருத்தாயோ
மாரனந்தஞ் செயும்பெம்மான் மகவாய்த்தென் பழனிவெற்பி
வீரனந்தம் புணர்ந்தப்பா லிர்க்குணமு மாவானே. (௨0)

கலிவிருத்துறை.

ஆவாகனத்தாலு மைப்பூசைசெய்திட் டணிச்செந்தமிழ்ப்
பாவால்வழுத்தித் தவிக்கின்றவென்னைப் பரிந்தாள்கிலாய்

பூவாளியானுங் களிக்குந்தென்வயலூர்ப் பொருப்புற்றவேற்
றேவாமுனூற்போகன் முதலோரையாட்கொண்ட திறமென்னையே. ()

கட்டளைக்கலிப்பா.

என்னைநின்னடித்தொண்டனென்றியாவருமேத்துசீர்விழைந்தேங்குகின்றே
னெனக், கன்னையாய்த்தந்தையாய்க்குருவாய்த்தொடர்ந்தாண்டமெய்யுமசத்
தியமாகுமோ, பொன்னைமார்பிற்புனைந்தவனும்பர்பாற்போற்றுநின்புகழ்போற்
றொலிந்தோங்கெழிற்,றென்னைசூழ்பழனுபுரிக்குன்றில்வாழ்தெய்வமானசிவகுருநாதனே

எழுசீர்விருத்தம்.

நாததத்துவக் கழல்புனைந்துளபல நகந்தொறுநடமாடும்
பாதமென்விழிக் கணிந்தபின்றலைமிசை பரித்தமெய்திகழாதோ
போதன்வாய்விடப் புடைத்தடித்தருந்தளை பூட்டியபுகழ்போற்றுஞ்
சூதனன்னவர் பலர்வளர்பழனியூர் சுகமுறப்புரப்பானே. (சகூ)

ஆசிரியப்பா.

புரந்தரன்மகளும் புனத்துப்பூவையு
நிரந்தரம்புணரு நிமலவேளைப்
பற்பலதலத்தொறும் பாடிப்பணிந்து
மற்பமுமெய்யரு ளடைந்திலனந்தோ
வத்தவமிகையா லாவினன்குடியிற்
சித்தர்தங்கோவாத் திகழ்தருகோலங்
கருதுமாண்புற்றேன் கனவிற்பலகால்
விருதுநல்குதுமென விளம்பியுமுள்ளா
ளுயினுமுள்ளத் தருந்துயர்தவிர்ந்து
மாயிருங்களிச்சீர் வரக்காண்கில்லே
னனவிலன்று னடம்புரிமயிலிற்
றினகரனுதியர் தெரிதரவரினுஞ்
சித்தியுமுத்தியுந் தெண்டனிட்டென்பாற்
பத்திசெய்குநர்க்கியான் பரிந்தருள்பான்மை
யளவுமெய்திடி னன்றிமகிழ்வேன்
றளவமென்மூரற் றவளவோதிமமே. (சஅ)

சந்தவிருத்தம்.

தானதத்ததன தத்ததனதானனு.

ஓதிமப்பரியு டைப்பிரமதேவனு
லூறுபட்டவிதி யுற்றதலைமீதிலே
நீதிருச்சரணம் வைத்கிலதுபோமெனு
நேயமிக்கனினி செப்புல்படிருகுமோ

வாதிமத்திமுடி வற்றபொருளோதும்வா
யாறுடைக்குருப ரக்குமரநாயகா
சோதிமுற்றுமயி ரூட்டபுயவேடுவா
சோலைசுற்றுபழ னிக்கிரிவிசாகனே. (௪௫)

### வெண்பா.

சாகந்தொன் றுண்டு தழல்வளர்க்குந் தன்மையினர்
மோகங் கொளுங்ககன மொய்குழலார் — போகமிந்தப்
பாரிலன்ப ரெய்திடவும் பண்ணும் பழனிவெற்பிற்
சீரியவே லேந்திநிற்குஞ் சேய். (௪௬)

### கட்டளைக்கலித்துறை.

சேயாய்ச்சரவண வாவியிற்றோன்றித் தினைப்புனத்தி
லாயாசமீறுங் கிழக்கோலங்காட்டி யணிக்குறத்தி
வாயாம்பற்றேனுண வேட்டுக்குமரன் வடிவுங்கொண்டோன்
மாயாந்தகாரந் தவிர்க்கும்பழனி மலைக்கள்வனே. (௪௭)

### வெண்டளைக்கலிப்பா.

கள்வ னெனவிகழுங் காழ்நகர்ப் பார்ப்பனச்சே
யுள்வவெலா நல்கு மொருவன்மக னீயன்றோ
புள்வருக்க மார்க்கும் பொழில்சூழ் பழனிமலை
கொள்வடிவே லப்பா குறித்தெனைக்கைக் கொண்டருளே. (௪௮)

### கொச்சகக்கலிப்பா.

கொண்டல்வரு தென்பழனிக் குவட்டில்வளர் கோமானைப்
புண்டரிகக் கண்ணெடுமால் புகழ்ந்தோதும் புயத்தானைத்
தண்டமிழாற் றுதிகூறித் தவமுயலத் தகுமேலோ
ரண்டர்பிரான் பெருவாழ்வை யுனுத்துணையும் விழையாரே. (௪௯)

### கலிவிருத்தம்.

ஆராதனஞ்செய் தெழுத்தீறுமன்பா லறைந்தோர்களைச்
சோராமலீனத் தனத்தோருண்மாழ்கித் திகைத்தேனையோ
பாராதியுலகங்கள் பரவுஞ்சிறப்புற்ற பழனபுரிக்
காராவைவேல்வேற்றி வீராவெனவிர்வந்து களிநல்கிடே. (௫0)

### கட்டளைக்கலிப்பா.

நல்லதெய்வம் பழனபுரித்திரு நாகமீது நடிப்பதென்றியாவருஞ் [illegible] தீ
சொல்லல்வேட்டுத்தவிப்பேனுக்குன்பத்தொண்டர்சூழ்பெருந்தோற்றமென்றிவையோ
வில்லறத்துந் துறவறத்துங்[illegible] தேங்கவிட்டனை யீதெப்பொருட்டோ
மல்லலங்கடம் பாரமுஞ்செக்[illegible] தோள்புனைவாரணக்காரனே.

எழுசீர்விருத்தம்.

வாரணாசியூர்க் கேகெனப்பகர்ந்தசொன் மறுத்தபினென்க்கான
வீரமார்வர மளித்தனையந்தவா றியக்குநாளென்னாளோ
காரவாம்பொழிற் பழனிமாமலைத்தனிக் காவலனெனவாழ்ந்தும்
பூரவாகனத் தணங்குவப்புறுமொழி புகன்முழுப்புலவோனே. (௯உ)

ஆசிரியப்பா.

புலவுணுங்குணுங்கர் புன்குலமடநீழ
னிலமகள்வருந்த நெடுநாளவெதுப்பற்
கண்டுநோவார் கணத்துறச்சேர்த்திலை
மண்டபஞ்சூறுயர் வளர்த்தும்வாட்டினை
யுலகையுமறியா வுவகைப்பொய்த்தவர்
குலமுழுதிகழுங் கொடிதுங்காட்டினை
நினையலதொருதுணை நெஞ்சிற்கொண்டிலன்
வினைவழிநடத்தி வெருட்டவேண்டா
மன்றுமரத்திட்ட வருண்மொழிப்படியே
யின்றுதொட்டின்னே யியற்றல்வேண்டுங்
காவிபகநட் கருங்குறமகளிர
மேவியோலும வியனிதண்கவின்ற
பைந்தினைக்கொல்லை பலநிகழ்சாரன்
மந்தியாடு மரமலிசூழற்
றடவரைப்பழனியிற் சார்ந்ததொண்ட
ரிடரறக்களையு மொஞ்கவேலிறையே. (௯௩)

சந்தவிருத்தம்.

தனனதன தனனதன தந்ததன தானா.

இறையளவுநின்னுரிமை யின்றியவரேபோ
லிடர்படுமெனுண்மையறி கின்றிலைகொன்மேனா
ளறையுமொழிவண்மைமுழு தும்பழுதுபோமே
லசுரர்சூழுவிண்ணவரை வென்றுமகிழாதோ
கறைதவிருமெண்ணமுறு தொண்டாநுகூலா
கலபமயிலின்முதுகி வர்ந்தகுமரேசா
பறையடிசெய்வின்மறவா கொம்பின்மணவாளா
பழனிமலைமன்னனெனநின்றபழையோனே. (௯௪)

வெண்பா.

பழையகிளியென்றெற் பகர்ந்ததுண்மையானால்
விழைவனமுற் றீந்தருள வேண்டுங் — கழைமலிசீர்ச்
சாரற் பழனித் தடங்குவட்டுக் கோமானே
யாரற்பெண் ணூர்கையிற்பா லா. (௯௫)

கட்டளைக்கலித்துறை.

பாலாற்றுத்தொண்டைநன் னாட்டினுந்தீந்தமிழ்ப் பாண்டியினுஞ்
சேலாற்றுபொன்னிக் கரையினுமற்றைய தேயத்தினு
மேலாற்றுமுத்தருங் கொண்டாடச்சித்துச்செய் வீறருள்வாய்
வேலாற்றுளைத்தொர்குன் றட்டாய்பழனி வியன்வெற்பனே. (௫௬)

வெண்டளைக்கலிப்பா.

வெற்பனந்தத் தாடும் விசாகப் பெருமானைப்
பற்ப மிகப்பூசும் பாண்டரங்கன் பாலகனைக்
கற்பமிகக் கண்ட கவின்பழனிக் கண்ணிறைஞ்சி
நிற்பவருக் கெல்லா நிசஞான முண்டாமே. (௫௭)

கொச்சகக்கலிப்பா.

உண்டாட்டுக் களியும்விரித் துரனழியு மொண்புலவீர்
திண்டாட்டுப் படவேண்டாந் திருப்பழனிச் செவ்வேளை
வண்டாட்டுக் கடம்புறழ்சீர் மலிதமிழால் வாழ்த்துமினோ
பண்டாட்டும் பொருளாய பரஞ்சோதி யடைவீரே. (௫௮)

கலிநிலைத்துறை.

வீராதிவீரர்க்கொர் தலையாயவிளையோனை வீட்டென்றனக்
காராலும்விழையாத பேராசைவருவித்த தறமாகுமே
லூராருமறியச் செயுஞ்சித்தியோரெட்டு முதவாய்கொலோ
சீராரும்வையாலூர் மலைக்கோயினடுநின்ற செயவேலனே. (௫௯)

கட்டளைக்கலிப்பா.

செயங்குறித்தெழுத்தோராறுஞ்சந்ததஞ்செப்பிநாடுஞ்சிறியேற்குத்தீர்வரும்
பயங்கொடுத்தனை நீதியன்றையகோ பசுவுமற்றைய பல்லுயிர்க்கூட்ட முங்
கயங்குறக்கொடுங்கோலோச்சும்பாதகர்கார்நிமக் குடையேனுங்கழித் திடாய்
வயங்கொள்வேலொடுதண்டேந்துஞ்சேவகாமலைகுலாவும்வயலூரில்கள்ளலே

எழுசீர்விருத்தம்.

வள்ளலார்களிற் றலைவர்தந்துதல்விழி மணியெனத்தகுநீயு
மெள்ளலார்தமி யேன்றுதிக்கூலியொன் றீந்திடாதுறலேனோ
விள்ளலாப்பொருட் கிளையுமறிதர விளம்புசற்குருவாகித்
தள்ளலாப்புகழ்ப் பழனியிற்குலவுதண் டாயுதக்கரத்தானே. (௬௧)

ஆசிரியப்பா.

தானவர்கூட்டந் தகரத்தாக்கி
வானவர்பலரு மகிழ்வுறப்புரந்து
மகத்துயர்பிரம னலறப்புடைத்துச்
சகத்துயிர்பலவுந் தருந்தொழிற்பரித்துங்

தாரகன்கவரத் தயங்குபோரழி
வாரணம்புரந்தோன் மாட்டுறவமைத்துங்
கல்லாவிழற் கடவுட்குரவற்
சொல்லாற்றேற்றித் துணைப்பதஞ்சூட்டியும்
பெற்றபுகழைப் பேதையேன்பாற்
சொற்றசொற்பிழைத்துத் தொலைக்கவேண்டா
மாரன்கணைகளும் வாளுந்தோற்பப்
பாரகத்துள்ள பைந்தொடியாரினும்
பலர்க்கவர்ந்தணைந்து பழனிமலையிற்
சிலர்க்கருள்வழங்குந் தெய்வநாயகனே. (கஉ)

சந்தவிருத்தம்.

தானதத்ததன தந்ததனதந்தன.

நாயெனத்திரியு நெஞ்சொடுசுழன்றநா
ளுனிலத்தனைவ ருந்தினம்விளம்புசீர்
தோயெழுச்சிமரு வும்படிசெயன்றலோ
சூர்செகுத்தபுகழ் நன்கொளிரும்வம்பராய்
நீடியரிக்கணிலி யென்றவருமன்பர்போ
னீடுவப்புறலு வார்ந்துமிகவெம்புகேன்
வேயெழிற்பழனி யங்கிரியில்வென்றிவாள்
வீரர்சுற்றுபுவ ணங்கவளர்துங்கனே. (கங)

வெண்பா.

தங்கவேல் வீரன் றுணர்க்கடப்பந் தோட்பெருமாள்
செங்கனக மேருச் சிலையான்சே - யங்கட்
பழனி மலைக்குவட்டிற் பற்பழற்றும் போர்க்கு
மழனிறக்குன் றென்றுநின்று ளான். (கச)

கட்டளைக்கலித்துறை.

ஆனந்தவாரிக் கரைகாண வேண்டி யடுத்தவென்னை
யீனந்தருமிடி யாதியவாற்றுய ரேன்செய்கின்றாய்
தானந்தழைக்கும் பழனுபுரிக்கோர் தலைவதந்த
மானந்தக்கண்வள்ளி பங்காகலாப மயூரத்தனே. (கரு)

வெண்டளைக்கலிப்பா.

அத்த மயலா லலமந் தழலுமென்புன்
சித்த மறியநின்வாய் செப்பியவெல் லாந்தவறோ
வித்தறையி னின்னருட்பேறெய்தினரோ டென்றமைப்பாய்
பத்தர் மலிதென் பழனிப் பதியானே. (கசு)

கொச்சகக்கலிப்பா.

பதிகமொவ்வொன் ருனுல்வர் பயனனந்தம் பெறச்செய்தான்
றதியறிந்து நல்கவரு தனையனு கியநீயுந்
துதியனந்தஞ் செய்தேனைத் துயர்ப்படுத்தத் தகுங்கொல்லோ
கதிர்மதிசூழ் தென்பழனிக் கன்மலைக்கோர் காவலனே. (கூஎ)

கலிநிலைத்துறை.

வலனஞ்சுசிலைவென்றி முசுகுந்தனிகர்தொண்டர் மனநம்புசீர்
பலநின்றெனுளமென்ற மலரின்கண்மிளிர்கின்ற படிதந்திடா
யலகின்றிவளர்குன்ற முழுதுங்கொள்குகசெங்க ணரியென்றுளா
ரிலகும்பழனியின்ப முறவம்பொன்மயிலுந்து மெழின்மைந்தனே. ()

கட்டளைக்கலிப்பா.

எழில்வலம்புரிச்சங்கேந்துகையனேயென்றுபார்முழுதேத்திடவாழ்ந்துபின்
விழிகண்மூன்றுடையானெனவானிடைமேவுமாசைவிளைத்ததும்வீண்கொலோ
வழிவின்மெய்ப்புகழ்ச்சாகரத்தென்றனுலாயதுஞ்சிறிதாக்கொள்ற்பாவமோ
பழியெலாந்தவிர்க்குந்தவத்தோர்வரு பழனிவெற்பிற் பரதேசித்தெய்வமே.

எழுசீர்விருத்தம்.

தெய்யெனத்திரு வம்பலத்தாடிய சிவன்முதற்சிலராயு
மொய்யெனச்சில வாசகம்பகர்ந்தனை யொன்றுமெய்ப்படக்காணேன்
பொய்யெலாமுமெய் யாக்கவும்வல்லநின் புகழ்க்கிதோரழகேயோ
மையெலாம்பொதி தருதிருப்பழனிமா மலைமிசைவளர்வானே. (௯0)

ஆசிரியப்பா.

வானவர்கோன்பயந்த மங்கையர்க்கரசியுங்
கொளலரும்புகழ்தோய் குலச்சிறைநாயனுங்
கொல்லாவிரதங் குறிப்பார்நீதிகழ்
பொல்லாங்கொழியப் புரிதவம்புரந்தா
யிங்ஙாள்வள்ளுநர் மிணிதெனவருந்தும்
வெங்ஙாவினர்பெறும் வென்றிமுற்றொழிப்பான்
விற்படுதிரைநீர் வேலைசூழ்பாரிற்
பற்பலர்புரிதவம் பாழ்படச்செய்யேல்
செம்பதுமத்திற் றிகழ்தருபிரமா
வம்பறநான்கா வகுத்துளவாய
மறைதொறுமுகத்தில் வாய்ந்துவயங்குங்
குறையுறுமொருபொறி கொள்வாரறுவரும்
போறறுசற்குருவாப் பொருவறுபழனியி
லாற்றுசெங்கோ லணிதனியரசே. (எக)

சந்தவிருத்தம்.

தனனதந்ததன தனதனதனனா.

அரசனுங்குருவு மிறைவனுமெனவா
முதுமாபுங்கவன்வி ணவர்துயரடுமோர்
பிரபலன்கவுரி மடிமிசைவளர்சேய்
பிரமனஞ்சவொரு தரமுனிதருகோ
பரமனங்கிவிழி தருமணிவளமார்
பழனியங்கிரியின் முருகையனவனு
தாமணிந்தவயி லலதொருதுணையா
னுணர்கிலன்சரத மொழியளவலவே. (எஉ)

வெண்பா.

அலகையுடனாடு மம்மான் மகனைக்
குலவு பழனிமலைக் கோவைத் — திலக
நுதற்குறத்தி மோகனனை நோக்காத நெஞ்சா
ரெதற்குலகிற் றம்பிறந்தா ரே. (எங)

கட்டளைக்கலித்துறை.

பிறந்தீரிற்சீரியர் யாரென்றுணரிற் பிறங்கருளிற்
சிறந்தாரைச்சேர்ந்து பழனிக்குகேசனைத் தெண்டனிட்டு
மறந்தாயினுங்கொலை செய்யாவிரதம் வலிந்துபற்றி
யிறந்தார்மெய்ம்முத்திபெற் றாரென்னுஞாயநன் கெண்ணுநரே. (எச)

வெண்டளைக்கலிப்பா.

எண்ணு யிரவர்க் கெமனு மெனவுதித்துத்
தண்ணார்மதுரத் தமிழ்மாரி பெய்நபிரா
னுண்ணு மகிழ்ந்த துமைபாலென் பாருணரில்
விண்ணாடர் போற்றும் வியன்பழனி வேளருளே. (எரு)

கொச்சகக்கலிப்பா.

வேள்வியிற்செய் கொலைத்தொழிலும் வேண்டாதமெய்யடியார்
தாள்விழையுந் தமியேன்சொற் றமிழணிதற் கிசையாயோ
வாள்விழிக்குஞ் சரிபாகா மலைப்பழனி வாழ்முருகா
கோள்விளைக்குந் தீங்கொழிப்பாய் குரவணிதோட் கோமானே. (எசு)

கலிநிலைத்துறை.

மானென்றுபெறுமங்கை யுறுமேனிவிடைவேறு வடிவத்தனுத்
தேனென்றுதினைமா வருந்தித்தொழுஞ்சேய் திருத்தாள்களிற்
கானென்றுமலர்சிந்தும் வழிபாடுபலநாள் களிற்செய்தபின்
வேனென்றுபழனிக் கிரிச்சாரலிடைவைகும் விரகுற்றதே. (எஎ)

கட்டளைக்கலிப்பா

உற்றவர்க்கு முறவோர்க்குமற்றுமிங் குள்ளவர்க்கு மொருபெருந்தஞ்சமா
நற்றவப்பயன் வேட் டயர்கின்றநா ளுயினுங்கடை யாவதுளாயமோ
கற்றவர்க்குந் துறவோர்க்கும்பொன்னகர்க் காரருக்குங் களிப்பாமிரந்தருங்
கொற்றவாபழ னித்திருமாமலைக் கோயின்மேவுங் குருபரமூர்த்தியே.(எஅ)

எழுசீர்விருத்தம்.

மூர்த்திபாயிர பேதமுநீயென முன்னுமென்றனக்கான
கீர்த்திநல்குகின் றிலையிஙன் றுயர்செய்தாய் கெடுக்கவுந்துணிவாயோ
பார்த்திபக்கட வுளர்க்கிறையாய்த்திருப் பழனிமாமலைமேவுங்
கார்த்திகேயவொய யாரகெம்பிரசிங் காரகாங்கெயவேளே. (எசு)

ஆசிரியப்பா.

காங்கேயன்பெருங் கருணைவாரிதி
திங்கேழுயல்கொடுந் தீயோர்க்கியமன்
றவளவாணி தனக்கருள்புலமைப்
பவளமூர்த்தி பழனிவெற்புடையான்
கொல்லாவிரதங் குறிக்கொளுமென்னைப்
பொல்லாரிகழப் புண்செயன்முறையோ
முன்னம்வந்த முனிக்கணந்தன்னி
லென்னறிவெவர்க்கு மில்லைபோலும்
பசும்புற்கறிக்கும் பருவமுமெய்தா
நசும்புக்குருளை யு நரர்கொலுங்கொடிதுஞ்
சில்விருகங்கட் செங்குலைபிடுங்கிப்
பல்விசையிலையிற் படைப்பதுங்கேட்டுத்
தீயிற்புழுப்போற் சிந்தைநோந்துயர்
நாயிற்கடையே னடுத்தலைக்கேற்றின
ளுபவர்செய்தன வறைவதற்கடங்கா
தூயவாகாயந் தோய்தருவாணியு
மெழுகடலுடுத்திட் டிணையறுபொறைபுனை
விழுமியபாரிடை மேவியதேவியுஞ்
சத்தியப்பொருளுந் தருமதேவதையு
நத்தியின்னே நன்குற்றுணர்கவே. (அ0)

சந்தவிருத்தம்.

தனனதந்ததன தனதனதனனு.

உணர்வெனும்பெரிய பொருளினுமுயர்பே
றுள்தெனுஞ்சிதட ருடன்மகிழ்சிறியே

னிணர்ச்சொரிந்துவழி படலறிகிலேயோ
விபமிவர்ந்தெனெதிர் வரவுளமிசைவாய்
மணமலிந்தசூர வணிபுயவடிவேல்
வயவபைந்தகைய மறமகள்கணவா
பணமிருந்தபுவி மகளணிமுடிநேர்
பழனியங்கிரியி லவிர்குருமணியே. (அக)

முற்றிற்று.
ஆ - கவி - அகஅ.
வேலுமயிலுந்துணை.

---

## நவரசம்.

### வீரம்.

சிவனுதற்றழற்கண் மணியெனவுதித்துத் தேவர்தஞ்சிறைவிடுத்ததற்பின்
றவர்பிரான்வடிவஞ் சமைந்தெழிற்பழனித் தடங்கிரியுறைகுகனருளா
னெவனுலகிடத்துக் கொலைபுலையடியோ டிறமுயல்வீரமெய்தினனே
யவனடித்தொழும்பேவிழைபுநல்விதியெற்கமைத்தநான்முகன்கைவாழியவே.

### அருவருப்பு.

பிரம்பணிகரத்தாற் கயிலைகாத்தருள்சீர் பிறங்கியநந்தியம்பெருமா
னுரம்பயம்பொருந்தச் சினஞ்செயுங்குகவேளுறும்பழனியைப்புகழுயர்வா
லரம்பையர்வவிதிற் புணரவந்துறினு மருவருப்புற்றிகழ்வாரே
பரம்பரைஞானத் தினரெனத்தெளிவார் பக்குவம்பெரிதுபாரிடத்தே. (உ)

### பெருநகை.

கயிலைவைகுந்த மாதியும்வெறுத்துக் காண்பமுற்றருளெனக்கணித்துச்
சயிலமெங்கணும்போய் நடம்புரிபழனித் தலைவனேசரணெனச்சார்ந்து
மயிலுறழ்சாயற் சிறுமியர்தமது வனப்பெதிர்காண்டொறுமனப்பேய்
வெயிலிடைமெழுகொத் துருகுதல்போலும் வேறொருபெருநகைப்பிலையே.

### அச்சம்.

நச்சராவினங்கண் முழுமையுநடுங்க நடம்புரிந்தகவுமாமயிலூர்ந்
தெச்சமில்புகழ்த்தென்பழனியாதியவெற் பிடந்தொறுமுலவும்வேளிறையும்
பொச்சமார்கொடுங்கோன்மன்னரைச்செருக்காப்பொறுமையுற்றிருப்பதாற்பொலியு
மச்சமேபெரிது மற்றையபயங்க ளனைத்துமோரணுத்துணையாமே. (ச)

### கோபம்.

பூரவாகனத்தாள்கணவனுன்முழுதும் பொருடபவுணர்ந்துமெய்ப்புகழ்சால்
வீரவேற்குமான் பழனிமாமலைப்பால் விரதமாதவஞ்செய்பண் பிலராய்
மாரவேட்குடைந்து வானகம்விழைந்து மகக்கொலைசெயுமவர்மனமே
கோரமிக்கதென வுரைப்பவரன்றே குறையில்யோகுட்குறிப்பினரே. (ரு)

கருணை.

மந்திர முதலாம் பிரணவ முணர்த்தும வாய்க்குகன்பழனியூர்வாழ்த்தி
யிந்திரபதம்வேட் டசுவமாமகத்தா னினித நூநூறரையுமிகழ்ந்து
சுசந்திரவேணி பெரினுமோர்நூயிர்க்குந சதிசெயற்கிசைவுறுர்தாமே
வந்தினிப்பிறவாக் கதிதருங்கருணை வாய்ந்தநெஞ்சகத்துமாதவரே. (சு)

சாந்தம்.

பன்னகவேணிப் பரன்றருமகவாப் பழனியம்பதியில்வந்தளவி
னன்னலமவிளைக்கு மொருவனேயாவு நடத்துகின்றனெனுந்தெளிவாற்
றன்னதாணெரி யிகழினும்வெகுளாத் தகவுறுசாந்தசிந்தையரே
யன்னவாகனதேதான் மறையுமாகமமு மறைந்தபேறடையவல்லாரே.

அற்புதம்.

பலகறையொடுபல் குறடணிவாரும் பரவுதென்பழனிவேளருளா
லிலகுசீர்ப்பொதியை முனியவை முதலா மிடந்தொறும்புகுநலமெய்தி
யுலகமுற்றெ நதன் குடையிலாள்குநரு மொல்குபுநடுங்குறத்தழ்வுற்
றலகிலசித்தாட லற்புதமென்பா ரறிஞர்வேறிசைப்பரேணையரே. (அ)

சிங்காரம்.

தெவ்வொருக்கடும்வேற் குமரநாயகன்வாழ் திருப்பழனுபுரிசேர்ந்து
செவ்வொளிமணியிற் றிகழுருளெய்திச சிடர்பற்பலருயத்தேற்றி
வொவ்வொகசப் புரிறகணிநதான்போன்மடந்தையர்பலர்க்கோரேல்வையினி
லெவ்வொருகணவ னுப்புணர்தகையே யுயர்ந்தசிங்காரமாமன்றே. (கூ)

முற்றிற்று.

ஆ - கவி - கூ0உ.

வேலுமயிலுந்துணை.

---

# சித்திமாலை.

— ooo —

சந்தம்.

தனன்தனதன - தனதானு.

அமிழ்தமுதவிய கடலேபோ - லகமதறியமு னருளாலே
தமிழ்சொல்வளமைநல் கியவாறே - சகலகலைகளு மிடுவாயே
சிமிழ்கணிகரிள முலைமானூர் - திரள்கொண்மதனுமொல் கியவாகா
விமிழ்வெளருவிய மலையாணி - டிசைகொள்பழனியின் முருகோனே. (க)

தனதனத் தந்ததன - தனதானு.

பயின்மொழிச் செங்குமுத மலர்வாய்தோய்
பாவைகட் பன்றனருள் மிளையாலே

கயிலையிற் சென்றுளமதெனவான்மா
கழறன்முற் றுந்தெரிய வரமீவா
யயிலுமற் றண்டமணி தருதோளா
வருணையிற் பைங்கிளிசொல் புகழாளா
மயினடத் துங்குமர குருநாதா
மலிவளத் தென்பழனி மலையானே. (உ)

தாத்தத்தத்ததன - தனதானா.

காழ்த்தூர்ச் சித்தநிசா சரர்வானோர் -நாச்செற் கத்தொழுதா லுமெளாச்சீர்
வாழ்த்திட்டத்தொருநால் வரையேபோல்-வாக்குச் சித்தியினையருள்வாயே
தாழ்ந்தப் பட்டகுண ளரையாளாய்- சாட்சிப் பெட்பொழியா முருகேசா
வாழ்த்தித் தொட்டமுநீ ரடுவேலா- வாக்கச் சொற்பழனு புரிவேளே.(ங)

தனனதானதத்த - தனதானா.

மனிதர்வானவர்க்கு மிடர்தீர்சீர் - மருவுமாறியற்றி யடியாரோ
டினியவாழ்வுபற்றி மகிழ்கூர்வா - னிரசவாதசித்தி யருள்வாயே
கனிவுறுமனத்த றியாதாய் - கருடவாகனத்தன் மருகோனே.
பனிகுலாவுசெச்சை மலர்மார்பா - பழனிமாமலைக்கண் வளர்தேவே.()

தனனதனதன - தனதானா.

மகபதியுமம ரரும்வாழூர் - வரையும்வலிமிகு முடலோடே
ககனவழிகொடு செலுமாறே - கவனகுளிகையு மருள்வாயே
சுகமுனுவலிய புகழோனே - சுகுணசரவண பவவேளே
யகரமுதலிய பொறியானு - யணிகொள்பழனியி லமர்கோவே. (ரு)

தந்ததானன தனத்ததனதன - தனதானா.

அந்தண்மாநில வரைப்பிலுளபல நெறியோர்தா
மன்பிலாணவ முளைத்துவளர்தரு கொடிதாலே
யிந்தவேடமெ யெனக்கொடிகலிய பிழையீர்வா
னெந்தளுபமு மிமைப்பினிடைகொளும் வலியீவாய்
கந்தநாயக கனற்கண்வருதக ரிவர்வானே
கம்பமாமத களிற்றுமுகனுடன் வருபாலா
பந்தபாசமெய் தினர்க்குமருள்பொழி விழியானே
பைம்பொன்மாமதி லுடுத்தபழனியி லுறைவானே. (சு)

தந்ததனதத்ததனதத்ததனதத்தன - தந்தானா.

மந்திரமறைத்திரளு ரைத்தபொருளைச்சிறிது நம்பாராம் .
வன்கணரிருட்குடைநி ழற்றலைதவிக்குமென்ம னஞ்சோரா
வெந்திரமெனச்சுழலவிட்டவிழ்பனிச்சமய னின்றேவா
னிந்திரனெதிர்ப்பினும்வெ ருக்கொளவடக்கும்வலி தந்தாள்வாய்

சந்திரன் முடித்தசடி லத்திறைவாகட் பாரியில் வந்தோனே
சங்கொடுசக்கரமு டைக்கடவுள் பெற்றவிரு பெண்பாகா
திந்திமிதிமித திமியெ னச்சிகிநடத்திவரு சிங்காரா
தென்பழனிவெற்பின்மிசை சித்தர்பரவததினமு நின்றோனே. (எ)

தனதானதந்ததன - தனதானா.

மரமவேர்கிழங்கிலைகண் முதலாநூல்-வயினோடு நுகினறமெபா நுள்வகைதேடோர்
பிரயாசமின்றியெளி துலகூடே -- பிறர்போய்களுங்களையு நீறாய்
சுரலோகதுஞ்சரிதன மணவாளா -- சுடாவே லனிந்தபல புயவீரா
சிரமாறுகொண்டகுரு பரநாதா -- திருவாவினன்குடியில வளர்சேயே. (அ)

தனனதானன தனத்தனநதன - தனதானா.

மகியும்வானமும விடப்பலங்கத குலமவாழ்ச்சர்
மருவுமேலாகமு மெனச்சொலு பால பலகூறு
மகிலமியாவையு முயப்பெறுமபடி வடிவேலா
லசுரசேனைக ளறச்செறுநதிற மருளவாயே
சகிகளோடுறு குறப்பெணின்புற முயல்வாகா
சகளகோடியுள் வனப்புயர்நதசன் முநதேவா
பகிரதாதியர் நினைத்துயுந்திரு வருளாளா
பழனிமாமலை முகட்டினிடைபயில் குரமேவானே. " (௯)

தனதநதானன தனதனதன நன - தனதானா.

முறத்தைநேர்செவி யசைதரவருகரி மிசையூரவார்
முதற்பமேலார்களும் வெருளுறவ நுளவலி டெழுலாலே
யுறதிலாசையில் கொடியவர்கடைதொறு நுழையாதே
யுதத்தியா கிய ரவைகளின்டகிழ்நல நுளவாய்ப
திறத்தவேலுடனே சிவகுருபரசர ணமேவளே
திருக்கெலாமற விழிமலாகொடுசெயும வலியோனே
மறத்திதாள்களில் விழுமவகைபகர்தலி னளிகூரவாய்
வளத்தினுயர் பழனியில்வதிதரு மயிலோனே. (க0)

தனதானதத்ததன தனந்தானன - தனதானா.

தரைமாதுமுத்தமரு மிரங்குபாதக மிகலாலே
தகராதிவெட்டிநுகர் குணுங்கர்மிகுக வியநாயே
வரையால்வெளுத்தவுட னிரைநதுவீணினின் மடியாதே
நவநாதசித்தரொடு கலந்துவாழ்வுற வருள்வாயே
கரைதீர்சுக்க்கடலி லமுழ்ந்துமேலவர் குருநாதா
கதிர்வேலெடுத்துமயி லிவர்ந்துவான்வழி வருவானே
பரைபூண்முலைத்துணைகள் சொரிந்தபாலுகர் கனிவாயா
பழனுபுரிச்சிகரி யிடங்குலாவிய தனியோனே. (கக)

கனதனத் தத்ததா - தனதானா.

மலரிறைக துபபுனல்பெய் தலைமேபோராய்
வைந்தமொழித் துத்தவசு புரிவார்சூழ்
தலமுழங்கததிசெய் துமரிசால்
சரிதரத்திககவர மரு வாயே
கலகவிபடகதியின ருணர காய்
கனகவிபகைபுனிதர் மருபாலா
பலபலவெற்பிறகமழ மிரு தா
பழனியிற்சிததாதொழு மிளையோனே. (கஉ)

தனனதானன தானனதானன -- தனதானா.

தளதாராமல ரோதுரையேயு மருளாலே
தழனேர்வேதிய ராடுகொலாதுற வுலகாளவார்
ளாகேயூரபு யாசலநாணுற வருணீர்தோய்
கிரியாராதனை யால்விளையாடிட வரமீவாய்
களவாமேலார்குற மாதெதிர்போபடி பணிவானை
கருணாசாகர நேருமையாள் முலை நுகர்பாலா
துளவோனேயென வாழ்கவுமாக நிணையாவாய்
தீறம்வார்சூழ்பழ னுபுரிமேவிய கிழவோனே. (கங)

தனனதானதத - தனதானா.

திவாகராதியர்க்கொர் பொதுவாயே--திறைதலோவுபெட்பு முறுமேலோ
ரவாவெலாமுடிக்க வலதேயமபாரயோகசித்தி யருளவாயே
தவாதஞானசத்தி புனைமாரா -- சரோசனுவியுட்க முனிவோனே
விவாகசீடெழிறகொள் வயலூவாழ் -- விசாகவேடுவச்சி யுறவோனே.

தனனதான ததத - தனதானா.

மகரகேதனத்த னெதிராதே -- மலரினுன்வசித்து விதியாதே
பகளோனுறுக்கி வதையாதே -- பரமஞானசித்தி தருவாயே
தகர்கடாவுகொற்ற முடையானே -- சருவமோகனச்சண் முகநாதா
சிகரகோபுரத்தென் வயலூரா--திகழும்வேல்கொள்செக்கர் நிறவேளே.

தனனதன தானதத்த - தத்தானா.

பருவதமனேகமுற்ற பொற்போடேழ்
பரவையுடைதோய்புவித்த லத்தேவாழ்
சருவமதவாதருக்கு நட்பாமோர்
சமரசவிநோதசித்தி யைத்தாராய்
கெருவமில்குணாலசித்த ருட்சேர்வாய்
கிளிபகர்பல்பரடவிட்ட மற்றோளா

இடத்தசேவலொரு புயத்தின் தபுனை வல்லிரா
சிவத்தமோடமிவா புகழ்ச்சொல்பாவலரை யெள்ளாளே
சுடர்க்கணுத்பசு வனுக்கராளா பொருள் சொல்வாயா
துதிச்சொலார்பழனி மலைக்கணுளும்வளர் செவ்வேளே. (உச)

தத்ததான தனதத்த - தனதானு.

சித்தைவினமெனுமற்ப குணமேயார் -- சித்தநாளுநனிவெட்க முறுமாறே
வித்தையாவினுமிகப்பெரிய தாமோர் -- வித்துவேடணம்விளைக்க வருள்வாயே
தத்தைபாடியதமிழ்ச்சொ லணிதோளா -- சற்பமாவனவெருக்கொ ளுமயூரா
முத்தைநேர்நகையுடைக்குறமின்மோகா -- முத்தர்சூழ்பழனிவெற்பிலுறைதேவே.

தனனதான தந்ததன - தந்ததானு.

அகரமாதியந்தம்வரை கண்டமேலோ
ரடிகணுறுநுண்பொடிய ணிந்துவாழ்சீர்
சகமும்வானமும்பிலமு நமபுமாறே
சருவபேதனஞ்செய்வலி தந்திடாயோ
மகரவேலையுண்டமுனி நர்புபாதா
வனசவேதனஞ்சியழ வென்றநாதா
பகலிராவொழிந்தவெளி யின்கண்மேயாய்
பழனியூர்விளங்கவரு கந்தவேளே. (உரு)

தனனதனதானதந்த - தனதானு.

அசியணியும்வீரர்சங்க நடுவேயோ -- ரழகியமயூரமென்ற பரிமேலே
பசியபிணையோதிமங்கொ டெதிராயே -- பகைமுழுதுமாரணஞ்செய் திறமீவா
யொசியுமிடைநீவிதந்த வரபாலா -- வுலகளவுமாயனன்பு மருகோனே
யிசியுமுகவானரங்கொள்பொழில்சூழ்சி -- ரிலகும்வயலூர்புரந்தவிறையோனே.

தாந்ததானதன - தனதானு.

தாண்டியேறுமயி றடிகூர்வே -- ருங்குசேவன்முத லியசீர்தோ
யாண்டிவேடமொடெ னெதிராயே -- யாண்பெண்மாறும்வலி யருள்வாயே
பாண்டிநாடுயமுன் வருபாலா -- பாண்செய்மாமுனிசொல் வழிபோலும்
மாண்டிடாவமரர் பணிபாதா -- மாண்புசேர்பழனி வரையானே. (உசு)

தனதானுதனன - தனதானு.

கிரிவாழ்வார்ககன வழிபோவார் -- கெடநீர்யோகநிலை யறிவார்நேர்
பெரியோரேயலது மயனேய்தோய் -- பிறர்காணுதவவு திறமீவாய்
வரியார்தோலுடைகொள் பவர்பாலா -- மயின்மீதேயுலகை வலமாவாய்
கரியோன்வானவர்மு னுவல்சிலா -- கதிர்வேலாபழனி வரானே. (உஎ)

தனதன்த்ததந்தந் - தன்தானு.

மகமதிற்கொல்வம்பூந் தொலையாநாண்
மருவுமுத்தியுந்தன் பெறுமாறேனு

சுகமெனச்சொனின்றன் சொன்மெய்யேன்மா
　சொருபசித்தியுநந் தருள்வாயே
ககனநட்பர்நம்புஞ் சிறுதாரா
　கதிராயிற்கொளுஞ்செங் கைவிசாகா
பகரமிக்கடபபஞ செய்குணலா
　பழனிவெற்பிடங்கொண டபிரானே. (௨எ)

தனதனதானதத்த - தனதான.

அளிமலிதாதகித்தொ டையல்போலே யரனடியார்மதிக்கு மதிசீர்தோய்
களிர்திருவாசகப்பு லவனலே நரிபரியானநுட்ப நவில்வாயே
இளிபகர்பாடலிட்ட பலதோளா கிளையொடுசூரனைக்கொல் வடிவேலா
தளிர்புரைதாண்மறத்தி மணவாளா தமிழ்வயலூர்புரக்கு மிசையோனே. ()

தந்ததன்னதத்த - தத்தான.

வன்சொலொன்றூர்நகைப்பமுற்றுழ்வான்வஞ்சமெண்ணதபத்திபொய்த்தேகா
தின்சொலநராளுரைதநவற்காவா லென்புபெண்ணனவித்தை தைத்தாராய்
மென்சொல்விண்ணனைமைக்குயிற்சேர்வாய்மின்செய்பொன்வேலணைத்தமற்றோளா
தென்சொல்வண்ணபுலிப்பரிக்கார்நேர் தெம்பனண்ணடல்வெற்புடைத்தவே.

தனனத்தன்ன தந்ததானனத் - தானன.

வெயினட்பின்ம லர்ந்ததாமரைத் தேவுளார்
　வெருகுற்றம்வி ளம்பிமாய்வுறப் போமநாள்
கயிலைப்பண்ண வன்றன்வீறுரைத் தானொடே
　கடவிற்கன்பி தந்தவாறுரைத் தாளேயோ
சயிலத்தின்மு னைந்தவானவர்ச் சாடினய்
　தழலிற்பொன்னில் வந்தவாமகைத் தாடினய்
பயில்சொற்கன்னி கொங்கையேனலிற் கூடினய்
　பழனிக்கண்ண மர்ந்தகோமளத் தேவனே. (௩௦)

தனனதந்தன தந்தன - தனன.

அனையழுந்துயர்த விர்ந்துமகிழ் வுறவா
　னமரரும்பிறக ணங்களும்வெள் கிடவே
முனைமலிந்தபல வெண்பனிரை நிறைவாய்
　முதலையுண்டசிசு வந்தவித மொழிவாய்
தினைவனந்தனிபு ரந்தமகள் கணவா
　சிகரியெங்குமுல வும்புலவர் துணைவா
பனைநெடுங்கைமத தந்திமுக னிளையாய்
　பழனியங்கிரியு றைங்குமர குருவே. (௩௧)

தனன தந்தனத் தாத்தனத்தன.

எழுதுசெந்தமிழ்ப் பாட்டுரைத்ததா லிருமரந்தழைத் தேற்றமுற்றதோர்
கழுமரந்தனிற் றீப்பிடிக்கைநேர் கதைகளுங்கண்முற் பார்த்திடச்செய்வாய்
முழுதுணர்ந்தமெய்க்கீர்த்திபெற்றவா முருடமங்கைசொற் கேட்குநட்புளாய்
பழுதிலந்தரத் தூர்க்கொர்கத்தனே பழனியின்புறக் காக்குமப்பனே. (கூஉ)

தப்பதான தந்ததன - தானன.

மெய்வழாத சிந்தையாளர் நீதிநூல் விள்ளுவாரை நன்குதவும்விறுதோய்
கைவலாளரை வெந்துயர்செய்தீமைசால் கள்வர்யாரை யுங்கறுவுசீர்நல்காய்
வைவதாய செந்தமிழ்மோவிடாய் வள்ளிமாது குஞ்சரிமணாளனே
தெய்வநான்முகன்கதறமோதிறைப் செல்வவாவி னன்குடிவிசாகனே. (கூக)

தத்ததானதந்ததன - தந்தன.

கட்டமீறி நொந்துளம்வெதும்பியே கத்துவேனை யிந்திரர்வியந்துபே
ரிட்டநாட வெண்கடன்முருந்தன ளெட்டுமாத ரும்புணர்நலஞ்செய்வாய்
வட்டமாநி லம்பெறுபல்குன்றுளாய் மச்சகேத னன்பரவுடம்பனே
விட்டவேல்செ யங்கொடுபுன்மொய்ம்பனே மிக்கவாவி னன்குடிவிடங்கனே.

தந்தத்தனனதனத் - தனதான.

அந்தத்திருமதுரைப் பதியூடே யன்றப்புலவர்வசித்ததுபோலே
சந்தக்கவிஞரிருக் கவிநாளோர் சங்கைப்பலகையெனக் கருள்வாயே
பந்தக்கவலையொழிக் கவலானே பைம்பொற்கலபமயிற் பரியூர்வாய்
சொந்தக்கலசமுனிக் கருடேவே துங்கப்பழனிமலைக் குரியோனே. கூ௫

தனனதனதானதானதந்த - தந்தான.

அமரகுலதீப மானவிந்திரன் சேயுய்வாழ்
வதுவுமிழிவேயெ னுவிசுழ்ந்த பண்போர்தேர்
சமரசசுபாவ ஞானசங்க ரன்போலே
சரசுவதிபீட மேறும்வென்றி யுந்தாராய்
குமரகுருநாத சேவனின்ற திண்டோளா
குலகிரிகடோறு மாடுகின்ற மென்றாளா
பமரமுரனீப மாலைகொண்ட சிங்காரா
பழனிமலைவாழ மீதுவந்த மர்ந்தோனே. (கூசு)

தனத்தனந்தனன தனதனத்தந்தன - தனதான.

மருட்பொலிந்துபுலை மகமியற்றும்பனவர் மதிகார்மா
வதைத்தருந்தியல கையைமதிக்கும்பதித ரீனர்நேர்
குருட்டுநெஞ்சசட ருடனிரத்தங்கடலில் விழுமாறே
கொலைக்கணங்கண்முழு மையுமழிக்குந்திறமை தருவாயே

திருட்டுவஞ்சப்புரி பணிகள் பசி மைதபகிழ் வடையானே
திணைப்பெருமபுனம தனிலவசிக்குங்குறமன் பணவாளா
தெருட்டு செந்தமிழ்சொல் முறு மூவர்க்கன்றருள்செய்குருநாதா
செழிப்பரும்பழனி மலையினிற்றமாடமோடு திகழ்வமேன. ()

தப்யத்த தனத்த தந்தன தனன - தய்யானு.

தில்லைச்சிற்றம்பல கன்றங்குலைபத்தாய பெய்த தோ
தெய்வந்தசகண்ணர் கொடைநிந்தி ப்பணிகள் செய்வோரே
மல்லைநற்றமிப செங்குன்ற நிபமெபருசில சொர்வீறே
வள்ளிச்சிந்திரப் பெண்கண்டிசைதத குறி பொய்யாதா
வல்லைசசெழுமெறிற் குன்றென்மெறு ச்சிகொடு தொய்யாதாய்
வள்ளச்செய்யைபொக் குங்கொங்கையுத்தமிகை புல்பா
கல்லைபொறபதத தொன்றும்பல்புட்பமென கள்வானே
கல்விபபத்தர்மிக் கொன்றுந்தமிழ்ப்பழனி யுள்ளானே. (௩அ)

தானத்தனனதத்த — தானு.

ஞானக்கருணைவைததெ னேரேயாய் நாபிக்கமலமுத்தன் வாழ்வியா
மானக்குறைவெனப்பல் பேர்தேர்மா மாயைக்கவலைமுற்று மீவாயே
கானக்குறவர்பெற்ற மான்மோகா காமக்கணைமிகக்கொண் மார்பாளா
தீனத்தரபுருச்செய் தாடாளா சேமப்பழனிவெற்பின்மேலோனே()

தன்னன தானனந்தத்தன தன தன - தத்தானு.

பன்னகபூடணன் பொற்புறுபொதியம லைக்கோனேர்
பன்னுநலோர்கண்முன் பெற்றுளபிரவைவ வித்தாலை
தன்னறிவாகலந் துற்றிடவருள்செய்தி கத்தேவாழ்
சண்மதவாணருஞ் சற்குருவெனுநிலை யெற்கீவா
யன்னமுமானைவென் றிட்டொருகுகையில டைத்தோனே
மைஞ்ஞிமார்சிகண் டிப்பரியிவர்பெரு மைக்காரா
சின்னமதோடுசென் றற்புரைசமணரை யட்டோனே
தென்னையும்வாழையுஞ் சுற்றியபழனிந கர்த்தேவே. (௪0)

தானன தானந்தந்தன தானன - தனதானு.

ஆதவனூடுஞ் சந்திரனூடுநி னருடோய்வி
ருயுணர்வாலென் றுந்தொழுவேனெதிர் மயின்மேலாய்
வேதவியாசன் சங்கரமாமுனி முதலோர்போன்
மேதகுசீர்தங் கும்பொதுவாழ்வுற விடுவாயே
காதளவோடுங் கண்கொளும்வேடமின் மணவாளா
காலனைமோதுந் திண்கழலார்பெறும் வரபாலா
சீதரனேதுஞ்சிசம்புகழ்கோடிகொள் குகவேளே
செல்வளர்சீர்மிஞ் சும்பழனுபுரி பிரியானே. (௪௧)

தனா னா தந்ததன தனந்ததனதன - தனதானு.

இதயமொன் றுபட நினைந்துமிகமுய றவசாலே
யிகபரங்கடமை யிகழ்ந்துநிசகதி யுறுமேலோர்
கதைபனந்தரனி விழைந்தவெனதுகை துணிவாலே
கனலொடம்பினிடை யெறிந்தமிழ்முழ தருள்வாயே
வதைபுரிந்துறுகா குணுங்கர்மனவெளி மறவானே
மறைடக்கைபர ணரிந்தநரைமலி முதியோனே
விதையெனும்பிரம மொழிந்தகுருபர முருகோனே
வியன்மலிந்தபழ னியினகண்வதிதரும் விறலோனே. (சஉ)

தனதனுதந்ததனதன - தந்தானு.

தபுதபீர்சிந்தைவலியுற வன்றேநீ தனியனுவந்துறுவன்மொழி வம்பாமோ.
விபுதநேர்மங்கையரையும்விழைந்தாய்வேன்விடையவானந்தசையறவென்றுள்வாய்
சிபுகவேர்மிஞ்சுகுறமகணண்பாளாசிவனுமாலும்பொனிறவிதியுந்தோய்வாய்
குபுரவாசஞ்செய்முருடருநம்பார்வாகுறைவில்சீர்தங்குபழனியில்வந்தோனே.

தனதனந்தானதனதானனந் - தய்யானு.

அழிவில்சண் டேசுரன ஞர்கணம் புல்லேனே
வருணையின் சாருவென நீசொலுஞ் சொல்வீணே
பழிபிறண் டாயுதமும் வேலுமிங் கெய்தாவோ
பலிகொளுந் தேவதைக ளியாவையுங் கொல்லேனே
கழிமுரண் டானவர்கள் சேனையஞ் சொள்வேலா
கனககும் பாகரத ஞசலம் புல்வாகா
விழிமலிந் தானுதவு பாவையன் பொல்வானே
வியன்வளந் தோய்பழனி யூர்வருஞ் செய்யோனே. (சச)

தனதனதனந்தனன தானதனதந்ததன - தானுன.

தமனியநி லம்பெணொனு மேடணைகள் வந்துநனி சூழாதே
சகலசம யங்களுநி ணுடலென நாப்புமதி தேயாதே
யிமகரனி ருந்தசடை நாதனொடு கும்பனென நான்வாழ்வா
னெமன்முதனி கழ்ந்தவிக லோரினக டுங்கும்வலி யீவாயே
குமரகுரு புங்கவகு கேசனென விண்டுபணி வார்பாகா
குளிர்மதிபு ணர்ந்தவுடு வாறுதவு கொங்கைநுகர் சீர்வாயா
பமரமுரல் பைங்குவளை யாதியபு னைந்தவிரு மார்பாளா
பழனிமலை யின்றலைவி ளேர்குலம்வ ணங்கவினி தாள்வானே. (சரு)

தானதானதன தானதனதானதன - தனதானு.

ஆலைநீரனைய வேலைபர்கொடைநாடுதலி னயராதே
யாவியேபரமெ னுவிகனுமூடரொடு பழகாதே

மேலையூர்மகளிர் போகவநுராகமிக மெலியாதே
வேதவாகமபு ராணவிதிகாசபய னருள்வாயே
சோலைசூழருணை மேயகிளிபாடல்பல புனைவானே
சோமசேகரபு ராரிசெவியூடொருசொன் மொழிவானே
காலைமாலைநடு நேரநினைவார்களிடர் களைவானே
காவிரீர்வயல்கு லாவுபழனுபுரியின் மகிழ்வானே. (சசு)

தந்ததந்தனதத்தன - தனனதானு.

அங்கைமென்றுணர் நித்தமு மிடுதலாலே
யன்புமிஞ்சிய ருட்செயன் மருவிடாதே
சங்கைகொண்டித விப்பது மறிகிலாயோ
சஞ்சலந்தவிர் மெய்ப்புக ழுதவுவாயோ
கொங்கைமங்கையர் பற்பலர் விழையுமார்பா
குங்குமம்புனை பொற்புறு குமரவேளே
கங்கைதந்தருள் புத்திர முருகநாதா
கந்தியம்பொழில் சுற்றிய பழனியானே. (சஎ)

தனந்தாத்ததத்தன - தனனதானு.

எனக்காச் செனத்துணி வுறுபொலார்வா
யிருட்டைச் சொலிற்றளர் வடையுநாயேன்
வனக்காட் டைடயொக்குமி வுலகில்வாழ்வான்
மனச்சாட்சி மெய்ப்பட வருள்செய்வாயே
கனக்கார்த் திகைத்திரண் முலையுண்வாயா
களிற்றேற்ற வித்தையி லுயர்செவேளே
தினக்காட்சி யுத்தமர் பழனியூர்வாய்
சிலைக்கோட்டி னிற்றிகழ் சிறுபிரானே. (சஅ)

தனதனதந்தனத்தனந்தா - தனதானு.

எரியெதிர் கொன்றுணத்துணிந்தார் பகைதீரா
வெனையுல கஞ்சொலத்தொடர்ந்தாள் இலையேனு
பரிமுக மைந்தனுக்கும்வண்பே றருளாயோ
பரிதிய நிந்தசத்தியம்பாழ் படலாமோ
சரியணி செங்கையத்திமென்றோள் புணர்கேள்வா
தழலுமிழ் தந்தமுத்தர்தம்பா லகுமாரா
புரிசைவ ளைந்துடுத்தசெஞ்சீர் வயலூரா
புலவர்கு லந்தொடுத்திடும்பா டல்கொள்வானே. (சகூ)

தனதனதத்தன - தந்தனதானு.

அருமைமிகப்பெறு செந்தமிழ்நாயே னறைதருமத்தின மிஞ்சருளாலே
திருமலிவுற்றில கும்புலியூர்வாழ் சிவனுவல்சொற்றிக ழும்படியாள்வாய்

கருதலரைக்கறு வுங்குணசிலா கதிநிலையைப்பகர் சம்பிரதாயா
பருவதபுத்திரி தந்தருள்பாலா பழனிமலைத்தலை நின்றசையானே. (௰)

தனதனதத்ததத்தன - தனனதான.

சனகன்மு தற்சொல்சற்சனர்கு ரவன்மேனுள்
சமர்செய்மு ரட்குணத்திருவ ருயவாமோர்
கனல்வரை யிற்கடுத்ததுசெ யருணீர்தோய்
கவுரியு ரைத்தசொற்பயன ருளிடாயோ
தினகரர் வெட்குறத்திகழ யில்விசாகா
சிவசமு யத்தருக்கினிய குருநாதா
பனகவ ணைப்படுக்கையன்மகளிர்பாகா
பழனிம லைத்தலத்துறைகு மரவேளே. (௰க)

தந்தனத்தனன - தானனா.

இந்திரற்கிடர்கள் வாராமே யெண்டிசைப்புவனி தாழாமே
வெந்திறற்றருவர் வாழாமே விண்டுசொற்பலித மாகாதோ
சந்திரச்சடில னார்பாலா தண்டமிழ்ப்புலவர் கோமானே
செந்தினைப்புனமி னாள்கேள்வா தெண்புனற்பழனி யூர்வாழ்வே. (௰உ)

தனதனதத்தன - தானனா.

குருபாதத்துவ மோராதார் குலைவுறுசித்தியல் சேர்வாழ்வே
கருதுமனக்கரி யானானோர் கணபதிசொற்பய னோராதோ
வருமறைவிப்பிரர்சூழ்தேவா வருணகிரிப்புல வோனார்வா
பருமுலையத்திமி னாள்பாகா பழனிநகர்க்கர சானனே. (௰௩)

தந்ததந்ததன - தந்தான.

தந்தை யுந்தொழும கிழ்ந்தாடேர் தண்டை யங்கழனிணீந்தார்வாய்
நிந்தை யும்புனைத ருந்தேவா நின்சொ லொன்றுநிச மன்றேயோ
சிந்தை யங்கணறி சிங்காரா தெம்பு மிஞ்சிவரு சந்தோடர்
வெந்தை யென்றிசைவு றுஞ்சேயே யெங்கடம்பழனி யின்கோவே. ()

தத்தானன தானனதானன - தன்தான.

சித்தேயருள் வாழ்வெனநாடுமெ ருடல்வினை
செத்தாவிழி வானதுன்மேன்மையி லமையாதோ
வெத்தேவரு நீயெனநாடுதல் பிழையாமோ
விப்போதடி யேனெதிர்தோகையில் வருவாயே
முத்தேவர்ப ராவியசேவக முடையானே
முற்றாமுலை வேடமினாளொடு திரிவானே
புத்தேளிரெ லாம்வழிபாடுசெய் சிறுதாளா
பொற்பார்பழ னாபுரியூரிடை பொலிவானே. (௰௫)

தானதானத் தனதானன - தய்யானு.

வேறுகாயப்பிரவேசர்தமெய்கிழேவிழில்விடெட்டரிதேதமெனுமெய்தேர்வே
றுறுபூவிட் டுனதாள்களையுள்சீர்தா னுலுபேறுற் றளிகூர்வகைசெய்யாதோ
தாறுமாறுற்றபொய்வாதரையென்வானேதானமால்வெற்பொடுமொல்லைரகோல்வேலா
சீறுசேவற்கொடிபாடுநர் சொல்விழ்வாய் சீலஞானப் பழனுபுரியையாவே.()

தனத்தத்தன தானனத்தனனந் - தனதானு.

இனித்திட்டசொன் மாதரிச்சையினேருந் துழனுயே
னிகத்துக்கொரு தேவெனத்தருமொய்ம் புறுமாறே
யனித்தத்துவ மோருமெய்த்தகவுங் குறிசோரா
வவத்தைப்பிர யோகசித்தியதுந் தருவாயே
பனித்துச்செய தானவப்படைகுன் றிடமேனுள்
பகைத்துப்பொரு தூதனுப்பிமகிழ்ந் தவிசாகா
செனித்துத்தவி யாதமுத்திதருங் குருநாதா
திருத்தப்பழ னுபுரிக்கிறையென் றவிர்வானே. (௬எ)

தனத்ததானதத்ததனதன - தய்யானு.

அருத்தவாதம் விட்டுனருளினை யெள்ளாதே
யனைத்துலோக சித்தர்களுநனி சொல்பேறே
கருத்திறனுடி நிற்குமெனதுயி ரொல்காதே
கலைக்கியான சித்திமுழுமையு நல்காயோ
விருத்தவேடர் மிட்டொர்கொடியெதிர் செல்வானே
வெருட்டுகோர மிக்கதகரிவர் வல்வீரா
பருத்தமாமு லைப்பெணினமகி ழொய்யாரா
பழுத்தசீர்பொ றுத்தபழனியி னல்லோனே. (௬அ)

தானன தந்தனதானதனத் - தனதானு.

தாதார்க டம்புறம்பாடறுடுத் தணிவேனோ
தானேவ வந்துனதாள்பகர்சொற் பழுதாமோ
நீதான்வி ரும்பிலையாயினினிச் சைகொள்வேனோ
நேரார்க டுங்குறுமாண்மைபெறத் தருவாயே
சீதார்க ருங்கண்மனோன்மணிபெற் றகுமாரா
காவேரி தந்தவிநாயகனுக் கிளையோனே
தீதாளர் கண்டறியாதசெயற் பொலிவோனே
சீராவி னன்குடிமேவியசிற் பரவேளே. (௬௯)

தந்ததானன தாத்ததனதன - தய்யதானு.

பண்டைநாளொரு தீர்க்கதெரிசனை யுள்ளமூடே
பைம்பொன்மாமயின் மேற்கொடருளிய துள்ளதானு

